உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மேலைச் சிதம்பரம்

எனனும்

# பேரூர்ப்புராணம்.

இஃது,

திருக்கைலாசபரம்பரைத திருவாவடுதுறை

ஆதீனத்து

ஸ்ரீ கச்சியப்பமுனிவரர்

மொழிபெயாத்தருளியது.

ஷ பேரூரத தேவஸ்தானததாரால,

மதுராபுரிவாசியாகிய

இ. இராமசுவாமிப்பிள்ளை என்று வழங்குகின்ற

ஞானசம்பந்தப்பிள்ளையால்,

பலபிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதிப்பித்து,

சென்னைநகர:

சி. கோ. அபபுமுதலியார முதலினரது

ஸ்ரீரஞ்சநி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

தாரண௵ சித்திரைமீ

இதன் விலை ரூபா (கக)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பேரூர்ப்புராண விடயசூசிகை அகராதி.

ஆகப் படலம் ௲எ - க்கு பாடல் உஉஉ0.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீகச்சியப்பமுநிவரர் சரித்திரச் சுருக்கம்.

இந்நூலாசிரியராகிய கச்சியப்ப முனிவரர், சற்றேறக் குறைய நூற்றைம்பது வருஷத்திற்குமுன், தொண்டைமண்டலத்திலே, தணிகைத் திருப்பதியிலே, காஞ்சீபுரத்துப் பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே, அபிஷிக்தர்மரபிலே அவதரித்து ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களோடு வளருவாராயினர்.

பின்பு தந்தை தாயர்களாலே தக்க பிராயத்திலே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று, சிறிது கல்வி கற்ற வளவிலே, அக்கச்சியப்பமுநிவர், சிவக்ஷேத்திர யாத்திரை செய்யத் தொடங்கி, தொண்டைநாட்டிலுள்ள சிவஸ்தலங்களெல்லாந் தரிசித்துக்கொண்டு, சோழநாட்டிலே ஸ்ரீசிதம்பர முதலிய திருப்பதிகளைத் தரிசித்தார். பின்னர் ஸ்ரீஞானக்கோமுத்தியாகிய திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, திருக்கைலாச பரம்பரைச் சித்தாந்த சைவபாநுவாகிய ஸ்ரீநமச்சிவாய மூர்த்திகளைத் தரிசித்து, திருவருணோக்கஞ் சித்திக்கப்பெற்று, அப்பொழுது அத்திருமரபிற் சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானசாரியராகிய பின்வேலப்ப தேசிகரை ஒடுக்கத்திலே போய்த் தரிசித்து, பேரன்போடு வணங்கினர். வணங்கிய பின் அந்த ஞானதேசிகரிடத்தே, சமயதீக்ஷையும், விசேஷ தீக்ஷையும் பெற்று, சிவாச்சிரமத்திற்குரிய துறவறத்தை அடைந்து, நிருவாணதீக்ஷை பெற்றுக்கொண்டனர்.

அங்ஙனந் தீக்ஷைபெற்ற கச்சியப்ப முநிவரர், அகத்திய மகாமுநிவர் வரத்தினுற் பாண்டிவளநாட்டிலே அவதரித்து, எளிதிலே வடமொழிக்கடலுந், தென்மொழிக்கடலுங் கரைகண்டுணர்ந்து, அவ்வேலப்பதேசிகராகிய ஞானசாரியரிடத்தே, அநுக்கிரகம் பெற்று, மெய்யுணர்வின் முற்றுப் பேறு

டையராய், சித்தாந்த சைவ சிவஞானபோத திராவிட மகா பாஷ்யகர்த்தராய் எழுந்தருளியிருந்த சிவஞானயோகிகளை வித்தியாகுரவராகக் கொண்டு, அம்மெய்ஞ்ஞான முநிவரிடத்தே, தென்மொழியிலே, பல இலக்கணங்களும், இலக்கியங்களுந், தருக்கமுஞ், சிவஞானநூல்களாகிய மெய்கண்டசாஸ்திரம் பதினன்கும், பண்டாரசாஸ்திரம் பதினன்கும், மற்றும் பலநூல்களும் ஓதியுணர்ந்து, கல்வி கேள்விகளில் வல்ல மகா வித்துவானெனப் பெயர்பெற்று, அச்சிவஞான யோகிகள் மாணுக்கர் பல்லோ ருள்ளுஞ் சிறந்தவராய் வீற்றிருந்தார்.

இவரது வாக்கு வல்லபத்தையும், பிரசங்க சாதுரியத்தையும் புகழாதார் இல்லை. இவர் செய்யுளியற்றும் விரைவு நெட்டுருப்பண்ணிய பழம் பாடம் ஒப்பித்தல்போல் இருந்ததென்று சொல்லுவர். இதுமட்டோ! காலம் இடங்கட்கேற்பப் புதிது புதிதாக யுக்திகள் வேண்டிய வண்ணம் அவரது திருவாயினின்று தோன்றிக்கொண் டிருக்குமானல் அவர் பெருமை இத்துணைத்தெனச் சொல்லற்பாலதா?

பின்பு கச்சியப்ப முநிவர் சிவபெருமான் அப்புலிங்கமூர்த்தியாக எழுந்தருளியிருக்கப்பெற்ற திருவானைக்காவில் அமர்ந்திருந்தபொழுது, திருவானைக்காப் புராணமும், பூவாளூர்ப் புராணமும் மொழிபெயர்த் தருளினர்.

பின்னர்க்கொங்கநாட்டிலே, விராட்புருடனுக்கு விந்துஸ்தானமாய், சிவபிரானலே படைக்கப்பட்டதாய், தக்ஷிண கைலாசம், பிப்பிலாரணியம், மேலைச்சிதம்பரம், ஆதிபுரி, தவசித்திபுரம், பத்திபுரம், ஞானபுரம், வன்மீகபுரம், மேருபுரம், தேனுபுரம், பசுபதிபுரம், குருக்ஷேத்திரம், பிறவாநெறித்தலம் முதலிய பல தெய்வீகமான ஹேது நாமங்களையுடையதாய், தேவர் அசுரர் முநிவர் முதலிய அநேகராலே பூஜிக்கப்பட்ட அளவில்லாத சிவலிங்கங்களையுடையதாய், காஞ்சிநதி, கந்ததீர்த்தம், சக்கரதீர்த்தம், பிரமதீர்த்தம், காலவதீர்த்தம் முதலிய பல திவ்ய தீர்த்தங்களை யுடையதாய் விளங்குந் திருப்பேரூருக்குக் கச்சியப்ப முநிவரர் சென்று, அங்கே சிலகாலம் வசித்தபொழுது, மூர்த்திதலதீர்த்தங்களா

கிய மும்மைச் சிறப்பும் பெற்று, இம்மை, மறுமை, வீடுபே றென்னும் மும்மைப் பயனும் தரத்தக்கதா யிருத்தலையும், மற்றெந்தத் தலத்திலும் இயற்றும் பாவம், திருவிடைமரு தூரிலும், அத்திருவிடைமருதூரில் இயற்றும்பாவம், இப்பே ரூரிலும் தீருமென்பதையும், பிரமகுண்டமாகிய திருநீற்று மேட்டிலுள்ள விபூதியை அணிவோர்க்குப் பிரமராக்கதமு ம், மலடும், நோய்களும், இடர்களும், பாவங்களுந் தீர்ந்து, இகமும் பரமும் வீடுங் கூடு மென்பதையும், பிறவாப்புளி, இறவாப்பனை முதலிய பலஸ்தல விம்மிதங்களையும், சோதி விருக்ஷம், சிலாநதி முதலிய பலபருவத விம்மிதங்களையும், சிவபெருமான் அப்பேரூரின்கண்ணே, அரி பிரமராதியோர் க்கு ஆனந்ததாண்டவஞ் செய்துகாட்டிய இரசதசபையிலே, விராட்புருடனுக்கு இருதயஸ்தானமாய் விளங்கும் ஸ்ரீசிதம் பரத்தின் கண்ணதாகிய கனகசபையிலே, பஞ்சகிருத்திய திருநிருத்தஞ் செய்தருளுந் திருக்கோலத்தைப் பரமாசாரிய ராகிய சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் காட்டக் கண்டு வணங் கிப், பேரானந்தப் பெருங்கடலின் மூழ்கி, மீண்டு, ஸ்ரீசிதம பரத்தை அடைந்து, சபாநாயகரை நமஸ்கரித்து, "மடித் தாடு மடிமைக்களன்றியே" என்னுந் திருப்பதிகம் பாடி அதிலே, "பாரூருமரவல்குலுமைநங்கை யவள்பங்கன்பை ங்கணேற்ற - னூரூரன்றருமனூர்தமர்செக்கிலிடும்போதுதடு த்தாட்கொள்வா - னூரூரன்றம்பிரானூரூரன்மீகொங்கிலணி காஞ்சிவாய்ப் - பேரூர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத் தேபெற்றாமன்றே" எனறு, அந்நாயனார் சபாநாதரைத்திரு ப்பேரூரிலே கண்ட நிலைமையைச் சிறப்பித்தருளிய அற்பு தத்தையும் பற்பல முறை உற்று நோக்கி ஆனந்த வெள்ளத் தில் அமிழ்ந்திக் காலந்தோறும் சுவாமி தரிசனஞ் செய்து கொண்டு திருவருட்செல்வராய் வீற்றிருந்தார்.

அப்போது, சிலகாலம் மழையில்லாமையால் வெப்ப மிகுதிபற்றி, ஜனங்கள் தாகசோகங்களுற்று வருந்துவதை நோக்கித், தெள்ளியோர் உள்ளமே போல வெள்ளியம்ப லத்திலே, ஆனந்ததாண்டவஞ் செய்தருளியகாலத்து, ஆட லின் வேகத்தால் அருமைத் திருமேனியில் ஆபரணமாக அ

ணிந்துள்ள அரவங்கள் விடத்தை யுமிழ்ந்ததனுற் றேவராதி யோர்க்கு உளவாகிய தாக சோகங்களைத் திருமுடிக்கண்ணதாகிய கங்கையைக் காஞ்சிநதியாகச் செல்லும் வண்ணம் ஆஜ்ஞாபித்து மாற்றியருளிய பொருண் முதலியவற்றை அடக்கி அரசம்பலவாணர்மீது பெரிதும் அருமையாகிய ஓர்பிரபந்தம் பாடி மழை வருஷிக்கச் செய்து, ஜனங்களுடைய தாக சோகங்களைமாற்றினுர். பின்னும் பட்டீசர்மீது பலபதிகங்கள்பாடிப், பலருக்குக் குட்டநோய் முதலியவற்றைப் போக்கி மற்றும்பல அற்புதங்களையுஞ் செய்தருளினுர்.

இந்தஸ்தலத்தின்மகிமைகளை உலகத்தார்பலரும் உணர்ந்துய்யும்படி திருவுளங்கொண்டு, சொற்சுவையும் பொருட்சுவையும் இனிது விளங்கும்வண்ணம், காலம் இடங்களுக்கேற்ற அலங்கார அமைதியோடு இப்பேருர்ப்புராணத்தை மொழிபெயர்த் தருளினுர்.

அதன்பின் திருத்தணிகையை அடைந்து, ஆங்கே சில காலம் வீற் றிருந்து, இயற்றமிழ்ப் போதகாசிரியர் விசாகப்பெருமாளையர் வித்துவான் சரவணப்பெருமாளையர் இருவருக்கும் பிதாவாகிய கந்தப்பையர் முதலாயினேர்க்குக் கல்வி கற்பித்தருளினுர். அப்போழ்து, பலவித்வான்களும் தமிழிற்குப்புறச்சமயியாற்செய்யப்பட்ட சீவகசிந்தாமணியைப் பேரிலக்கியமாகக் கொண்டாடுதலைச் சிந்தத்திலே கொண்டு, அதினும் மாட்சிமைபெறத் திருத்தணிகைப் புராணத்தை மொழிபெயர்த் தருளிச்செய்தார். சொல்வளம், செய்யுணடை, சந்தம், பொருட்சுவை யென்னும் இவைகளிலே, தமிழ் மொழியிலுள்ள எந்த இலக்கியமும் இதற்கு மேம்பட்டிலதென்பது அப்புராணத்தை ஒதியுணர்வோர்க்கு எளிதில் விளங்கும்.

தம்மாணுக்கரிற் சிறந்தவராகிய கந்தப்பையருக்கு வயிற்றிலே ஓர் குன்மநோ யுண்டாயபொழுது, தணிகையாற்றுப் படையைப்பாடி, அவர் நோயை மாற்றியருளினுர். அதனுன் அவர் சிவத்தியான வுறைப்பிற் சிறப்புடையரென்பது தெள்ளிதிற் புலப்படும். மற்றும் திருத்தணிகைப் பதிற்றுப்

பத்தந்தாதி முதலிய பிரபந்தங்களும் அங்கே இருந்த பொழுது இயற்றினர்.

பின்பு சென்னைமா நகர்க்குச்சென்று அங்கே சிறிதுகாலம் வதிந்தார். அப்பொழுது அவ்விடத்துப் பக்த ஜனங்களும், பிரபுக்களும் வேண்டிக்கொண்டபடி விநாயக புராணம், சென்னைவிநாயகர் பிள்ளைத்தமிழ் முதலியன இயற்றி, அவர்கள் அடியுறையாக இரண்டாயிரம் வராகனிட அதைக்கொண்டு திருவாவடுதுறையில் ஆதீன பரமாசாரியராகிய ஸ்ரீநமச்சிவாய மூர்த்திகள் சந்நிதி மண்டபப் பணி அணிபெறச் செய்வித்தருளினர்.

விநாயகபுராணம் அரங்கேற்றுஞ் சபைக்கு ஐயாப்பிள்ளை என்னும் ஒரு பெரியபிரபு "நாம்வர இதென்ன இராமாயணமா" என்று சற்றே இகழ்ந்தனர். மற்றப்பிரபுக்கள் முனிவரர்க்கு அதனை மறைத்தும், அவர் தமது புராணத்தைத் தொடங்காது இராமாயணத்தை எடுத்துக்கொண்டு யாவரும் பிரமிக்கும்படி முதல் ஆறுசெய்யுளில் நூறு குற்றம் ஏற்றினர். உடனே அப்பிரபு, நூறுவராகனும், பீதாம்பரமுதலியவைகளுங் கொண்டுபோய், பாதகாணிக்கையாக வைத்துத் தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்து, சுவாமிகளது மகத்துவம் அறியாத ஏழையைத் தேவரீர் காத்தருளுகவென்று, விண்ணப்பஞ் செய்ய, அதன் பின்பு தமது புராணத்தைத் தொடங்கி அரங்கேற்றினர்.

இம்முனிவர் சென்னபட்டணத்தி லிருக்கும்போது, காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருந்த அவராசிரியராகிய சிவஞானயோகிகள்பால், ஆங்குள்ள தமிழ்வித்துவான்கள் ஒருங்குகூடி, நீவிர் காஞ்சிமான்மியஞ் செய்யப்புகுந்து, அதன்கண்ணே கடவுள்வாழ்த்தில், "சங்கேந்துமலர்க்குடங்கை" என்பதை முதலிலுடைய சபாநாயகர் துதியை முன்னர் அமைத்து, "தணந்தபெரும்" என்பதை முதலிலுடைய ஸ்தலநாயகராகிய ஏகாம்பரநாதர் துதியைப் பினனர் வைத்தது தவறென்று சாதித்தனர். அச்சிவஞானயோகிகள் தம்முடைய மாணாக்கனைக்கொண்டு அவர்களைத்தலைமடங்கச்செய்வதே

தகுதியென்று திருவுளங்கொண்டு, அதனைக் கச்சியப்ப முநிவருக்குத் தெரிவித்தார். உடனே முனிவரர் சென்னையினின்றும் புறப்பட்டு ஸ்ரீகாஞ்சிசேர்ந்து, அனைவரையும் ஏகாம்பரநாதர் சந்நிதிமண்டபத்திற் சேரச்செய்து, பிரசங்கிக்கத் தொடங்குவாராகி, அந்தஸ்தலத்து ஓதுவாரைநோக்கி இந்த ஸ்தலத்துத் தேவாரப்பதிகங்களுள் ஒன்றனை முதலிலே ஓதும்படிசொல்ல, அவர் "திருச்சிற்றம்பலம்" என்று தொடங்கினர். அப்பொழுது கச்சியப்பமுநிவர், ஆக்ஷேபித்த வித்துவான்களைநோக்கி இவர், "திருச்சிற்றம்பலம்" என்று தொடங்குகின்றாரே, இது உங்கட்குப் பொருத்தந்தானோ? இவரை நீங்கள் சேர்ந்து இச்சந்நிதியில், இந்தஸ்தலத்துத் தேவாரப் பதிகங்களைப் பிருதிவியம்பலம் என்று சொல்லி ஆரம்பிக்கும்படி செய்யக்கூடாதா வென்ற வளவிலே, அனைவரும் வாயெடாது ஊமர்கள்போலத் தலை வணங்கி யிருந்தனர். அதன்மேல் விநாயகர் காப்புக்குப்பின், கடவுள்வாழ்த்தில், முதலாவது உயிர்களின் போகம் வீடுபேறுகட்கு ஹேதுவாகப் பஞ்சகிருத்திய திருநிருத்தஞ் செய்தருளுஞ் சபாநாயகர் துதி கூறுதலே முறையென்று நியாயங்கள்காட்டி அவ்வித்துவான்கள் அவமானம் அடையச்செய்தனர்.

பின்பு ஸ்ரீகாஞ்சியில் வீற்றிருக்கக்கருதி அங்கே அமர்ந்தபொழுது தம்முடைய ஆசிரியர் திருவாக்கைச் சிரமேற்கொண்டு காஞ்சிப் புராணத்து இரண்டாங்காண்ட மொழிபெயர்ப்புச் செய்தருளிப், பின்னர்க் கச்சியானந்த ருத்திரேசர் வண்டுவிடுதூது, கச்சியானந்த ருத்திரேசர் பதிற்றுப் பத்தந்தாதி, பஞ்சாக்கரவந்தாதி முதலிய பலநூல்கள் இயற்றியருளினார்.

இங்ஙனம் லோகோபகாரமாகப் பல நூல்கள் இயற்றிப் பலநன்மாணாக்கர்களுக்குக் கற்பித்துத், தமிழ்மொழியை அபிவிர்த்திசெய்து, சிவப்பேற்றிற்குக் காரணமாகிய சிவத்தியானாதிகளின் உறைப்பில், வதிந்தருளிய கச்சியப்பமுநிவரர் ஸ்ரீகாஞ்சிபுரத்திலே, சாலிவாகன சகாப்தம் ௲௬௯௨-க்குச்சரியான சாதாரணவருடு சித்திரைமீ ௰௫௨ மங்களவா

ரத்தில், புனர்பூச நக்ஷத்திரமும் பூருவபக்ஷத்துச் சத்தமி யுங்கூடிய கும்பலக்கினத்திற் பரிபூரணதசை யடைந்தனர்.

ஏர்தரு சாலி வாகன சகாத்த
மாயிரத் தெழுசதத் தொருபத்
திரண்டின்மேற்சாதா ரணவரு டத்தி
னியைதரு சித்திரைத் திங்கள்

சார்தரு தெய்தி பத்திஞே டொன்று
தகுசெவ்வாய் வாரம்பூ ருவத்திற்
சத்தமி புனர்பூ சத்திரு நாளிற்
றவலறு கும்பலக் கினத்திற்

சீர்தரு துறைசை வாழ்சிவ ஞான
தேவன்மா ணாக்கருண் முதன்மை
திகழ்ந்துள கச்சி யப்பமா முனிவன்
றிருப்பெருங் காஞ்சியி னெய்திச்

சேர்தரு மடியார் தமதக விருளைத்
தினகரன் முன்னிரு ளென்னத்
திருந்துதன் னருளா லகற்றிவீ டுறுத்திச்
சிறந்தபூ ரணதசை யடைந்தான்.

இச்செய்யுள் முற்காலத்தது.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பேரூர்ப்புராணம்.

## காப்பு.

கங்கையும்பனிவெண்டிங்களும்விரைந்தகடுக்கையந்தொங்கலுமரவுந்
தங்குபொற்சடையுமுக்கணுந்தானதாணுவென்றுணர்த்தமென்மலர்க்கை
யங்குசபாசமணிந்துவெற்புயிர்த்தவாரணங்கன்னையென்றுணர்த்தி
வெங்கலிமுழுதுந்துமித்தருள்பட்டிவிநாயகன்சேவடிபணிவாம்..........*





உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# பேரூர்ப்புராணம்.

கடவுள்வாழ்த்து.

பட்டீசர்.

கடல்சூழ்ந்தவுலகுண்டகனிவாயனிருந்தொழிலுங்கமழ்ந்ததெய்வ
மடல்சூழ்ந்தமலர்க்குரிசின்முதற்றொழிலுமவரோடுமெடிக்குஞான்றவ்
வடல்சூழ்ந்தவரன்வழியேமீட்டும்வரப்பணித்தருளியாவிக்கெல்லா
மிடல்சூழ்ந்தவிருடணிக்குமாதிநகர்ப்பட்டீசர்விரைத்தாள்போற்றி........(க)

அரசம்பலவாணர்.

திருமார்பன்முதலானதேவருக்கெல்லாமறையோன்சிவனேயாமென்
றொருவாய்மைமறைகரைந்ததுண்மையெனத்தெளிந்துலகமுய்யமுத்தீ
மருவாருங்குழலுமைபத்தினிவளர்ப்பவிடக்கரத்துவயங்கவேந்திப்
பெருவாழ்வுதரவரசம்பலத்தாடும்பேரொளியைப்பேணிவாழ்வாம்........(உ)

மரகதவல்லியம்மை.

கங்கைநதிசடைக்கரந்தகணவனுருக்கலந்ததனக்கேயல்லாற்
றுங்கமணிக்கோடிரண்டாயிரம்படைத்தகரியெவர்க்குந்தூண்டன்முற்று
தங்கநெடும்புவனத்தென்றமைந்தனள்போற்பாசமொடங்குசங்கையேந்து
மங்கலமிக்கருள்பேரூர்மரகதவல்லியினிருதாள்வனசம்போற்றி..........(௩)

விநாயகக்கடவுள்.

வேறு.

கற்றைவெண்கதிர்மேருவினொழுக்கியகாட்சியின்மணிமார்பி
னுற்றமுப்புரிநூல்கரடத்தினின்றுருமதத்துருவேழுய்ப்
பொற்றதாதைபோற்றேவர்தஞ்சிகைகொலோபூண்டனரிவ்வொன்றும்
பெற்றிநித்தலும்விளக்குமைங்கரன்கழற்பிரசமாமலர்போற்றி... .. .. (௪)

முருகக்கடவுள்.

காமர்மல்கியவுருவிஃதென்றெனக்கருதிநின்முன்னுறந்தோற்றுங்
காமனல்லுடல்பொடிந்தசன்னிடத்துமைசமயனுறாநிகரில்லாக்
காமர்மல்கியவுருவெனத்தோற்றியகாளையையடியார்தங்
காமமுற்றமிக்கருளுமங்குலிகர்க்கந்தனைப்பணிவாமால்..... . .. .......(௫)

திருநந்திதேவர்.

உலகம்யாவையுமொருநொடிப்பொழுதினுண்டுமிழுஞ்சக்கரமாதி
மலர்கையேந்தியநாரணன்முதலியவானவர்குழாமெல்லா
மலகிலார்வழுமச்சமுந்தழீஇநிரையாகநின்றனர்போற்ற
விலகுவேத்திரச்சிறியகோற்பணிபுரியேந்தல்பூங்கழல்போற்றி......... ..(௬)

சண்டேசநாயனார்.

வேறு.

விண்ணவரோனுஞ்சிவபிரான்பத்திமேவிலராயினல்வினையுந்
திண்ணியபாவமெனப்படுமென்றுசிறுவிதிதெரிப்பவன்பினரோன்
மண்ணவரோனும்வெய்யபாதகமுமறவினல்வினையெனப்படுமென்
றண்ணலம்புவியிற்றெரித்தசண்டேசரடிமலர்முடிமிசைப்புனைவாம்....... (௭)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வேறு.

தவந்தவென்பினைப்பெண்ணெனப்படைத்துஞ்சார்மழவ
னுவந்தபெண்ணுயிரளித்துமொட்டாதெதிர்புத்த
னிவந்தசென்னியையுருட்டியுமுத்தொழினிறுவிப்
பவந்தடுத்துயிர்க்கருளுஞ்சொற்பனவனைப்பணிவாம் ..... .. ..............(௮)

திருநாவுக்கரசுநாயனார்.

விஞ்சைகற்பனவேறிலைவிடையவன்பதங்க
ளஞ்சுமேயெனவறியவெவ்வுலகருங்கற்புணையா
னெஞ்சுதுட்கெனுநெடும்புனல்வேலையும்பிறவி
வஞ்சவேலையுநீந்தியமன்னனைப்பணிவாம்.. .... ...... (௯)

சுந்தரமூர்த்திநாயனார்.

ஆடுபாம்பணிந்தம்பலத்தாடியவழகன்
பாடுபாப்பலபகர்ந்துமற்றிம்மையிற்பயனுங்
கூடுமேலையிற்பயனுங்கோதனைத்தையுமொருவும்
வீடும்வாங்கும்வாணிகத்துறுவிரகனைவியப்பாம் ... ........(௧௦)

மாணிக்கவாசகசுவாமிகள்.

உள்ளமாகியபுலத்தினைப்பத்தியாலுழுது
தெள்ளுஞானவித்துறுத்துநற்சிரத்தைநீர்பாய்ந்திக்
கள்ளவான்பொறிக்களைகள்கட்டானந்தம்விளைத்துக்
கொள்ளைகூறுமாணிக்கவாசகன்கழல்குறிப்பாம்... ......... ..(௧௧)

மற்றையநாயன்மார்.

அறத்தினீடியவகத்திடைச்சிவானந்தம்விளைய
வுறத்தடாதுமுன்பாய்த்தியவொழுக்கநீர்முழுதும்
புறத்தினேருறக்கவிழ்த்ததேபோன்மெனப்புனல்கண்
ணிறத்தின்வாக்குமெய்யன்பினரொவரையுநினைப்பாம்........(௧௨)

குருமரபு.

வேறு.

அங்கணர்தங்கயிலைவரைநந்திநவின்றருளுமருணூலைமொழிபெயர்த்தவாசிரியன்மரபிற்,— றங்குதுறைசையினமச்சிவாயர்மறைஞானர்தயங்கியவம்பலவாணருருத்திரகோடியர்மா,— மங்கலவேலப்பரிருகுமாரசாமிகண்மாசிலாமணியாரிராமலிங்கர்வயங்கிருவேலப்ப,— ரிங்கணுயர்திருச்சிற்றம்பலவரிருமித்திட்டெனையாளம்பலவாணரிவர்களையேத்தெடுப்பாம்.................................(௧௩)

கடவுள்வாழ்த்து முற்றியது.

ஆகத்திருவிருத்தம்—௧௪.

## அவையடக்கம்.

### வேறு.

சூழிமால்யானைசுமந்தநானிலத்துச்சூழ்ந்தவேழ்கடலையுமொருங்கு
நாழியாலளப்பப்புகுந்ததேபோலாநான்முகன்மாலளந்தறியா
வூழியான்கருணையூற்றெழநடனமுஞற்றுறும்பிப்பிலாரணியப்
பாழிமான்மியங்கண்முழுவதுஞ்சிறியேன்பகருவான்புகுந்ததுமாதோ.....(க)

சித்திரம்பிறங்கச்செம்பொனிற்குன்றிசெறிப்பினுஞ்செய்கையேவிழைவா
ரொத்ததின்றிதற்கென்றுவப்பராற்கூடத்தொளிர்மணியழுத்தினுமணியி
னுத்தமம்விழைவோரதனையேமதிப்பருரைத்தவென்கிளவியாறசிலர்தாங்
கைத்தனரேனும்பயனுறுமனத்தோர்கைக்கொள்வர்மான்மியச்சிறப்பால்(உ)

பண்டுகேவலத்திற்கிடந்தவாருயிர்க்குப்பரிவினுற்றனதுபகாரங்
கண்டருளிறைபோற்றுங்களேபிறர்தங்கவிதையிற்கரிசுதீர்த்தாள்கை
கொண்டவையிருந்தோர்தம்மையாமிரப்பிற்கோதறவிளங்கியவவர்த
மண்டியபுகழுக்கியைவதன்றெனவாளாதிருந்தனமவர்மாட்டு..............(௩)

அருவருப்புடையதுடலமென்றறிந்துமரும்பயனுறுநருமுரு
மொருவருந்திறத்தினுரிமைமற்றதன்பாலுறுத்துவர்மதுரமென்கிளவி
மருவரிதிதுவென்றறிந்துமென்பாடன்மாட்டுவையகத்துளாரொவரும்
பொருவருந்திறத்தினுரிமைபூணுவராற்பொறியிலேனிடத்துறுமகிழ்வால்..(௪)

கடல்கடைந்தெடுத்தவமிழ்தமுஞ்சமழ்ப்பக்கநித்தநிஞ்சுவையெழாற்பாட
ணடவினரிருவர்சேக்கைபெற்றிருந்தநாயகன்செவியிடைத்துடிமான்
விடநிகர்குழைப்புமேறவிற்றெளிந்தோர்விதியுளியுஞற்றுசெந்தமிழ்கள்
படருமச்செவியிற்சிறியனேன்றொடையும்படருமாலுலகெலாம்பரவ.....(௫)

### வேறு

கொன்றைமாலையுங்கூவிளமத்தமும்பிறையுந்
துன்றுவார்சடைப்பட்டிநாயகர்சுரர்போற்ற
மன்றினுடல்செய்குடவயிற்சிதம்பரம்வயங்கு
கின்றமேதகுகொங்குநாட்டணிகிளப்பாமால்.........(௬)

## அவையடக்கமுற்றியது.

ஆகத்திருவிருத்தம்—௨௦.

# திருநாட்டுப்படலம்.

திங்களுமுரோணியுந்திகழ்ந்ததிறமென்ன
மங்கலவினைத்தொழிலுமங்கையரும்வேத
வங்கியும்வளர்க்குமறையந்தணருங்காவுங்
கொங்குமலிகின்றதொருகொங்குவளநாடு.......... .(க)

கோதைபயில்விற்கொடிகுலாவியபுயத்தன்
கோதையர்விழிக்கணைகுளிக்குமருமத்தன்
கோதைகமழுங்கவிகைக்கொங்கனெனவிள்ளுங்
கோதைநனியாண்டதொருகொங்குவளநாடு . .... (உ)

பரிதியொடுவெண்மதிபரிக்கவொளிநல்கு
முருகெழுகனற்புதல்வனுண்டவொருசீரா
லிருசுடருயிர்த்தவர்களாண்டவிருநாட்டின்
குருவெனவிளங்கியதுகொங்குவளநாடு.... ... . ....(ங)

மலாடும்வளர்பாண்டியும்வழங்குபுனனாடு
நிலாவுதிறையாகநிதிநிச்சமும்வழங்கி
விலாழிமதகுஞ்சரமும்வெய்யபொருண்மற்றுங்
குலாவுசிறப்பெய்தியதுகொங்குவளநாடு ......... ...(ச)

இலவிதழிபாகனிலிழிந்தமலர்க்கைதை
கலவியதுகாரமிழ்துகான்றதொழியாத
புலவுடையதென்றுகடல்போக்கிநிலமூன்றிற்
குலவிவளமெத்தியதுகொங்குவளநாடு ...... .......(ரு)

குறிஞ்சி.

வேறு.

கடலுவர்ப்பெனநீக்கியகாமரிந்நாட்டின்
றடவுவண்மையைநோக்கியேசாகரமுகந்த
படலைமென்முகில்பயிலுவர்முழுவதுமகற்றிப்
புடவியெங்கணும்பொழிந்துகண்படுப்பனவரைகள்.(சு)

கருவிநீண்முகிற்கஞ்சுகம்போர்த்ததன்மேலாற்
குருதிமாமணிக்கொழுநிறவானவிற்பைம்பூண்
மருமம்வீழ்தரப்பூண்டுபன்மணிகொழித்திழிய
மருவியாரமுமணிந்தாலருவரையடுக்கம்.... .......(எ)

குழவிவாண்மதிதவழ்வதுகோடெனத்தோன்ற
முழவமாமழைமுழக்கெழமுகத்துமின்ஞேடை
தழுவமாலைவெள்ளருவியஞ்சலசலமதநீ
ரொழுகவோங்கல்களரசுவாவெனச்சிறந்தனவால் .......(அ)

கழைநிவந்ததண்சாரலிற்களகளமுழங்கு
மழையைவேற்றுவாவரவெனமதமலையெதிர்ந்து
புழைநெடுங்கரநீட்டவாய்முழையெனப்புகுந்த
தழைமழைக்குலமிர்வதுதளைவிடுநாள்போல்............(கூ)

தண்டமென்ணிலகாட்டுவதாழ்வனாக்குலமுந்
தொண்டகப்பறைமுழக்குநர்துவன்றுசீறூருங்
கொண்டசேவகங்காட்டுவகுலவனைமுழையு
மண்டுபோர்பலவடுத்துழிமறவர்தம்புயமும்....... .......(கo)

சுடர்மணிக்குலந்துவன்றியதடநெடுங்கோட்டுக்
கடகங்காட்டுவகொடிச்சியர்கரங்களுங்காவுஞ்
சுடர்மணிக்குலந்துவன்றியதடநெடுங்கோட்டுக்
கடகங்காட்டுவகளித்தெழுகளிறுங்கல்வளையும்.........(கக)

வேட்டதற்பமேயாயினுமேவுமாமுயல்வோர்
வீட்டுவார்விழையாதனமேன்மையவேனுஞ்
சேட்டுமாமணிபொடிபடச்செந்தழல்விளைக்கா
ஞாட்டிஞர்தினைவித்திஞருயர்மலைவாழ்நர்...............(க௨)

செய்யகோலினர்திசைதொறுஞ்செலுத்துசக்கரத்தார்
வெய்யதண்டமுமுடையவர்வெல்பெருங்கதையா
ளையநாளறிகணியினரசலமந்திரஞ்சூழ்
மெய்யர்யாவரும்வெற்பமர்வாழ்க்கையாடவரோ.........(கஈ)

முருந்துமூரலார்மொழியையுமியலையும்வேட்டு
வருந்துகிள்ளையுமஞ்ஞையும்வார்புனத்திதண்மே
லிருந்துளாரொனவின்புறுமின்முகங்காணு
விருந்திஞரெனவெதும்புறும்விலகுகைக்கவணுல்........(கச)

கிழங்குசெந்தினையைவனந்தோரைகேழ்மதுவூன்
பழங்கனற்பசிகெடுப்பனபடிவனவருவி
முழங்குதண்சுனைகண்படுப்பனமுதிர்மான்ரு
றழங்கிரும்புகழ்ப்பொருப்பினர்வாழ்க்கைதாழ்விலதே . (கரு)

பிணிமுகத்தனபுனங்களேபெரிதிரங்குவன
துணிபுனற்சுனைத்துடுமெனவிழுமருவிகளே
திணிபடும்வயிரத்தனசிலம்புசூழ்தடமே
யணிபடுங்கொடுங்கோலினவழிமதக்களிறே..............(௧௬)

பெரும்பயத்தனபிரசம்வார்பொதும்பரேயல்ல
சுரும்புழக்கமென்முருடவிழ்மலர்த்தடஞ்சுனையுங்
கருங்கயத்தனகமழ்ந்தவச்சுனைகளேயல்ல
மருங்குதுன்றியமழைதவழ்மணிவரைக்குலமும்..........(௧௭)

முல்லை—வேறு.

அருவியம்புனங்களையளிக்குமேனலு
மிருவியுமாக்குநரிருக்கைமால்வரை
மருவியவுடையெனமருங்குவாங்கிய
திருவியல்கானகுஞ்செல்வமிக்கதே........................(௧௮)

புல்லமாய்ப்புரமடுமிறையைத்தாங்கினோன்
புல்லமார்நிரைகளைப்புரக்கமுன்னுவோன்
புல்லமாயிருந்ததிப்புடவியென்றுபல்
புல்லமார்நிரையெலாம்புணர்ந்தசெவ்வித்தே............(௧௯)

மந்திரவலியினன்வலைத்துக்கட்டிய
வெந்திறலுழுவையின்வெடிகொளோதையுஞ்
சுந்தரமகளிர்கடுவன்றிமத்தெறி
பைந்தயிரோதையும்பகுக்கொணாதரோ.....................(௨௦)

தொறுவியர்கற்பினுன்மிகுந்ததோற்றத்தை
நிறுவியதென்பவேநிலத்தின்மங்கையர்
மறுவில்கற்புடையராய்வார்குழற்பெயு
நறுவிரைமுல்லையினைகைத்தகானமே.....................(௨௧)

ஏற்றினலிரலையாலிதழியாத்தியுந்
தோற்றலான்மாலொருபாலிற்றுன்னலா
லாற்றநற்பான்முதலைந்துமாடலா
னீற்றினன்றிருவுருநிகர்க்குங்கானகம்.....................(௨௨)

பெருகியபாற்கடற்பள்ளிபெற்றவன்
பருகியவமுதினன்பானெய்மற்றுமிக்
குருகியகாதலிற்கரந்துண்டானெனின்
வெருகுமங்குயர்ந்தனவிழுப்பவுண்டியால்...............(௨௩)

வேய்மணிக்குழலினும்வெய்யமாலையிற்
றேய்மணிக்குரையினுந்தழைக்குங்கன்றுதேர்
வாய்மணிக்குரையினும்வழங்குதூதினு
மாய்மணியனையவரகந்தழைப்பரோ ....... ...... .....(உ௪)

சயமுறுதன்னிலவரகுஞ்சாமையும்
வயல்வளர்செந்நெலும்வணங்கமிக்குறு
பயனொடுசலேம்மிர்பரிசுபெற்றன
வியலுறுமிறுங்குகம்பாதியெய்கணும் . ... .......(உ௫)

கானமுந்திலமுநற்கடலைச்செல்வமுந்
தூணுறழுரையினதுவரைக்கானமு
மாணுறுமவரையும்பயறுமற்றவும்
பேணினையுறப்பெருக்கஞ்சான்றவே... . .. .......(உ௬)

விடுத்தவல்லேற்றினைவிரகிற்பற்றினோர்க்
கடுத்தனவெளிதினல்லணங்கனார்வடந்
தொடுத்தகுஞ்சரங்களுந்துளங்குசிங்கமுங்
கடுத்தவழ்கூற்றமுங்கைக்கடங்கியே.. ........ ..... ..(உ௭)

கோலொடுங்கயிற்றொடுங்குழலொடும்பசுக்
காலொடும்பழகுவபொதுவர்கைத்தலம்
பாலொடுந்தயிரொடும்நெய்யொடும்பைம்பொற்
சாலொடும்பழகுவதையலார்கரம்.. ...... ..............(உ௮)

மருதம்.

அந்தினுந்தெய்வதமருந்தவத்தினு
லுந்தியிலொருமலருயிர்த்ததாமென
நந்துயிர்முத்தினனைக்கும்பங்கயச்
சுந்தரப்பனைவனத்தருகுசூழ்ந்தவே . ....... ........(உ௯)

வேறு.

ஒன்றுகணரனுக்கீந்திட்டுவணத்தோன்கமலக்கண்ண
னென்றுலகிசைப்பப்பெற்றுனித்தகுபதுமஞ்சாலத்
துன்றுநம்மிறைவனோடுசேர்வற்கவென்றுமேக
நன்றுறைசிதறித்துஞ்சுநனைமலர்க்காவுதோறும்..........(௩௦)

குழையொடுதோடுநாலக்கொடியிடைநுடங்கக்கொங்கை
விழைதகக்காட்டிப்புள்ளின்வியத்தகுகுரல்கடோற்றி
மழைமுகிற்கூந்தல்சோரமருங்குகண்மலர்கள்சேர்த்தித்
தழைமதுதெவிட்டிக்காமத்தையலர்புரையுஞ்சோலை...(௩௧)

சிலம்புகாலணிந்துபாணிசெறிந்தகற்கடகந்தோற்றி
வலம்புரியுந்திதாழ்ந்துமணிநிழற்காஞ்சிசூழ்ந்து
நலம்புரியலர்கடோன்றநாயகன்விழையத்துள்ளிப்
புலம்புகுத்தன்பின்மாதர்போன்றனவேரியெல்லாம்.........(௩௨)

சுரும்பொடுஞிமிறுந்தேனுந்தும்பியும்பாணராக
வரும்பவிழ்கமலமெல்லாமரியலார்வள்ளமாக
விரும்பியவிலைமூதாட்டியாயினவிலகலின்றி
யிரும்புனற்றடங்கடோறுமிடையிடைவிராயவன்னம்........(௩௩)

முள்ளரைக்கமலமேயமூரியம்புனிற்றுக்காரா
னுள்ளூறத்தவழ்ந்துகோட்டிஞெழிந்துநீர்குறைந்தபொய்கை
துள்ளுமீன்செருத்தன்முட்டத்துளைந்தவைபெயர்ந்துகொட்டுந்
தெள்ளியநறும்பால்பாய்ந்துகுறைவறத்தேக்குமன்றே. ... (௩௪)

வள்ளையுங்குவளைப்போதுமயக்கிமேய்செங்கட்காரா
னள்ளூறச்சொரிந்ததீம்பானசையின்வாய்மடுத்துங்கஞ்சப்
பள்ளியிற்பயின்றுமாதர்படர்தொறுநடைகள்கற்று
மொள்ளியதெய்வநாட்டைமறந்தனவோதிமங்கள்...........(௩௫)

பாவிரிபுலவர்சாவாப்புலவரும்பழிச்சுந்தெய்வக்
காவிரிபவானியாம்பராவதிகங்கையென்னப்
பூவிரிகாஞ்சிமற்றும்பொங்கிவெண்டிரைகள்வீசித்
தாவிரிபழனமோம்பத்தலைத்தலைபரந்தமாதோ....... ..........(௩௬)

வரையிழியருவியென்னமணிகொழிகலுழியென்ன
விரைதருநதிகளென்னவியத்தகுநீத்தமொன்றே
பரைதனக்குரியகேள்வன்படைத்தளித்தழிப்போர்பானின்
றுரைதருமூவரொன்னப்படுவதொத்துரைவேறெய்தும்..... ...(௩௭)

மலைபடுவயிரஞ்செம்பொன்மருப்புநித்திலஞ்சந்தாதி
யலையினிற்கவர்ந்துகொல்லையாயர்தம்புறங்கண்டன்னோர்
விலையிழுதமுதந்துய்த்துமேற்செலப்பழனமள்ளர்
குலைதொறும்பறைகளார்ப்பக்கொம்மெனவெதிர்சென்றுறால்...()

மணித்தலைப்பாப்புக்கூட்டம்வைகியநாகநாடிங்
கணித்தெனவுடைப்பிற்றாழ்ந்தவவலெலாமலையின்பக்கந்
துணித்தவன்காவல்பூண்டசோதிசூழ்நாகநாடுந்
தணித்தனமென்னத்தூர்த்துத்தடாயவன்குலைகள்செய்தார்.....(௩௯)

விலைமடமாதர்நெஞ்சின்வீற்றுவீற்றுடைப்பிற்சென்ற
வலைநெடும்புனல்கண்முற்றுமகத்துறமறுத்தலோடுங்
குலைகளுளடங்கிநெல்லகுலம்வருதெய்வக்கற்பின்
றலைவளர்மாதர்நெஞ்சினொழுகினதடங்காறேறும்...... ......(சo)

கதுப்பிளந்தோகைநல்லார்கண்ணெனக்கயல்கள்பாய
மதுப்புனற்கமலம்பூத்தவளநெடுவயல்களெல்லாம்
புதுப்புனல்பாயவோகைபொங்கியகருங்கைமள்ளர்
வெதுப்புறுமரியலார்ந்துவினைத்திறத்தூக்கமிக்கார்............(சக)

வேறு.

சீர்த்தவித்தொழிலாளர்க்குத்தென்றிசைப்
பார்த்திவன்விளையாக்கலிபாறுமென்
றோர்த்துளங்கொளவன்னவனூர்தியைக்
கார்த்தடங்கையினுருமழக்கட்டினார்..... ...........(சஉ)

கமலக்கண்ணன்முன்றோன்றியகாளைகை
யமருக்கேற்றவலப்படைநம்மிரு
சமரக்கால்வழிச்சாருவதாமெனத்
திமிரப்பூணிகள்செல்வதருக்கியே.................(சங)

வெள்ளைகைப்படைவீற்றுறநந்தகோன்
பிள்ளைநீருட்பிறந்ததோற்றத்தினுட்
டுள்ளுமொன்றுதுளைந்திரிந்தோடுமொன்
றள்ளலுட்படிந்தாங்கலைப்புண்ணுமே..............(சச)

ஏதமென்றறியாதயலாரிடங்
காதலிற்கவர்ந்தார்முகங்காட்டிய
சீதவம்புயந்தேனொடுந்தாழ்வன
நீதிமன்முனவ்வானனநின்றென ..................(சரு)

நாயகன்கைநகம்படூஉற்றினுற்
சாயன்மெல்லியலார்கடழைப்பபோற்
றேயலப்படைசென்றுறூஉற்றினுற்
பாயபண்ணைபயப்படநின்றவே............... ....(சசு)

மெய்யினூறுவெளிப்படநாணிய
மையன்மாதர்மறைத்தவெண்டுசெனத்
தையசால்கடைமமறைத்திட்டதாற்
கையினூற்றுநர்பாய்த்தியகாமர்நீர்......... .........(சஎ)

நாவலங்கனிநேர்நறுஞ்சேற்றினை
மாவலங்கொளுமள்ளர்மரம்படுத்
தாவலங்கொட்டவாற்றுக்காலாட்டியர்
மேவலங்கியவெண்முளைவித்தினார்....... .......(சஅ)

சேறுசெய்குநரோர்புறஞ்சேற்றிடை
வீறுவெண்முளைவித்துநரோர்புற
நாறுவாங்கிநடுநரோர்புறம்
வேறுவேறுவினைத்திறமிக்கதே ........ ..........(சகூ)

ஏரினுஞ்சிறப்பென்றெருப்பெய்தபிற்
சீரிதென்றுகளையடச்செப்பினார்
நீரினுஞ்சிறப்பாநெடுங்காவலென்
றூரினுஞ்சிறப்பெய்தவளிப்பவர்.... . ... ,. .......(௫0)

வேறு.

கருங்களமர்களையென்னச்செங்கயற்கட்கடைசியர்கண்
மருங்குனெடுங்கொடிநுடங்கவளர்தானைமீச்செல்ல
நெருங்கியகைவளையொலிப்பநிகரிறமதவயவத்துக்
கொருங்கிகலும்பகைமுடிப்பவொளிர்நறும்பூம்பணையடுத்தார்(௫க)

செய்யவாய்க்கருங்கயற்கண்வெண்முறுவற்பைந்தொடிக்கைப்
பையராவகலல்குற்காரன்னம்படர்நடையொடு
முய்யலாந்திசையாதென்றுய்யானமருங்கடுத்த
வெய்யபூம்பணைக்கமலம்விரவியவெள்ளோதிமங்கள்.........(௫௨)

மழைகாட்டும்விழிகாட்டுமலர்க்குவளைமகரவாய்க்
குழைகாட்டுஞ்செவிகாட்டுங்கொடிவள்ளைதுவர்ச்செவ்வாய்
கழைகாட்டுமுகங்கரங்கால்கமழுந்திமுலைகாட்டிப்
பிழைகாட்டுநெறியென்னப்பெரிதுமடர்த்தார்கமலம்......... (௫௩)

கனிச்சந்தவாய்நிகர்த்தகயிரவத்தின்றவம்பாரா
ரணிச்சந்தமடிநிகர்த்தவருந்தவத்தின்றிறம்பாரா
ரினிச்சந்தமிலையென்னவிறுத்திறுத்துத்திடர்செய்தார்
பனிச்சந்தவனமுலையார்பகைத்தவம்பார்த்தொழிப்பவரார்...(௫௪)

பஞ்சாயுமிளமுருந்துபனிநகையினுயிர்ப்பதென
வெஞ்சாதுபறித்தெறிந்தாரேனையவும்பறித்தெறிந்தா
ரஞ்சாமையிறையேவவடர்ப்பவர்க்குப்பகைநொதும
றஞ்சாதவுறவிவற்றிற்சூழ்வதுசற்றுளதாமோ. ..... ... ......(௫௫)

தளையவிழ்பூங்குழனிகர்த்தசைவலங்களொருக்கின்ற
விளையவர்தங்காணிகர்த்தவெமைவிடுத்தற்கிதுவாமென்
றளையழுந்துஞெண்டுவராலாமையகன்வயற்கிளைத்த
களைகளையவுலாவுதொறுங்காண்மலர்மேல்விழுந்தெழுமால்....(௫௬)

பட்டமிருந்தடம்பொய்கைபரந்தசெறுவிவற்றெழுந்த
கொட்டியுநன்கிருந்தனவாற்குலத்தேவர்மணிமுடியி
லட்டுமதுமலரும்வயலவிந்தனவேயறிகிற்பிற்
சட்டவிடத்தாற்றழைத்துத்தபுவர்தணிந்துயர்ந்தோரும்... ..(௫௭)

செழுக்கமலமதுமாந்தித்தெரிந்திதழ்மென்குழற்செருகி
விழுக்குவளைசெவியேற்றிவிரைத்தாதுமுலைக்கொட்டி
யொழுக்குநறைக்கயிரவத்தினொளிர்தண்டைச்சரணுறுத்துக்
குழுக்கொடுழத்தியர்மீண்டார்கொலைக்களத்தேல்சிறப்பினர்போல்.

வேறு.

குமிழ்தந்தொளிர்நாசியினார்குலனொன்றியவாடவருக்
கமிழ்துந்தனியாவியுமாயணிசெய்குவதற்புதமோ
விமிழ்தண்புனலீர்ம்பணையினெழுபுன்பயிர்கைத்தொழிலா
லுமிழ்தந்தனவோங்கிவளர்ந்துலகின்புறலாங்கருவே..........(௫௯)

கரும்போவிஃதென்மர்கழைக்கரும்பித்துணையாவதுகொ
லரும்பார்கதலித்துடவையாமென்றுமறுத்தவர்தாஞ்
சுரும்பார்கதலிக்குலமித்துணையாவதுமுண்டுகொலோ
பெரும்பூகமெனக்கொளவும்பெரிதும்விளைவாயினவால்.......(௬௦)

இருநாழிநெலீந்தவருமெண்ணான்கறமேற்றதனா
லொருவாதுசெயுத்தமியுமொருநாளுருமாறிமலர்
மருவார்பிறவாநெறியின்வயலிற்றொழில்செய்தனரோற்
பெருவாய்மையசெந்நெலெலாம்பெரிதீண்டுதலோர்புகழோ...(௬௧)

வேறு.

கண்ணுறநின்றவாசான்கடவுளேயென்றுமுன்வே
றெண்ணினரறிவுமுற்றவிறைஞ்சியவுண்மைகாட்டும்
விண்ணினைப்பொருளதென்றுவெண்மையினிவந்தசாலி
மண்ணினைப்பொருளதென்றுபசுமையின்வணங்கியம்மா.....(௬௨)

இறுதிவந்தடுத்ததோர்ந்தாங்கீண்டியமணியும்பொன்னு
நறுவிரைச்செழுநீரோடுநலத்தகுமடையிற்போக்கி
முறுகியவன்புபொங்கமுதல்வனதடியிற்றாழ்ந்த
மறுவறவிளைந்துசாலவயங்கியதெய்வச்சாலி. . .... ..... .....(௬௩)

முந்துறநிவந்தசென்னிமுப்புறச்சற்றேகோடிப்
பிந்துறமுழுதுங்கூனிப்பெருநிலக்கிடக்கைமாந்தர்க்
கந்தியினடுக்குமாறுங்காட்டினநிவந்தசாலி
சந்தியின்வணங்கிக்கூனித்தனையிடைப்படுத்துமாதோ........(௬௪)

விளைவினைநோக்குந்தோறும்விதுவினைமகவான்மெச்சுந்
தளைதொறும்பதடியொவ்வொன்றிருந்தனதவத்தினுள்ளந்
திளைதருநல்லோர்மாட்டுஞ்சிதடர்சென்றுதிப்பரென்ன
வளைகடலிடத்துச்சான்றாய்வயங்கியதோற்றம்போலாம்......(௬௫)

பறவையும்விலங்கும்பல்வேறுறவியும்பசியிற்றீர
வறவினைநாளுமாற்றுமகன்பணைவிளைவுநோக்கி
நறவுணுமகிழ்ச்சிதுள்ளநலந்தருநாளான்மள்ளர்
மறவினைக்குயங்கையேந்திவளாவினர்விளையின்மூண்டார் ..(௬௬)

என்னணம்வளர்த்தயாமேயிறுத்துமென்றெண்ணல்வேண்டா
நன்னெறிப்படுத்துகென்னாநாடொறும்வணங்கிநின்ற
தன்னிகர்விளைவுகொய்துதலைத்தலையிட்டுக்கட்டி
வன்னிலைக்களத்தினுய்த்துவானுறப்போர்கள்செய்தார்......(௬௭)

அலம்படுகழனிதோறுமரிந்திடுந்திரளிற்றப்பி
நிலம்படக்கிடந்தகூடுநித்தலும்பொறுக்கிச்சேர்த்தங்
கிலம்படுமாந்தரெல்லாஞ்செல்வராயிருப்பரென்னி
னலம்படவிளைப்போர்செல்வநவிற்றலாந்தகைமைத்தேயோ.(௬௮)

போரென்றுஞ்சூடிதென்றும்பொருவில்பல்லறமுமற்றும்
பாரென்றுந்தழையவாக்கும்பண்பினையுடையசாலிக்
கூரென்றுமொழிவதாமோவவ்வுரையொழித்துமென்னாக்
காரென்றுகடுப்பமள்ளர்கடாவிடலாயினாரோ....................(௬௯)

முன்னுறநடந்துமுந்துந்தொழில்வினைமுடித்தபூணி
பின்னுறநடந்துபிந்துந்தொழிலையாமுடித்தாமென்று
முன்னுறத்தோற்றஞ்சான்றமுதலினைப்பூணிக்காக்கிப்
பின்னுறத்தோற்றுநெல்லைத்தமக்கெனப்பிரித்தார்மள்ளர்......(௭௦)

பொங்கரித்திரளையெல்லாம்பொள்ளெனவாரிக்காற்றிற்
றங்கியபதடியோடத்தலைத்தலைதூற்றிக்கூப்பிப்
பங்கமிலரசர்க்குள்ளபகுதிதீர்த்தனைத்துங்கொண்டு
துங்கவண்கூட்டுட்பெய்துதொல்லறம்வழாமையுய்ப்பார்.....(௭௧)

தழைக்குநெல்விளைவுவாய்த்ததளையினெண்மடங்குசான்ற
கழைக்கரும்பினமும்பூகக்கானமுங்கதலிக்காடு
மழைக்குலந்தவழுந்தெங்குமதுநுகர்தேனிமுல்க
ளிழைக்குநந்தனமுமஞ்சளிஞ்சியுமூர்கடோறும்...... ........(எஉ)

தண்ணடையினங்களானுந்தழைத்திடும்பாடியானும்
புண்ணுடைப்படைக்கைவேடர்பொருந்தியசீறூரானு
மண்ணடையுலகின்மிக்கவளம்பலதழுவிநாளும்
விண்ணிடையுலகநாணமிளிர்ந்ததுகொங்குநாடு................(எங)

வேறு.

மதியந்தவழுஞ்சையவரைவரைப்பிற்பிறந்தகாவிரிநன்
னதியந்தனக்குநேர்கிழக்கினடத்தலொழிந்துதெனுதுதிசைக்
கதிகொண்டெழுந்ததுயர்கொங்குகாணும்விழைவாலெனிலிந்தப்
பதிகொண்டமர்ந்தநாட்டின்வளம்பகர்தலெளிதோபண்ணவர்க்கும்( )

கருங்கட்கமலைமணிமார்பன்கதியவுலகுமயனுலகு
மொருங்குவரையின்சிறகரிந்தோனுலகுமேனைச்சுரருலகு
மருங்குவளைந்தநகர்வெல்லவயங்கிச்சிவலோகத்தின்வள
நெருங்கும்பேரூர்வளஞ்சிறிதுநிகழ்த்திநிகழ்ந்தபிறப்பறுப்பாம்..(எரு)

திருநாட்டுப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம்—கரு.

---

உ

# திருநகரப்படலம்.

உரைத்தநாற்பயனுட்பெரும்பயனுயதொள்ளியவீடஃதுறலாற்
றரைத்தலைப்பேருறொன்மர்கள்சிலரொத்தலத்தினுஞ்சாற்றுநாற்பயனு
நிரைத்தலிற்பேருறொன்மர்கள்பலரேநீடியவாதிமாநகரை
யிரைத்தெழுகடல்போல்வளத்தினும்பேருறொன்மர்கள்பற்பலாயிரரே(க)

முள்ளரைக்கமலத்தயனுநாரணனுமுதிரொளிமோலிவாசவனு
மொள்ளியசுரருமந்தரத்துறக்கமொழிந்துபன்னுளிடைவிடுத்துண்
டெள்ளுறுமியக்கமிரண்டையுமடக்கியிருந்தவமுயனுவதெல்லாந்
தெள்ளியபேரூர்வளத்தினைக்காணுஞ்செய்திமைக்குறித்தலதிலையே..(உ)

புடைநகர்.

செல்வம்வேட்டவர்பாலளித்திடற்குரியதெய்வதமென்னுமாதர்களுங்
கல்விவேட்டவர்பாலளித்திடற்குரியகலையணங்கென்னுமாதர்களும்
வில்வளாய்க்கவினும்பதிவயிற்பல்லோர்விரசினரொன்றவர்தவிசா
மெல்விராயொளிருமலர்பலவணிந்தவிலஞ்சியும்பொய்கையுந்தெரிக்கும்.

வேறு.

கஞ்சமீனினங்கலாவுகாமர்பொய்கையோடைக
ளெஞ்சுறுதணிந்துதேவர்நாடிருப்பதாயினு
மஞ்சிலோதியார்நடைக்கவாவுநெஞ்சிருத்தலா
லஞ்சம்யாவுமாங்குவாழ்தலன்றியந்தரத்துறு..............(ச)

ஆவிபொய்கைபண்ணைதோறலர்ந்தமுண்டகங்களுந்
தூவியன்னமுங்கடுப்பதொக்குவேதவொண்ணிலா
ரோவிலின்பமாநடத்தொருத்தனைத்தொழப்புகத்
தாவிலாதனங்களூர்திதாம்புறத்திருந்தன...................(ரு)

காமனைக்கறுத்தகாலகாலனுடுமாநகர்
தாமுமெய்தலாலுறுந்தருக்கெனக்கிளர்ந்தன
மாமயிற்குலஞ்சுவாகதங்கள்பூவைவண்டுதே
னேமியம்புண்மற்றுநீண்டசோலைதோறிசைப்பன........(சு)

வன்னிகூவிளங்கடுக்கைவாகைபாடலங்கடிக்
கன்னிகாரமாத்திசண்பகங்குராமராவிளாப்
புன்னைநாகம்வெட்சிநொச்சிபூங்குருந்துசந்தன
மின்னவானநந்தனவ்வனங்களீட்டமெங்குமே.............(எ)

சாதிமௌவன்முல்லைமாதவிக்குலங்கள்பந்தர்செய்
பாதவப்பொதும்பருட்படர்ந்துசேவகங்கொளும்
போதகங்கள்வெள்ளிபங்கள்போந்தவென்றயிர்ப்புறப்
போதகங்குடைந்துதும்பிதாதுகுப்பபோர்க்குமே.........(அ)

வேறு.

கிம்புரிக்கோட்டினகேழ்த்தசெங்கண
பைம்பொனிறுடையபானகத்தின
வும்பரும்விழையவேழுயர்ந்தபோதகம்
பம்பியகூடங்கள்பலவும்பாங்கெலாம்...... ..........(க)

விடுகணைபின்செலவிசையிற்செல்வன
படுகளத்தொன்னலர்பணிப்பப்பாய்வன
கொடுமயிர்ச்சுவலினகுரத்தெழுத்தின
வடுவறுபரியின்மந்திரங்களெண்ணில................(கo)

ஆரடுகுறட்டினவயம்பெய்சூட்டின
போரடுதிறத்தனபுரவிபூண்பன
தாரடுகொடியினசமைந்தவுள்ளின
தேரடுத்துயர்ந்தனசேக்கையெண்ணில. ..........(கக)

வாளொடுபரிசைகைவயங்குமீளிக
டோளொடுதூணிவிற்றுதைந்தமள்ளர்க
ளூளொடுவேல்கதைநயக்கும்வீரர்க
டாளொடுபோர்பயில்சாலையெண்ணில............(கஉ)

கனைகுரல்வேழமுங்கவனக்கிள்ளையும்
புனைமணியிரதமும்பொருவிறுனையு
மினையநாற்படையுறுப்பெனைத்துமாக்குறும்
வினைஞர்தஞ்சேரிவெவ்வேறுவாய்ந்தன............(கஙு)

வேறு.

கந்தடுகடக்கரிகடாவியமர்கற்குஞ்
சந்தணிபுயத்தவர்தழங்குமிசையானுஞ்
சுந்தரமணிப்படைகடோற்றுமொளியானுங்
கந்தரமுகைத்துடனுமிந்திரர்கடுத்தார்..... .........(கச)

தரங்கநிரையன்றிஃதுதாவிவருகின்ற
துரங்கநிரையென்னநனிதூண்டுபரிவீரர்
குரங்குளைமணிப்புரவிகொண்டமருடற்று
மரங்கமலிகின்றவளைகைக்கிறைவரொத்தார்........(கரு)

சடசடவொலிப்பவுருள்சக்கரமழுந்திப்
புடவிகுழியக்கடவுபோர்ச்சகடமள்ளர்
சுடரிரதமூர்ந்துபலசூரியர்கடம்மு
ளடலமர்குறித்தவரையையெனநிகர்த்தார்..........(கசு)

ஓச்சுநெடுவாளெறியினும்நெதிரொறிந்து
மீச்சென்மணிவேல்புடைவிலக்கியெதிருய்த்து
மேச்செறிவறுத்தெதிர்தொடுத்துமிகல்வெய்யோர்
பூச்செருகிவிஞ்சையர்புகழ்ந்திடமலைப்பார்.........(கஎ)

அடையலருளஞ்சுழலவாறுபடையுஞ்சூழ்
புடைநகர்வளஞ்சிறிதுபொற்புறமொழிந்தா
முடையவர்களும்பரொனவுற்றுநலஞரு
மிடைநகர்வளஞ்சிறிதெடுத்தினியுரைப்பாம்........(கஅ)

## இடைநகர் - வேறு.

அளிதுன்றியவுய்யானமுமவற்றூடலர்பம்பிக்
குளிர்தங்கியதடமுங்குளிர்பொய்கைக்கருகெல்லாம்
புளினங்களுஞ்செய்குன்றமும்புத்தேளிருமேவு
மொளிபில்கியமணிமேடையுமுலப்பில்லனவுளவால்..........(கக)

பஞ்சாடியவடிகட்கிடைபணிமென்றளிர்தாங்கி
யெஞ்சாதெழுமுலைகட்கிடையிணரும்படுதாரு
வஞ்சாதருள்பெறநின்றனவலர்பூந்தடமாடு
மஞ்சார்குழலியர்நல்கியமணிவானிலைமுகமந்தே...............(உ0)

இழையாலலதிளையார்க்கழகில்லென்றிறுமாந்த
குழையாடியகொம்பேந்தியகொங்கைக்குலமடவார்
விழையாவணியிழைதாங்கியுமிளிருற்றவர்நேராப்
பிழையாலுளநாணித்தலைபெரிதுங்குரங்கினவே...............(உக)

கணைவென்றகண்மடவார்புனல்கலவித்துளைதோறுந்
துணைமெல்லடிபடியும்புனறோய்ந்தாமெனநடையின்
பிணையன்னமுமுலைதோய்புனல்பெற்றாமெனமுலையி
னிணையுன்னியநேமிக்குருகினமுங்களிகூரும்.................(உஉ)

இயலாலினமெனவோகுழலிருள்கூர்கனமெனவோ
வியலாநடைபயிற்றற்கருள்விளையும்வகைகுறித்தோ
செயன்மாண்டொளிர்மணிமேடையுஞ்செய்குன்றமும்விரசுங்
கயனீள்விழியவர்காணியகளிமாமயிலாலும்.....................(உந)

வெயில்பம்பியபூணார்விளையாடும்பொழிலிதனுட்
பயில்கின்றனமவரின்புறுபண்பேசெயன்முறையென்
றுயிரன்னதொர்பெடையோடளியொண்கிள்ளைகள்பூவை
குயிலின்னனவமிழ்தத்திசைகுயிலுஞ்செவிகுளிர..............(உச)

சுணங்குக்கிணையாகச்சுடரழனின்றொளிர்பொன்னை
நுணங்கப்பொடிசெயவோச்சுநுண்ணிடையார்காமுசல
மிணங்கத்தலைமற்றென்றினுமுலைநேரிளநீரை
யுணங்கச்சிதறுபுமாதரையுவகைக்கடனிறுவும்..................(உரு)

## வேறு.

சந்தணிந்தபூண்முலைதம்மைநேர்வதரமென
முந்துறுத்தொறுப்பபோன்முகத்துமுத்தரும்புறக்
கந்தமாலைசோரவார்கதுப்புயங்கமாதரார்
பந்தடிப்பநோக்குவார்பதிந்தநெஞ்சமீட்கலார்............(உசு)

பங்கயப்பரப்பிடைப்பமரம்வீழ்வபோன்றுலாஞ்
செங்கையம்மனைப்பிணர்ச்செல்லுமாதரார்விழி
யங்கவற்றினூடுலாமாடவர்கணோர்முறை
கொங்கைதோன்றவங்கணேகுளித்துநிற்குமோர்முறை..(௨௭)

செழுமணிக்குதம்பைகள்செவியினூசலாடுற
முழுமடற்கமுகிடைமுட்டிவிட்டவூசலைத்
தழுவியாடுமாதரார்தம்மையண்மிநோக்குறின்
வழுவிலார்கள்சிந்தையுமாலினூசலாடுமே..............(௨௮)

கண்ணினீருறைத்துகக்கலாய்த்திரங்குமந்நலார்
வண்ணவாடைகொண்கனூர்வலிந்துவாங்கமாமணிச்
சுண்ணம்விட்டெறிந்துநீள்சுடரவிப்பவப்பொடி
நண்ணொளிகளுற்றலுநாணியோதிதாழ்த்துவார். .. . (௨௯)

கழற்றுறுதகாதலர்கலன்றெறுறுந்தமதுரு
நிழற்றநோக்கிமாற்றவர்நிரந்தரித்துளாரென
வழற்றுளத்தினார்களையவர்கலன்றெறுறுந்தம்
துழற்றுருச்சுவட்டினையுணர்த்திநக்கணைப்பரால் .....(௩0)

மாழைநோக்கணங்கனார்மகிழ்நர்தம்மொடாடிய
தாழைவாளுடையினான்றனாதுநூற்சுவைத்திறம்
பூழைவைத்துவாண்முகம்பொற்பநோக்கிக்கூட்டினுட்
கூழைநாக்கிளிசொலக்கொம்பிற்பூவைகற்குமே.........(௩௧)

சாந்தமான்மதங்களுந்தபனியப்பொடிகளுங்
காந்துபன்மணிகளுங்கமழ்ந்ததொங்கலீட்டமும்
பூந்துணர்த்திரள்களும்பொற்பமல்குகாட்சியான்
மாந்தர்வைகுமண்கொலென்றுவானுளாரயிர்ப்பரோ.....(௩௨)

இலங்கெழிற்றுறக்கமுமிடைநகரெனப்படத்
துலங்கெழிலிடைநகர்த்தோற்றமீதறைந்தன
மலங்கனீர்க்கிடங்குசூழ்ந்தரற்றநொச்சியோங்கிய
நலங்கிளர்ந்தவுண்ணகர்நன்மைதன்னங்கூறுவாம்......(௩௩)

உண்ணகர் - வேறு.

அவுணர்பேய்க்கணமல்லமாணத்தவராரிருளிவையென்றுஞ்
சிவணவோர்புறத்திளிவருநேமியஞ்சிலம்படுத்ததுநீக்கிப்
புவனம்போற்றுறநின்றதேபோன்மதில்புறக்கடலிருண்ஞாலந்
துவாரீத்ததனுடங்கடுத்திருந்ததேசூழ்ந்ததண்கிடங்கம்மா (௩௪)

அடங்கலாருயிர்குடிப்பனதானையுமாடலம்பரிமாவும்
கடங்களூற்றியகுஞ்சரத்திரள்களுங்கவின்றதேர்களுமல்ல
கிடங்கினாடுலாமிடங்கருந்தாமரைக்கேழ்த்தமுள்ளரைத்தாளு
மடங்குறுதமர்பற்பலபுரிந்தடுமதிற்பொறிகளுமாதோ. ............(௩௫)

பெருவனப்பினாற்றுழனியாற்சுவையினாற்பெருகியமணத்தாலெவ்
வுருவுமின்புறமூற்றினான்மலர்க்கிடங்கோடரித்தடங்கண்ணார்
பொருவவைவகைப்பொறிகட்குநுகர்ச்சியாய்ப்பூவையருளமேபோன்
மருவுவஞ்சமுங்கொடுமையுமாழமும்வரம்புறக்காட்டாதால்........(௩௬)

போதியம்பலத்திருநடமாலொடுபோந்துகண்டிணர்த்தில்லைச்
சோதியம்பலத்தாடலுமிருந்தவாதொழுதுகண்ணுறக்காண்பா
னோதியம்புவிதாங்கினோனுடல்வளைத்துயர்த்தியசிரமேபோன்
றுதியம்புரிமதின்மிசைக்கோபுரமைதுவீற்றிருந்தன்றே............(௩௭)

ஓங்குமாடத்தினுயர்வறவுயர்ந்தகோபுரத்தின்மேனிலமெல்லாந்
தூங்குவீங்கிருட்பிழம்புவாய்மடுத்துணுஞ்சுடர்மணிவிளக்கங்க
ளாங்கவான்மிசையுயர்த்தியசேடனாரரித்தடந்தலைச்சூட்டி
னீங்குறுதொளிகளுற்றியமாணிக்கநிரையெனவிறைகொள்ளும்....(௩௮)

ஒளிநிலாவியமதின்மிசையுயர்த்தியவொண்டுகிற்கொடியெல்லாம்
வளியினாட்டயர்வனநெடுந்துறக்கமார்வளத்தினையெதிர்நோக்கித்
தெளிநிலாவியவிந்நகர்வளத்தினைச்சிறிதுமொவ்வாதென்றே
குளிருநீர்ப்புவிதெளிதரமுடித்தலைகுலைத்துநிற்பனபோன்ற..... ...(௩௯)

நாகவைப்பினைத்தலைப்படுமகழியுநாமவிஞ்சியுஞ்சொற்றூந்
தேகமற்றவன்கணைகளினலிபவர்திருவெலாமுறவாங்கி
யேகமற்றவெண்ணிரண்டுறப்பினுளமுதிருக்கையோர்ந்தினிதூட்டிப்
போகவைப்பெனப்புணர்பவர்சேரியின்பொற்பினியுரைப்பாமால்.(௪0)

பரத்தையர்வீதி - வேறு.

அடுத்தெதிர்நோக்கினாரறவராயினுங்
கடுத்தலைக்கொண்டெனக்காமமீக்கொள
வெடுத்தபித்திகைதொறுமிலேகித்திட்டனர்
வடுத்தபுகலைச்சுவைவயங்கச்சித்திரம்.. .. ...... (௪௧)

தெள்ளியகலைஞருஞ்சிறப்பென்றுட்கொள
வுள்ளுருகமளியினுளுற்றுமொண்பொருள்
கிள்ளையும்பூவையுங்கிளந்துவாதுசெய்
பள்ளியுமைம்பொறிபறிக்குமென்பவே ..........(௪உ)

சுண்ணமூநறுமணத்தெரிங்கலீட்டமுங்
கண்ணிய துகில்களுங்கலனும்வார்மது
நண்ணியதண்டுநற்கலவைச்செப்புங்கொண்
டண்ணலம்வேதிகையாவிமாய்க்குமே.......... ..(௪௩)

மூழாவொலிகுழலொலிமுறைசெயாடலு
மெழாலிசைகுரலிசையெழுப்புபாடலுந்
தழான்மனையிரதியுந்தானுங்காமவேள்
விழாவயர்களமெனவிளங்கும்வைகலும்...... .....(௪௪)

ஆவிவந்தஃதெனதாவிவந்ததென்
றேவியமனையவரொல்கிக்கொண்டுபுக்
கேவியல்விழிகளாலிளக்கிநெஞ்சகம்
பூவியலனைமிசைப்போகமூட்டுவார்...... .......(௪௫)

போதுகளாடியபொம்மலோதியர்
சூதுகளாடியுஞ்சுவைத்தகாமநூல்
வாதுகளாடியுமருவியாடியு
மாதுகளாடவர்வாகைதீர்ப்பரால்..................(௪௬)

வேறு.

மனைவியைவெறுத்துமைந்தர்வளநிலமனைத்துநல்கி
நினைவொடுவாக்குக்காயநித்தலுந்தம்பாலாக்கத்
தனைநிகரில்லாவின்பந்தருதலாற்கணிகைமாதர்
வினைநிகர்புதல்வர்த்தாழ்த்திவீடருள்குரவர்போன்றார்.............(௪௭)

உறுப்பினுட்குறைவுமின்றியுரிமையொன்றேற்றமாகத்
துறுத்தநெஞ்சுடையவில்லிற்றுணைமுலைமாதர்தம்மை
வெறுத்தெறுழ்மைந்தரெல்லாம்விழைதருபாலரொன்றாற்
கறுத்தகட்கணிகைமாதர்காரிகையுளைக்கற்பாற்றே...............(௪அ)

காமவேள்கலையினுனுங்காரிகைத்திறத்தினுனுந்
தூமமார்குழலினர்க்குத்தோற்றுவிண்ணொளித்தாரெல்லாம்
நாமளாமனத்தராகிநாணிலத்தின்றுகாறும்
வாமமார்மலர்மென்பாதம்வைத்திலருருவுந்தோற்றார்..............(௪௯)

ஒருவர்வாயடுத்ததம்பலொளிர்செழும்பவளவாயின்
மருவிவானமுதாய்மற்றுமடுத்தவர்வாயிற்புக்குப்
பெருமகிழ்வுறுத்தலாலேபிறங்கியவளைவின்மாதர்
பொருவின்மந்திரத்தினுக்கும்புனிதவெந்தழலேயொத்தார்.........(௫0)

செவ்வணிச்சேடிமாரும்வெள்ளணிச்சேடிமாருங்
கௌவையம்பறைகளார்ப்பக்கடைத்தலைமுற்றவைகும்
வெவ்விழிமாதரின்பம்விலைசெயுஞ்சேரியீதா
லெவ்வமில்பொருள்கள்விற்குமெழில்கொளாவணங்கிளப்பாம்...(ருக)

கடைவீதி - வேறு.

பாட்டளிகெண்டிச்சுலவும்பன்மலர்த்தொங்கல்கணுற்றிச்
சேட்டொளிவச்சிரச்சட்டந்திண்பவளத்திரள்காலிற்
பூட்டியுயர்த்திநிறுவிப்பூகமும்வாழையும்யாத்துத்
தோட்டலர்சிந்திமெழுகித்தூமம்பயின்றகடைகள்.............. (ருஉ)

நித்திலக்கோவைமாணிக்கநெடுந்தொடைநீலத்தொடையல்
வித்துருமத்தின்பிணையல்வில்லுமிழ்கோமேதகத்தின்
கொத்துமரகதமாலைகோப்பமைபுட்பராகங்கள்
வைத்தவயிரமுமற்றும்வானவிஞ்ஞமுன்யாத்தார்..................(ருங)

இருவினையாலிருண்மூழ்குமெண்ணிலுயிரும்பெருமான்
கருணையினல்குமுடலிற்கதித்துவெவ்வேறுகன்மங்கண்
மருவிவளர்ப்பனபோலவணிகர்கள்பொற்குவைகொண்டு
பொருள்கள்வெவ்வேறுதமக்குப்பொருந்துவவீட்டுவர்நாளும்.....(ருச)

வரையிற்பொருள்பெரிதென்கோவனத்திற்பொருள்பெரிதென்கோ
குரைபுனற்பூம்பணைமாட்டுக்கொண்டபொருள்பெரிதென்கோ
திரைதவழ்வேலைத்துறையிற்றெவ்வும்பொருள்பெரிதென்கோ
நிரைநிரையாகவளங்கணிறுத்தநியமத்தின்மாதோ..................(ருரு)

தழைத்தகருமக்கியைய‌த்தனுகரணுதியளிக்குங்
குழைத்தகடுக்கைச்சடிலக்குழகன்றிருவருண்மான
விழைத்தகுருமணிமாடத்தீண்டியவெவ்வெப்பொருளு
மழைத்தடங்தொளின்வணிகர்வருவிலைக்கேற்பவளப்பார்..........(ருசு)

முன்னொன்றுரைந்துபின்னொன்றுமொழியுமதங்கள்போலாது
பின்னர்க்கிளப்பதுமுன்னர்ப்பேசுபொருட்குமாறின்றி
மன்னுறுசைவசித்தாந்தவாய்மைநிகர்ப்பப்பின்வேறு
சொன்னிகழ்த்தாமைவிலையைத்துணிந்தறுப்பார்துலைக்கோலார்...(ருஎ)

செந்தமிழ்நாட்டுறைவோருஞ்சேர்ந்தகொடுந்தமிழ்நாட்டின்
வந்திடுபன்னிருவோருமற்றையதேயத்துப்பாடை
தந்திடுமீரொன்பதின்மர்தாமுந்தலைமயக்குற்றுங்
கெந்தவுலகிதுவென்னயாரையுமையத்துறுத்தும்....................(ருஅ)

வாரணம்விற்குநரோர்பால்வாம்பரிவிற்குநரோர்பாற்
றேரணிவிற்குநரோர்பாற்செறிபடைவிற்குநரோர்பாற்
றூரணிவிற்குநரோர்பாற்சந்தனம்விற்குநரோர்பாற்
ரோரணமல்குநியமச்சுந்தரம்யார்சொலவல்லார்....................(ருக)

பிண்டியுநோலைத்திரளும்பிட்டுமவலுஞ்சுவைகண்
மண்டுகனிநெய்மிதந்தவருக்கமும்பாகும்விராவிக்
கொண்டவறையல்பலவுங்கொண்முதலானபுழுக்குங்
கண்டிடுமுன்மணநாசிகலாய்ப்புனலுவிடையூறும்..................(சுo)

வருக்கைச்சுளைமாங்கனிகள்வாழைப்பழமிவைமுற்று
முருக்கொளிரோட்டத்தமுதின்மொய்சுவைதோற்றவல்லாவென்
றுருக்குவிலைசெயுமாதரொண்பொருளோடுருநோக்கிச்
செருக்கியமைந்தருயிருந்தெவ்வுவர்பின்விடல்வல்லார்............(சுக)

பொன்னணிவெள்ளியணிகள்பொற்றவுலோகக்கலன்க
ளென்னவுமில்லையென்றுமேயீந்திடுமாவணஞ்சொற்று
மன்னியசெல்வப்பெருக்கால்வானவர்வைகுபொன்னூடு
வெந்நிடவென்றுவிளங்கும்வீதியின்வண்ணம்விரிப்பாம்............(சுஉ)

மற்றையவீதிகள் - வேறு.

பனவர்மன்னவர்வணிகர்சூத்திரரிவர்பயின்றிடுமணிவீதி
யனகன்மந்திரத்தணிமதிற்புறத்தனவவற்றயலனநான்கென்
றினிதுசொற்றசாதிகடம்முளுயர்ந்தவுமிழிந்தவுங்கலந்தீன்ற
புனிதமில்லவர்தத்தமதொழுக்கொடுபொருந்திவாழ்மறுகன்றே...(சுஙு)

தென்றலூடுவந்தசைதருபந்தருஞ்செறிந்தபந்தரினுள்ளாற்
றூன்றுமாமணிவேதிகையொழுக்கமுஞ்சுடர்ந்தவேதிகையெங்கு
மொன்றுபூரணகும்பமும்வயின்வயினுயர்த்தியகொடிக்காடு
நின்றவார்கொடியருகெலாந்தோரணநிரைகளுந்தெருத்தோறும்...(சுச)

வழுவைவாம்பரிமணிநெடுந்தேர்சனம்வழங்கலினெடுவீதி
புழுதியாடுவவொருமுறையொருமுறைபொருகரிபரிதேர்பொன்
முழுதுமாடவரளித்தளிதொழுக்கியமுதுக்குறைந்தோர்செங்கை
யொழுகுதீம்புனலத்துகளவிப்பனவொருதினம்போனாளும்........(சுரு)

வேறு.

நச்சுறழ்விழியிற்றீட்டினருகுத்தநலத்தகுமஞ்சனக்குழம்பும்
வெச்செனப்புலந்துசிதறியகலனும்விராவியவீதியினவைதா
மெச்சிலென்றறிந்தோபிறர்மனையவர்பாலிணங்கியவவற்றையுந்தொடுதற்
கச்சமதுற்றேவறிந்திலமெவருமடிக்கழறொடுத்தலால்வழங்கார்...(சுசு)

செதுமகப்பயத்தலொருமகப்பயத்தறிலகவாணுதலியர்ப்பயத்த
லெதுவுமின்ருகவிருத்தலென்றறிந்தோரியம்புநான்மலமொங்கின்றிப்
புதுவதினியன்றவணிகலனணிந்துபூவையர்குதுகலந்தழுவ
வதுவைகளயருமதுரமங்கலமேவைகலும்வளமனைதோறும்.............(கூஎ)

வருந்தியவேனில்வருபுனற்கெதிருமள்ளரின்மனமகிழ்ந்தடுத்த
விருந்தெதிர்கொண்டுமலர்முகத்தினிமைவிராவியகுளிர்மொழிகொடுத்துத்
திருந்தறுசுவையினல்வகையுண்டிதேக்கெறிதரநனியூட்டிப்
பொருந்தியதிருவிற்கியைவனபிறவும்புகன்றளிக்குநரவணெவரும்......(கூஅ)

உரம்பெறுபிரமசரியனத்துறைவோருலகனைத்தையுமறநீத்தோர்
பரம்பரன்றெனுதுபுலத்தவர்விருந்துபசையுடையொக்கன்மன்றுறந்தோ
ரரம்புசெயிலம்பாட்டிணரிறந்தாரொன்றையிருவரையுநன்றேம்பி
வரம்பெறுதமைப்பினேம்புநரல்லாதவர்மனையறத்தவணிலரோ..........(கூக)

பஃறிறத்தானுமழிதருபொருளைப்பன்முறையிரந்துகையேற்றுச்
சிஃறிறத்தானுமழிதராவுடலூர்திப்பியகதிகளுஞ்செறிக்கு
நஃறிறத்தினராலிவரிவர்போலநமக்குரியாரெவரென்று
விஃறிவள்பூணுரிரப்பவர்க்கெனைத்தும்வீசலேவிருதெனவுடையார்...... (எ௦)

தங்குலதெய்வமல்லதுதேவசாதியொன்றையும்பணிந்தறியார்
சிங்குதலறியாவன்பினுற்கணவன்சேவடிதொழுதெழுதிறத்தா
ரிங்குறைபவரொன்றிறைஞ்சுதல்போலவிரவியுமதியுந்தாழ்ந்திறப்பக்
கொங்குறைகுழலார்பயிலுமேனிலையுங்கூடகோபுரமும்விண்ணிவர்ந்த....(எக)

குங்குமம்பனிநீர்சிவிறியின்வாங்கிக்குவவுத்தோளாடவர்குலமு
மங்கையர்குலமும்பணித்தெதிராடவயங்குமப்புனன்மணிவரன்றித்
துங்கமேனிலையின்மேடைநின்றிழிவசுரர்தொழுமேருமால்வரைநின்
றிங்குலிகத்தின்விராய்மணிசிதறியிழிதருமருவிபோன்றனவே...........(எஉ)

வேறு.

பனிக்குமேனிலத்திற்பயின்மாதரார்
வெளிக்கணின்றவர்போன்றுவிளங்கலாற்
களிக்கும்வானரமங்கையர்காண்கெனத்
தெளிக்கலுற்றனராற்சிலரைச்சிலர்.................(எங)

தலைவர்தோள்புணர்தையலர்வாண்முக
மலரினுள்ளொளிவெளவுதற்கன்றுகொல்
கலைமதிக்கதிர்காலதரூடுபோ
யுலவியல்லதப்பாலொழிவில்லதே..... ...........(எச)

கற்பினார்மழைபெய்வதுகாண்பவென்
றற்பினலவர்பாலண்முசாதகம்
பொற்பவோதிப்புயல்கண்டுபோக்கொரீஇப்
பற்பல்காலமும்பாடுவமாடெலாம்............... (எரு)

துணைச்சகோரஞ்சுதைகொளத்தன்னிடை
யிணைத்தெஞ்சாமலவிர்மதிக்கோர்பெய
ரிணைக்கணுனனமென்றனர்விண்ணிற்போய்ப்
பிணைத்ததிங்களைப்பாற்றுதற்காய்ந்துளார்........ (எசு)

சென்னைவஞ்சிலம்போசையுந்தீஞ்சொலார்
வண்ணமேகலைவாய்விடுமோசையும்
பண்ணைவண்டின்படர்குரலோசையு
மண்ணன்மாடமருவிரவத்துமே... .. .... . . (எஎ)

பிழிமகிழ்ந்திடுபெய்வளைத்தோளியர்
கழிசிறப்புக்கவற்றலிற்காமவே
ளொழிவுசெய்திலனெண்கணையேவியே
பழியிராப்பகலுஞ்செயநிற்குமே............. .... .(எஅ)

புகரிலாவறமும்பொருளாக்கமும்
பகலெல்லாம்பலவாற்றினுமீட்டுவார்
மகரவார்குழைமைந்தரிராவெலாம்
பகருங்காமப்பயன்பெரிதீட்டுவார்.... . ..... .. .(எகூ)

ஆதுலர்க்குமறுசமயத்தர்க்கு
மோதுவார்க்குமுணவுபெருக்கிய
வேதிலாவன்னசாலையுமேனைய
நீதில்சாலையுஞ்செப்பவொண்ணுதரோ.............(அ0)

பாவலர்பலர்சூழ்தரப்பண்பொடு
நாவலர்கணயந்துநன்னூறெறிந்
தோவிலின்பவுததிபடிதருந்
தாவிலாக்கழகந்தலைதோறுமே.....................(அக)

உளழ்விச்சாவணவோடமறையுளி
சூழ்விச்சைக்கலைவேதியர்துன்னுபு
வாழ்விச்சாதரர்வாழ்த்துமுத்தீவளர்
வேழ்விச்சாலைவிளங்குமிடந்தொறும்............(அஉ)

சரியையோரிரண்டுந்தவிராதவர்
கிரியையோரிரண்டுங்கெழுமுற்றவ
ருரியயோகமிரண்டுமுளுற்றுநர்
மரியதூயமடங்களனந்தமே........................(அ௩)

மூன்றுபாழுமுறையினிகழ்ந்தறத்
தோன்றுமேலைச்சுகப்பெரும்பாழிடை
யேன்றவாழ்வினிதென்னவிருப்பவ
ரான்றமாமடமும்பலவாங்கரோ..................(அ௪)

விண்ணுளாரும்விளம்பவல்லேமெனும்
வண்ணவீதிவளஞ்சொலின்முற்றுமோ
வெண்ணில்வீதியுஞ்சூழ்ந்திமையோர்தொழு
மண்ணல்கோயிலணிசிலகூறுவாம்..................(அ௫)

திருக்கோயில் - வேறு.

வேதநாடருந்தனிப்பொருள்விளங்குமிந்நகர்மே
லேதமாம்வகையேகன்மினென்றிமையாரைக்
காதலாற்புடைவிலக்குவபோன்றுகற்கதிர்க்கு
மாதர்வாண்மதில்வானுறப்பலநிவந்தனவால்......... (அ௬)

மின்னுமாமணிவிளங்கியவிமலர்தூவியின்பாற்
பொன்னினுலிரசதத்தினற்புரையறுமணியான்
மன்னுமாடங்கடயங்குவவயங்குமேருவின்பாற்
றுன்னுநாலிருகுலகிரிதுலங்குவபோன்ற................ (அ௭)

ஏகநாயகற்கினிதுறத்திருவமுதமைக்கு
மேகமேற்றவழ்மடைப்பள்ளிவீங்குதுய்ப்புகையும்
யாகசாலையிற்புகையுமீண்டலினிருநிலத்தோர்
மாகர்போலிமையாதவராகலர்மாதோ..................(அ௮)

அரசசீயத்தின்குரலெழுந்திசையணுகாமை
விரசுவேழங்கணீளிடைவிலகியாங்கிறைவர்ப்
பரசவார்வினைசேயிடைமுழுவதும்பாற
முரசமார்ப்பனமூவிருகாலமுமுகிலின்...................(அ௯)

விண்ணினின்றொளிருடுவெலாம்வினைச்சமம்பிறந்து
மண்ணிமும்மலச்சேற்றினைமலரடித்துணைக்கீழ்
நண்ணவெம்பிரான்றிருமுன்னர்நண்ணியதென்ன
வெண்ணில்பன்மணிவிளக்கிடையறாதிமைப்பனவே.....(௧௦)

தருமமாற்றுநர்க்கல்லதுசந்நிதிச்சார்விங்
கருமையாமெனவனைவருமறிந்தனருய்யத்
தருமமேயுருவாகியதனிவிடையுயர்த்த
வுருவவார்கொடிதிருமுன்னர்விசும்பறத்தோங்கும்......(கக)

உருவம்யாதெடுப்பினுமந்தவுருவினையிருவர்
தருவயாவதுமறிகலான்ஞெழும்பிடைப்படுத்தல்
பொருளதாமெனப்புவியுளோர்தெளிந்துயச்சித்த
தருவிடாதிறைமுடிமிசைமலர்பலசாத்தும்..... ...... ..(கஉ)

பவளத்தூண்மிசைப்பசுமணியுத்திரத்தொளிக
டிவளப்பாய்த்தியவச்சிரப்பலகையிற்செறித்துத்
துவளத்தூக்கியநவமணிமாலைகடுலங்குந்
தவளத்தேசினற்றபணியக்கோயிலொப்பிலதே.... .... .(கங)

தெனுதுதிக்கினனரசறத்தேவர்கடேவன்
றனுதுவிண்ணகந்தழைதரத்தளைமகிழ்சிறப்ப
மனுநிமூன்றினுமாதிசைவர்கள்வழிபடமற்
றனுதிசைவர்வீற்றிருந்தனரருட்கொடைவழங்கி.........(கச)

இனிதுதேவர்கள்யாரையுமுறுப்பிடையடக்கிப்
புனிதம்யாவையுந்தருபொருளெந்தையும்பூக்கு
முனிவிலானினங்கிடந்தருண்முழுப்பயிர்தழைக்கு
மனிதர்தேவர்சூழ்பட்டியின்பெருமையார்வகுப்பார்...(கரு)

விமலநாயகன்விண்ணவர்நாயகன்விடைத்த
சமலர்காணருந்தத்துவநாயகனடஞ்செய்
தமருநாயகனருளினலாங்கவன்பேரூர்க்
குமரிமான்மியங்கூறுவல்வினைப்பகைகுமைப்பேன்....(கசு)

திருநகரப்படலமுற்றியது.

ஆசத்திருவிருத்தம் - கசுo.

௨

# நைமிசப்படலம்.

கடலமிழ்தெடுத்துமாந்துங்கடவுளர்குழாங்களுரு
முடனுறைந்தவியின்பாகமுண்பதுபோலும்வையத்
திடர்தபத்தவங்களாற்றியிருடியரின்னல்வாழ்க்கை
நடலைவேரகழாநிற்குநைமிசக்கானமன்றே..... . . ...... . . .(க)

முறுகியவன்புபொங்கமுறைமுறைவளர்க்கும்வேள்வி
நறுமணப்புகைகள்பொங்கிநாகர்வாழுலகிற்கறபத்
துறுசிறைச்சுரும்பரோப்பியுலாவுதலறியாரொல்லா
மறுவறுகற்பகத்துமலரின்வண்டுழுதேன்பாரால்........... ....(உ)

பிழைதபுதேவர்க்கெல்லாம்பெரும்பசிதவிர்த்தலானு
மழைவளஞ்சுரந்துமண்ணின்மன்னியவுயிர்கட்கெல்லாந்
தழைபசிதவிர்த்தலானுஞ்சகமொருமூன்றுங்காக்கும்
விழைதருசெவிலித்தாயின்மிளிர்வதாலனையகானம் ..... ... (ங)

செருத்தலாஞர்த்தயூபத்திரளினைநோக்கியந்தோ
வருத்துவதிவற்றைவிண்ணோர்வன்பசிதவிர்த்தற்கன்றே
யுருத்தகுமனையதேவர்க்கூட்டுதும்யாமுமென்னுக்
கருத்துறவடிசிலூட்டக்கற்றதுகாமதேனு...... .... . ....... ..(ச)

பறவைகள்யாத்தயூபம்பசுத்தகர்யாத்தயூப
முறமணிக்கமடம்யாத்தயூபமுமும்பருரும்
பறவையும்விலங்குநீர்வாழ்சாதியும்பார்த்துப்பார்த்தில்
வறவினைகிடைத்ததின்றேநமக்கெனவகத்துட்கொள்ளும்.......(ரு)

பராய்ப்பணிமுனிவரானும்பண்ணவர்பயிறலானு
மிராப்பகலிறப்பத்தேவர்கலன்கதிரொறித்தலானும்
விராய்ப்புகைதவழவண்டுவிலக்கியதருக்களானு
முராய்ப்பொழிபசுந்தேன்கற்பத்துலகொடுபொருமக்காடு.....(சு)

திரைதவழ்மணிப்பூம்பொய்கைத்தீர்த்தங்களணிந்துபொன்னம்
வரைசிலையாகவாங்கிமதிலொருமூன்றும்வென்ற
வரையனுக்கிருக்கையாகியருந்தவர்கருத்துமுற்ற
வினையகல்கிடுமக்கானப்பெருமையார்விளம்பவல்லார்.........(எ)

உவாவளரனையகானத்துறுகலியுகத்தையஞ்சித்
துவாபரயுகவந்தத்திற்றெருக்கனர்தவங்களாற்று
மவர்வறுவசிட்டர்வச்சரகத்தியர்வாமதேவர்
தவாதநல்லொழுக்கஞ்சான்றசவுனகராதியானோர்...... ..... (அ)

பரவியவாண்டுநூற்றுப்பத்துறமுடிவுசெய்யும்
பிரமசத்திரயாகத்தைப்பேணினர்வளர்க்கனுற்றார்
கரவறுமனையயாகங்காணியவாங்காங்குள்ள
வரமுறுமுனிவர்தாமும்வந்தனர்தொக்காரன்றே...............(௯)

வேதங்களனைத்துந்தேர்ந்தவியாதமாமுனிவன்பாங்கர்க்
கோதறுபுராணமெல்லாங்குறைவறவுணர்ந்துமுக்க
ணாதனையுளத்திருட்டிநாவினைந்தெழுத்துந்தீட்டுஞ்
சூதமாமுனியுமந்தத்தூத்தவக்கானம்புக்கான். ... . ....... ....(௧௦)

வேறு.

புக்கசூதனையிருந்தமாதவத்தோர்பொங்குகாதலினெதிர்கொடுவணங்கித்
தக்கவாதனத்திருத்தினர்பூசைசாலவாற்றினர்பழிச்சினர்மொழிவார்
மிக்கமாதவம்புரிந்தனமடிகேள்விளைத்தமாதவப்பயனதாய்வந்து
கைக்கணாமலகக்கனிபோலக்காட்சிதந்தனைகருணையாலெமக்கு..........(௧௧)

கருவிமாமழையெழுந்துநீர்பொழியக்கலதிவேனிலினுருப்பமங்குளதோ
பரிதிநாயகனெழுந்தொளிகளுற்றப்பாயிருட்படாமருமையுமுளதோ
பொருவில்வானமிழ்தெய்திடச்சாதல்போவதல்லதுபுணர்வதுமுளதோ
மருவிநீதருங்காட்சியாற்கேள்விவறுமைநீங்குறாதிருப்பதுமுளதோ......(௧௨)

உரைத்தவொன்பதிற்றிருபுராணத்துளுலப்பில்சீர்ப்பிரமாண்டத்திற்சிறப்ப, விரித்திடுங்கௌமாரசங்கிதையில்விளக்கமாண்டநற்குமாரகண்டத்தி,னிரைத்திடுஞ்சிவதலங்களின் மேலாநிகழ்த்து மாதிமாபுரத்தின்மான்மியத்தைத் தெரித்தல்செய்தனைமுந்தொருஞான்றுசெம்மலேதெரிந்திட்டனமேனும் ..()

காதன்மங்கையர்ப்புணர்தொறும்புணர்ந்தகாமுகர்க்குளமமைதராவிழைவங்
காதறின்னமற்றதுவெனப்பேரூரமலநாயகன்காதைகேள்வியினெம்
பேதைநெஞ்சகமமைந்திலவதனாற்பெருமவின்னுநீபேசுதல்வேண்டு
மேதமற்றடியேங்கதியடையவெனவிரந்தடிதொழுதனர்மீட்டும்........(௧௪)

முனிவர்தம்முளப்பரிவினைநோக்கிமுகமலர்ந்தருள்சூதமாமுனிவ
னினிதுகூறுவன்கைலைவீற்றிருந்தவெம்பிரான்சயிலாதியைத்தெளித்தான்
புனிதநந்திவேற்குமரனுக்குரைப்பப்புலவுவேலவனுரதற்களித்தான்
றுனிவிலன்னதைவியாதமாமுனிவன்சுரந்தபேரருளாலெனக்களித்தான்.௧௫

தெள்ளவின்னமுதாகியமேலைச்சிதம்பரேசர்தமான்மியமிதனைக்
கள்ளவைம்பொறிகடந்தவர்க்கன்றிக்கரிசுளார்க்குறுபொருண்முதல்கருதி
விள்ளின்விண்டவரோடுகேட்டவரும்வெய்யதீக்குழியிரவியின்வழக்க
முள்ளகாலமுமழுந்திமிக்கின்னலுழப்பர்தியருக்குரைப்பதுதகாதால்......(௧௬)

நீவிரொள்ளறிவெனுமதம் வீறிநீடுமுன்வினைநிகளங்கள்பரிய, வோவில்
வன்மலவெளின்முதன் முருக்கியுடற்றுமாயையுங்கருமமுமென்னுந், தாவில்
பாகொடுதோட்டிகைவிலக்கித்தயங்குபேரருட்காட்டினையடுத்தீர், மூவிலிக்க
தைக்கவளம்வாய்மடுத்தன்முறைமையாமெனச்சொலத்தொடங்கினனால்...()

ஆயகாலையிலருந்தவமுனிவரடிகணந்திபாலரித்தலைச்சுடர்வேன்
மேய்பாணியன்பெற்றதுமதனைவீணைமாமுனிக்களித்ததும்விளங்க
வேயுமாறுமுன்னருளுகவென்னவிலங்கிருந்துயர்வாழ்க்கைவல்வினைக்குச்
சேயனாகியவியாதனைத்தொழுதுதெரிக்கலுற்றனன்சூதமாமுனிவன்......(௧௮)

நைமிசப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ௨௦௮.

---

# புராணவரலாற்றுப்படலம்.

திங்கட்கொழுந்துதவழ்முடியிற்சினவாளரவுந்திரைகொழிக்குங்
கங்கைப்புனலுமணிந்துமதகரியுமரியுங்கதப்புலியு
மங்கத்துறுத்தவடையாளத்தவிருந்தவளநிறம்வாய்ந்து
துங்கச்சிவனையவனுருவாய்ச்சுமக்கும்பெருமைத்துயர்கைலை........(௧)

பொற்கோட்டிமயமகட்பயந்துபுனல்வார்த்தமலற்களித்ததுவு
மற்காதழியப்புரமூன்றுமவிர்பொற்குவட்டுமேருவரை
சொற்கார்முகமாயிருந்ததுவுஞ்சுரர்மாமுனிவர்தொழுதேத்தி
நற்காமியங்கள்பெறக்கைலைநவிரமிடமானமைகண்டே.............(௨)

திரையுந்தரங்கக்கடலேழுந்தேங்கியுயருங்கடைநாளின்
விரையவண்டமுகட்டளவும்வீறிவளருங்கயிலாய
வரையையுளத்தின்மதித்திறைஞ்சும்வரத்தாலன்றேவாமனனார்
புரையினெடியவுருவாகிப்புவனமளந்துதருக்கியதே..................(௩)

பறப்பைக்கொடியோரிருவோரும்பகைப்பக்கடைநாள்வெள்ளத்தி
னிறப்பக்கனலம்பிழம்பாகியெழுந்துவளர்தன்முதல்வன்போற்
சிறப்பக்கடைநாள்வருந்தோறுந்தெண்ணீர்ப்பரப்பின்மிசைத்தோற்று
நறப்பைந்தருசூழ்கைலைவரைநலக்கும்பெருமைநவில்வாரார்.. .....(௪)

குயிலைப்பழித்ததீங்கிளவிக்குமரியிடத்தின்வீற்றிருப்ப
வெயிலைப்பொடித்தநகைப்படையாற்கென்றுமிடமாயிருப்பதிந்தக்
கயிலைப்பொருப்பென்றவனேயாங்கந்தற்கென்றுங்கிழமையுறச்
சயிலத்திரள்களிடமாகத்தலைமைபடைத்ததனையவரை...... .......(௫)

அலையும்புனலுமலருமுறுமவரோமெலியர்பகைதுமிக்குஞ்
சிலையுஞ்சிலையாச்சிலைவிடங்கொடேவன்வலியனெனக்கருதா
துலையும்புவனமென்னேயென்றுன்னிநகைத்தநகையெனலா
நிலையுங்கயிலைவரைகிளைத்துநிமிருங்கிரணத்தொளியினையே ..........(௬)

தூயமுனிவன்விழிகிளைத்தாஞ்சுவைப்பாற்கடலினிடைமுளைத்தா
மேயவிறைவன்முடிக்கங்கைவெள்ளத்துடனுய்ப்பயில்கின்று
மாயவெமக்குநிகராரொன்றகஞ்செய்மதியினொளிமழுங்கப்
பாயகிரணமிருள்சீப்பப்பகலுமிரவுமவணிலையே......... ............(௭)

காமனுடலம்பொடிபடுத்தகனற்கணிறைவன்றிருவருளி
னேமமுடையராய்ப்பழகியிருப்பாரன்றியேனையோர்
தாமவொளிகால்கயிலைவரைச்சாரலடுப்பினவர்விழிக்கு
நாமவிருளேபகல்கூகைநல்லவிழியினிருளேபோல். .................(௮)

அயிராவணமூர்ந்தவளமேயடல்வெள்ளேறுந்தவளமே
பயில்பாரிடமுமடியாரும்பரிக்குஞ்சாந்துந்தவளமே
செயிர்தீர்த்தாங்குப்பயனருளுந்தீர்த்தமனைத்துந்தவளமே
வெயிலார்மணியின்கயிலாயம்வெள்ளென்றிருந்தபரிசானே.........(௯)

வேறு.

மும்மதக்களிற்றினமுழங்குமால்வரை
செம்மணிதாழ்வரைத்தேத்தெலாமொளி
விம்முறநாப்பணேவிளங்குகாட்சிமற்
றம்மவெண்பாற்கலன்கனலிட்டன்னதே ..............(௧௦)

தழற்றலையிரசதச்சாணிறைத்தபா
லழற்றலின்வழிந்தெனவருவிதூங்குவ
சுழற்றியகனறபத்தோன்றிருந்தைபோ
னிழற்றெருளிமணிநிரைநிரைத்தங்கோடுவ.................(௧௧)

மரம்பலதேனவன்னமழையிற்சிந்துவ
வரம்பிறந்தெழுந்தபான்மடங்கத்தண்புன
னிரம்பமேலுறைத்தெனநீடக்காலெழீஇ
யரம்பைகளாற்றுவபோன்றங்காடு. ... ...... (௧௨)

இரவிகளனந்தமங்கிருந்துநோற்றென
வரதனக்குவால்பலவவிருமோர்புறந
கிரணவொண்மதிக்குலங்கெழுமிநோற்றெனத்
தரளவெண்மணிக்குவாறயங்குமோர்புறம . ... .. (௧௩)

கணங்கொடுகனங்கசிவுளத்திறைட்டயர்
துணங்கையும்பாடலுந்துவன்றுமோர்புறம்
வணங்கிடைவானரமகளிராடலு
மிணங்கிசைமுழவமுமியலுமோர்புறம் ... . ... (௧௪)

தேவர்கள்சென்றுசென்றிறைக்குஞ்சற்பகப்
பூவயல்கிடப்பதிற்புகாவண்டன்பர்க
ளேவியமலர்தொறுந்துன்னுமேற்பவ
ரீவிலரொழியவீகுநரைச்சேர்ந்தென .. ... .... ..... (௧௫)

வேறு.

அரந்தைதீர்த்திடுமந்தருகயிலையின்மலநோய்
கரந்ததேசுடைக்கணங்கணநாதரோமுதலா
நிரந்துளார்க்கெலாநீடுறுதலைமையுமிறைவன்
பரந்தகோயிலின்வாய்தல்காவலும்பரித்துள்ளான்.... ..(௧௬)

மறைகளாகமபுராணங்கள்கலைகண்மற்றவையு
நிறையவெம்பிரானருள்செயநிரம்பியவுளத்தன்
முறைசெய்நூலெலாமருள்புரிமுதற்குருவானோ
னறையுநந்தியென்றுயர்பெயரடுத்தவனனையான். ... (௧௭)

பண்டுநான்கொடைந்திரட்டியபுராணங்கள்பயில்கா
லண்டர்நாதனையடிதொழுதடிகளேகருணை
கொண்டுநீயமர்பதிபலகுவலயத்துளவான்
மண்டுமேன்மையின்மன்னியதவற்றுள்யாதென்றேன்... (௧௮)

நந்திவாய்மொழிகேட்டலுநங்கையோர்பாக
னெந்தநாளுமெம்மிருக்கையாயிலயஞ்செயரங்காய்
மந்தணத்ததாயெவற்றினுமேலதாய்வயங்குஞ்
சுந்தரத்ததாலாதிமாபுரியெனத்தொகுத்தான்............ (௧௯

அற்றைநாண்முதலாதிமாபுரியினையனையா
னெற்றைநாளினுமிதயத்துத்தியானித்துவருவா
னொற்றைநாளுளத்துன்னியூற்றெழவிழிபுளகம்
பெற்றவாக்கையோடவசமாயிருந்தனன்பெரிதும்..... (உ௦)

சிவம்பெருக்கியவுளத்தினன்றேகத்தின்குறிகண்
டவம்பெருக்கியவுணரையறுக்கும்வைவேலோன்
றவம்பெருக்கியவிளையரோடாடலைத்தணந்து
நவம்பெருக்கியசெய்கைநாடுதுமெனவடுத்தான் ......(உக)

அடுத்ததோர்ந்தெழுநந்தியையிருத்தினனகத்துண்
மடுத்ததியாதெனக்குரையெனவாய்மலர்ந்தனன்வெங்
கடுத்துழாவியகண்டர்முன்கரைந்தவாநந்தி
விடுத்துக்கூறலும்வியந்தனனுதிமாநகரை ......... ... (உஉ)

உண்மைஞானம்வந்தவர்க்கலாலுருதவான்வீட்டை
யெண்மையாவுறற்பாலதிம்மான்மியமிதனைத்
திண்மைநோயறவிளக்குதுமெனுமகிழ்சிறப்ப
வண்மைநாடியவுளத்தொடும்வைகுநாளொருநாள்......(உ௩)

வெள்ளிமால்வரைமணிமுடிகவித்தெனவிளங்குந்
தெள்ளுபேரொளிச்சிகரவெண்கோயிலினொருபா
னள்ளுமாயிரங்கிரணமுநாற்றும்வெய்யவனோர்
கொள்ளுமாயிரந்தூவொளிகொழிக்குமண்டபத்தில்.....(உ௪)

சண்டபானுவுமதியமும்விடிற்சகமுழுது
முண்டுதேக்குமென்றுருவுவேற்றுமைசெய்துதன்பாற்
கொண்டதாமெனக்கொழுஞ்சுடர்ப்பவளக்காற்கவிகை
மண்டுவாருடல்வெள்ளெனவயங்கிமேனிழற்ற.. ..... . (உ௫)

கவளமால்களிறுரித்தவெங்கடவுடன்பகைக்குத்
திவளுநீகுடையாவதென்னேயெனச்சினந்து
துவளவான்மதிக்கிரணங்கடுணித்தலைத்தாங்குத்
தவளமாமணிச்சாமரைசாரதரிரட்ட. ... .... .......(உ௬)

விழையத்தக்கமென்மலரினைவிடுத்தவேளுடலங்
குழையத்தக்கதேற்குறுகுவதன்றெனவஞ்சுந்
தழையத்தக்கநல்வளியினைச்சார்ந்துநீயுருவி
னிழையத்தக்கதென்றெழுப்புசாந்தாற்றிகளசைய.....(உ௭)

உரகர்போற்றுவானடுத்தவிருவிடையணிந்த
வரவநோக்கியமகிழ்ச்சியாறுடுவாரோடும்
விரவிவேற்றுமைதெரிப்பரிதாகவின்மணிசூழ்
பரவையாலவட்டம்பலவும்பணிமாற . .... .:.. .. (உஅ)

கலந்துபோற்றுநருளத்தெழுமானந்தக்கடனின்
றலர்ந்துவெண்டிரையெழுந்தெழுந்தடங்குவபோல
மலர்ந்தவாண்முகத்தடியவர்வயின்வயின்வீசும்
பொலந்தொடிக்கையின்வெள்ளைகண்முறைமுறைபொங்க...(உ௯)

குழலுந்தோற்பொலிமுழவமுங்குரலிசைப்பாட்டு
மழலைவாய்மொழிமங்கையராடலுமயங்க
நிழலுமேனியின்வனப்படநெடியவன்முதலோ
ருழலுநெஞ்சினர்பெண்ணவாயொதுங்கினர்வணங்க. .. ...(௩0)

பாம்பணர்ந்தனகோட்டியாழ்பலர்கரந்தழுவி
யேம்பலோடுமென்னரம்புளர்ந்தெழுமிசைதேங்கச்
சாம்பவானவர்மேலடர்தழல்விடம்பருகி
யோம்பலாதியாவிருநெடுத்துலப்பிலர்பரச... . ..... . (௩௧)

சமயப்பைம்பயிர்சாவிபோகத்தலையடைந்தோர்க்
கமையப்பொங்கியவலர்முகக்கருணைவெள்ளத்துச்
சுமையப்பாவுமையெனப்படுந்துணைவிழிக்கயல்பா
யிமயப்பாவையெவ்வுலகுமீன்றவளிடமிருப்ப . . .. .....(௩௨)

கோத்திரங்குலந்தழுவினுங்கோதுமுற்றிரியச்
சாத்திரம்பலவுணரினுந்தம்பிரான்பணியிற்
பாத்திரம்பிழையாதெனப்பார்கொளநந்தி
வேத்திரங்கொடுபணிபுரிந்தடர்சனம்விலக்க . . .. . (௩௩)

இரவிமண்டலமிந்துவின்மண்டலமெரியின்
பரவைமண்டலமடுத்தனபவளவானிலத்து
விரவுசிங்கத்தின்பிடர்த்தலைமிளிர்தரப்படுத்த
வரவின்செம்மணியாதனத்தமலன்வீற்றிருந்தான்......... ...(௩௪)

தேவர்தானவர்சித்தர்விச்சாதரர்கருடர்
மூவர்முப்பத்துமூவரும்யாவரும்வணங்கி
யோவிலாததம்முளக்குறையுரைத்ததுநிரப்பி
யேவமீண்டுபோய்த்தத்தமதிருக்கையெய்தினரால்.. ...... . (௩௫)

அன்னசெவ்வியின்மாடகமகதியாழமைத்துக்
கின்னரம்புடைவிழத்தருக்கேழிணரீனக்
கன்னகங்கணைந்திளகக்காந்தருவர்கைவிதிர்ப்பப்
பன்னலம்படவிசையெழூஉம்பாணிமாமுனிவனை .... . (௫௬)

இறைவன்வீற்றிருந்தருளியசேவையுமெவரு
நிறையவேட்டனவரம்பெறுநியதியுமற்றுங்
கறையினீங்குமிக்கயிலையினல்லதையில்லை
யறையினீதுறழ்தலமுளதோவெனவயிர்த்தான் .. . .(௫௭)

ஐயநீங்குவானமலனைவணங்கியெம்மடிகேள்
வையமீதிலிம்மால்வரைநிகர்தலமுளதோ
வுய்யவீங்கருளென்றனனுமையொருபாகன்
செய்யவேன்முகம்பார்த்துநீதெருட்டெனப்பணித்தான் ..(௫௮)

வியங்கொடம்பிரானருடலைக்கொண்டுவேலவனுந்
தயங்குதன்மணிக்கோயிலைச்சார்ந்துபேரூரின்
வயங்குமான்மியம்விளக்குவனியவெனுமகிழ்வாற்
புயங்கள்வீங்கமெல்லணைமிசைப்பொலிவொடிருந்தான் ..(௫௯)

வேறு.

சாரதப்படைகள்சூழுந்தலைவனுக்கொருசொலோதிச்
சூரதமாகநின்றதோன்றலேதெருட்டிவீட்டின்
சீரதர்காட்டுகென்னுச்சேவடிவணங்கிநின்ற
நாரதமுனியைநோக்கிகைமுகத்தருளலுற்றான் . ..... .. . .(௬௰)

உத்தரகயிலையென்றுந்தக்கிணகயிலையென்று
மத்தியிற்கயிலையென்றும்வழங்கிடுங்கயிலைமூன்று
முத்தரகயிலைசுத்தோதகக்கடற்பாலதாகு
மத்தியிற்கயிலையீதுமாடகவீணைவல்லோய் . . ... ....(௬௧)

தெக்கிணகயிலைகன்மஞ்செயத்தகுபரதகண்டத்
தெக்கடவுளரும்போற்றவெழில்வளர்கொங்குநாட்டிற்
றக்கமேற்றிசையினெல்லைமுடிவினிற்றயங்காநிற்கு
மொக்குமிக்கயிலைமூன்றுமாயினுமுரைப்பக்கேட்டி... .. .......(௬௨)

அருந்தவப்பேறுவாய்ந்தவமரர்கண்முனிவரன்றித்
திருந்தவெவ்வுயிருமின்பந்தெய்வுதற்கெளியவல்ல
விருந்திடுவடபாற்குன்றுமிடைப்படுகுன்றுமென்னாப்
பொருந்தியகருணைவெள்ளப்பூரணனுளத்துட்கொண்டு...........(௬௩)

வழுவறுமோலித்தேவர்மானுடர்விலங்குபுள்ளூத்
தழுவிநீருறைவவூர்வதருவெனமறைகள்சாற்று
மெழுவகைத்தோற்றத்துள்ளவெவ்வகையுயிருமுய்யக்
கொழுமணியிமைக்கும்வெள்ளிக்குன்றமாய்த்தென்பானின்றான்...(௪௪)

களத்துநஞ்சடக்குமெந்தைகயிலையங்கிரியாய்நின்றா
னுளத்திடையன்புபொங்கவுறுமடியார்கள்பூசை
விளைத்தலும்வேண்டிமேலால்விரிகதிரெறிக்குந்தேசு
திளைக்குமைம்முகமுமைந்துசிவலிங்கமாகக்கொண்டான். .. .. (௪௫)

இவ்வரைத்தேத்தெவ்வாற்றினிருக்குமவ்வாறேதென்பா
லவ்வரைத்தேத்தும்வேறேயவ்வவுருவந்தாங்கித்
தெவ்வரைமுருக்குமெந்தைசினகரமொருபாற்கொண்டு
முவ்வரைவயிற்றுளோடுமுழுதுலகேத்தவைகும் .. ... .... (௪௬)

அறைகழலமலமூர்த்தியதோமுகமென்னப்பட்ட
மறைதருமுகமுமந்தமால்வரைவேராய்க்கீழ்போய்க்
குறைவில்பல்வளத்திற்சான்றகுறுதுசாரிலக்கணங்க
ணிறைசிவலிங்கமாகநிலமிசைமுளைத்ததன்றே .... . .. (௪௭)

நாதனேயாகின்றாளிர்வரைச்சிலம்பிற்சென்றும்
பூதகாரணமாயைந்துபொறிகட்குமறிவுதோற்று
நீதியார்கருவிபோன்றுநிற்றலாலிலிங்கமைந்து
மோதுவார்பூதமைந்தினுறுபெயரோடுஞ்சேர்த்து ... ...(௪௮)

மன்னியபுலன்கண்மாட்டுமனமன்றிப்பொறிகளைந்துந்
துன்னுதலின்மையாலத்துலங்கியபொறிகட்காதி
யென்னுமம்மனமேபோன்றங்கிருநிலத்தெழுந்துநின்ற
வன்னதோரிலிங்கமாதிலிங்கமென்றாயதன்றே... ...... ..(௪௯)

பாரிடைமுளைத்துநின்றபலசிவலிங்கங்கட்குஞ்
சீரியமுதன்மையானுஞ்செப்புவரனையநாம
மாருமவ்வாதிலிங்கமமர்ந்தருள்கொழிகுமாற்றா
லோருமந்நகரையாதிபுரியெனவுரையாநின்றார் ... . ..... .......(௫௰)

ஆதலிற்கயிலைமூன்றுமடுத்திடுநாமத்தானு
மோதருவளத்தினானுமொக்குமற்றுலகம்போற்று
மேதகுபெருமையானும்விளைத்திடும்பயத்தினானுங்
காதரமிரிக்குந்தென்சார்க்கயிலையேமிக்கதாகும். .... .. . (௫௧)

என்றுவேற்றடக்கைநம்பியிறைஞ்சுநாரதன்கருத்தி
னின்றவையத்தைப்போக்கிநீடுமந்நகரின்மற்றுந்
துன்றியபெருமையோடுதூத்தருகதைகளெல்லா
நன்றமிழ்துருத்தாலென்னநவிற்றினன்மோனமுற்றுன். ........(ருஉ)

புராணவரலாற்றுப்படலமுற்றியது.

ஆகத்திருவிருத்தம் - உகூ0.

---

௳.

# பதிகம்.

வரந்திகழ்தவத்துக்காசிபனுயிர்த்தமாதவன்காலவனென்பான்
பரந்திகழ்வீடுவேட்டனனடுத்துப்பத்தியிற்பூசித்தவாறு
முரந்திகழ்மலரோன்படைப்பறநோக்கியுவணமேக்குயர்த்தவனேவச்
சுரந்திழிசெருத்தற்றேனுமாதவத்தாற்றொடர்ந்துபூசனைசெய்தவாறும். .(க)

கடவுளான்கன்றின்கவையடிச்சுவடுங்கதிர்மணிக்கோட்டினல்லூறுஞ்
சுடர்மணியுருவினெம்பிரானணிந்துசுரபிக்குப்படைப்பருளியது
நெடியவன்றெறுதுகயிலையொன்றமைத்துநிமலனைப்பூசித்தவாறுங்
கடிமலர்க்கடவுள்வடகயிலாயங்கண்டுபூசனைசெய்தவாறும்... ... .......(உ)

காலவனெடியன்கமலனென்றிவர்க்குக்கண்ணுதனடம்புரிந்ததுவு
மாலமொத்தடர்க்குஞ்சூரனைப்பயந்தவமரர்கணிரப்பயத்தினராய்ச்
சாலவைகியதுமவர்தமக்கிரங்கிச்சண்முகன்சூரனைத்தடிந்து
ஞாலமுற்றிறைஞ்சமீண்டியர்மருதநளிர்வரைவீற்றிருந்ததுவும் .........(ந)

சுமதியென்றொருவனந்தணனெடுநாட்டேர்த்தனுய்த்திரிந்துபாதகஞ்செய்
தமர்பதிதணந்துசுலாவுவானெல்லையடுத்திறந்தும்பரொய்தியது
நிமலனைமறவாமுசுகுந்தன்விசும்பினிசாசரர்குலனறுத்தமர்நாட்
குமரியங்கொருத்திநகைத்தலுங்குறுகிநன்முகங்கொண்டுபோற்றியதும் ...(ச)

கழைசுளியயிராவதப்பெரும்பாகன்கடுந்தவப்பிருகுபுத்திரியாற்
றழைதருமரக்கவுருவினையாங்குத்தணந்துபத்திமைபுரிந்ததுவுங்
குழைமுகமடவாரொழுவரோடடுத்துக்கொலைப்பெரும்பாதகந்துமிய
மழையுறழ்தடக்கைமணிமுடிக்கரிகால்வளவனன்கெய்தியவாறும்........(ரு)

ஏழைபாற்றா துவிடுத்தவனுணுகவெம்பிரான்றிருவிளையாட்டான்
மாழைநோக்குமையுந்தானும்வேற்றுருவாய்வயற்ரெழினடவியவாறு
மூழைவாரலைநீயெனப்புடைநிறுவுமுயர்கவிவன்ரெண்டனுரையாற்
பீழைதீர்தில்லையந்தணர்போந்துபிஞ்ஞகனடங்கண்டவாறும்... ... ...... (௬)

வீங்குநீர்க்காஞ்சிநதியொடுமெங்கண்விளங்கியதீர்த்தத்தின்சிறப்பு
மோங்குமால்வரையின்விம்மிதம்பலவுமுயர்பரம்பிரமமாலென்று
தூங்குகைநிமிர்த்தவியாதன்பொய்த்துரிசுதுடைத்ததுந்துணையின்மாதவங்க
டாங்கியவிசுவாமித்திரன்பணிந்துதணிவில்பல்வரம்பெற்றவாறும்...... ..(எ)

காதியாணவத்தையுயிரொலாமுத்திகலத்தலிற்றென்றிசைக்கடவுள்
கோதிலாவரசுகுறைந்தமைநிரப்பக்குழகனைப்பூசித்தவாறும்
போதிஞன்றெளியப்பூரணன்றலத்தின்பொருவின்மான்மியமருளியதுந்
தீதிறுனொருவனங்கிரனென்பான்றேகநீத்தும்பரெய்தியதும்..... .;. ....(அ)

இமவரைமாதுதவம்புரிந்ததுவுமெம்பிரான்வரைந்துகொண்டதும்வேற்
குமரனுக்கிறைவன்வரைவிறுற்றேவசேனையைக்கூட்டியவாறுஞ்
சமரவன்றடக்கையான்குசத்துவசன்றவம்புரிந்தெச்சமெய்தியது
மமர்தருகுலசேகரனெனுஞ்சேரன்குட்டநோயனுக்கியவாறும்... ........(௯)

வருந்திரிலோகசோழன்றன்மதஞ்சேர்மாசறப்போற்றியவாறுங்
கருங்குழலுமையாட்கெம்பிரான்வார்ந்தகாமருவேணிவெண்பூதி
திருந்துகண்மணிகூவிளமுபசாரந்தெரிதரத்தெருட்டியவாறும்
பெருந்திருவளிக்கும்பிரமகுண்டத்துப்பெருகியபூதிமான்மியமும்...... ..(௧௦)

மின்னவிர்சடிலத்திளம்பிறையணிந்தவேதியன்விரைமலர்க்கமலப்
பொன்னடித்தலத்துப்புரிதரும்விசேடபூசனைக்குரியகாலமுஞ்சீர்
மன்னியகுமரநாயகனருளமகதியாழ்முனிவரன்கேட்டுத்
துன்னியமகிழ்விஞண்டருளிறைவன்றுணையடிதொழுதுவாழ்ந்தனனுல்(௧௧)

பதிகமுற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ௨எ௧.

# நாரதன்வழிபடுபடலம்.

வாரணிபூணமுலைவள்ளிமணாளன்
போரணிவேலன்புகன்றுதெளித்த்
காரணிதென்கயிலாயம்வணங்க
நாரணிநாரதனச்சியெழுந்தான். ......(க)

கொள்ளைபடாதனவில்வழுநோச்சியும்
வள்ளையின்வார்செவிக்கங்கையுந்தாங்கிய
தள்ளையன்குன்றலநேர்ந்தனதாழ்ந்துளத்
தொள்ளையிலான்றனைந்தான்வழிக்கொண்டு... .(உ)

தெங்குகொடுபூகஞ்செறிந்துவளங்க
டங்கியகொங்குதலைப்படலுற்றான்
மங்கலசின்மயமால்வரைகண்டா
னங்கண்வணங்கினனன்பினடுத்தான்... .. (௩)

வாக்கியகட்புனன்மார்பநனைப்பத்
தேக்கியவன்புதிளைத்தெழுசிந்தை
யூக்கியவன்மைகொண்டொள்ளியபண்களின்
பாக்கியமன்னன்பறம்பிவர்கின்றான் ..... ..... (௪)

வேறு.

மூவர்கள்வணங்குமுதலென்றுவழிபட்டாங்
கேவரும்வியப்பவிணர்மாமரமிறைக்கும்
பூவமரர்தூவுபொலம்பூவொடுமயங்கி
மேவவரும்வண்டினம்விலக்குவனகண்டான்......... .(௫)

வித்தகவிலங்கலடிகாணவிழைவுற்றுப்
பத்தியொடுநாரணர்பரித்தவுருவென்னக்
கொத்திஞெடுபன்றியொளிர்குன்றடியகழ்ந்து
மெத்துகிழங்காருவனவீணைமுனிகண்டான்...... ........(௬)

காலனுயிர்சாயவடைபாலனுயிர்காழ்ப்பச்
சாலவருள்செய்தவொருசாமிவடிவேயா
மேல்வரைசேர்ந்தவெமையார்தளைவரொன்றே
கோலவிபமெண்ணிலகுறும்புசெயல்கண்டான்..........(௭)

எங்களைநிகர்ப்பவுயிரோடிறைவன்மெய்யிற்
றங்குவனவல்லவுரிதந்தவினமென்று
வங்கெழுகளிப்பினனியார்ப்பவெனமாடே
சிங்கமொடுதோல்புலிசிலைத்தெழுவகண்டான்............(அ)

கையலதுபோதலறியாதுகலைகால்விட்
டுய்யவறியாதுமுயலென்றுறுதருக்கால்
வெய்யவுளியங்கடமைவீழ்கவயமற்று
மெய்முழுதுமேவிவிளையாடுவெனகண்டான்................(௯)

விலங்கலுருவத்தும்விலகாமைவிடநாக
வலங்கறழுவிக்கவினியாங்குவளர்சந்தின்
குலங்கதுவுசூழல்குடிகொண்டுசுடிகைக்க
ணிலங்குமணிநாகமினிதாடுவனகண்டான்...............(௧௦)

மேவிமுனணிந்தவியன்றூலணிகளென்ன
வாவியிகல்வேங்கையிபமாடரியிவற்றின்
றூவிலுரியுந்தலைவெண்மாலிகைகளென்ன
வோவிலருவிக்குடிஞையூர்வனவுங்கண்டான்...........(௧௧)

நால்புழைநெடுங்கையிபநன்றமருடற்றக்
கால்பொரவுடைந்தகழைநித்திலமணித்தூள்
பால்புரைவிபூதிபலவச்சிரமணிக்கல்
சால்பின்வளரொன்பணிதகைத்தொளிர்வகண்டான்.....(௧௨)

செஞ்செவிதமக்குரியசேரியெனவாழு
மஞ்சர்களெழுப்புமணியாழிசைகடுப்பக்
கொஞ்சுகிளிமஞ்ஞைவிளைதோகைகள்கொறிக்கும்
வஞ்சநிமிர்சாரல்வளர்தேன்முரல்வகண்டான்..........(௧௩)

செங்கையினமைந்தொளிதிகழ்ந்ததழலொப்பத்
துங்கவொளிகான்றுவளர்சோதிமரமுங்கைத்
தங்குதுடியின்றொனிதழங்குதல்கடுப்ப
வங்கணமர்வேடரொழுமாகுளியுங்கண்டான்.............(௧௪)

ஏட்டைதருவன்பிறவியென்னுமலையேறும்
வாட்டமும்வயங்குவரையேறவருமெய்ப்பி
னீட்டமுமொருங்கறநிரம்புகுளிர்வன்கால்
சேட்டருணிகர்ப்பவருதிட்டையெதிர்கண்டான்........(௧௫)

வேதனைபிறப்பறவிழைந்தருளினின்றோர்
காதலகனுள்ளொளியிறேடுகலவாமை
வாதனைமலம்விலங்கியாங்குமலிமஞ்சு
மூதறிவினன்சிகரமூடுவதுகண்டான். ..................(கசு)

ஆதிமலநீங்கவிடையாவியருட்பின்னுய்ச்
சோதியிடைமூழ்கும்வகைசூழ்திருவெழுத்தான்
மோதியிடைநின்றமலமுற்றிரிவதென்னக்
காதிவருகாற்றினதுநீங்குவதுகண்டான். ..............(கஎ)

வேறு.

இன்னவாகியவளம்பலகண்டுகண்டிவருநாரதன்வாய்மை
மன்னும்யோகினருள்ளமாதாரமூவிரண்டையுமரீஇயப்பாற்
றுன்னுமாயிரந்தொகுமிதழ்த்தாமரைச்சுடரினையடுத்தாங்குக்
கொன்னுமால்வரையாறையுங்கடந்துபோய்க்குடுமிமால்வரைசார்ந்தான்....()

கருத்தடங்கியோகத்திறைச்சோதியைக்காண்பவர்க்கவணைந்தை
நிருத்தவண்சிலம்பொலியெழுவித்தெனநெடுகிவிண்கிழித்தோங்கு
திருத்தன்வைகியசிலம்பினையடுத்தலுந்தேவதுந்துபியோடு
மருத்திமெய்யடியார்சிவமுழக்கமுமடர்ந்தெழமகிழ்கூர்ந்தான்...........(ககூ)

அங்கிபாங்கரினமைத்தலாற்றெடுவதற்கவனியுளோரஞ்சும்
பொங்குசீதளத்தாவயினெழுகியபுதுமணநதிநீர்த்த
மூங்கிநீறுடன்முழுவதுமணிந்துசெய்முறைமைமுற்றுறவாற்றி
யெங்கணுயகன்றிருமலையிவர்ந்தனனிவர்ந்தயாழ்மணித்தோளான்........(உo)

இமயமீன்றவளோதியுமைங்கரனிறும்புசூழ்தடங்குன்றுஞ்
சிமயமோங்கியநான்முகன்விலங்கலுஞ்செங்கண்மால்வளர்வெற்பு
மமைவிராவியவேலவன்பறம்புந்தனடிவரையெனத்தாழ
வுமையொடாரணமறிகலானிருப்பநீண்டொளிர்வரைமுடிசேர்ந்தான்..(உக)

சேர்ந்துசுற்றெலாநோக்குவானடித்தலைசெறிந்தவெற்புகளெல்லாஞ்
சார்ந்தபீடமாயவற்றின்மீப்போகியதனிவரைநலன்முற்று
மார்ந்ததோர்சிவலிங்கமாய்த்தோற்றலுமஞ்சியிம்முடிமீது
போந்துபோற்றவெவ்வேறுருவெடுத்தனனெனத்தெளிந்தெதிர்போந்தான்()

காந்தநேர்படுமூசியிற்சிவலிங்கக்கடவுடன்திருமுன்னர்ப்
போந்தநாரதன்புந்திபோயருண்மலைபுகவிழிப்புனல்கார்போ
லேந்துமார்பகனைப்பமெய்ப்புளகங்களெழமொழிதடுமாறச்
சேர்ந்தவார்கழறாழ்ந்தனனன்பெனுந்திரைக்கடலிடைத்தாழ்ந்தான்......(உ௩)

நெடிதுபோதுதணடெனக்கிடந்தானந்திரபபுநெஞசகத்தோடும்
படியின்மீதெழுந்துசசியிலிருகையும்பதிததுவெள்ளியங்குன்றின்
முடியின்வீற்றிருநதருளியபராபரமுககணசயபோறறி
யடியனேறகருளபுரிநததறபுதமெனவறைநதுபூசனைசெயதான் . ...(௨௪)

அமரர்விஞ்சையாசிததாசாரணரருநதவததினரிவாநாளுந
தமதுவைபபெனவழிபடுமிரசததசயிலவுசசியினவேறகைக
குமரனைகரனுமைமையொடுமைநதருகவொணடுவீறறிருகின்ற
விமலன்முந்துறவீணையினெழானமுறைவிகிகயேநதினன்மாதோ .... (௨௫)

வேறு.

கள்ளிவர்கோதைகரஙகொணடுபூசிதது
வெள்ளிவரையைவிழைநதாரிதுபிறபபி
னுள்ளியபோகமுழநதுமுளமாயநது
தெள்ளுபேரின்பநதிளைகசினரூாமன்றே . ...(௨௬)

செமபொருளாாநதசெழுநதீநதமிழ்கொணடு
நம்பன்கயிலையநதேததுநாவினே
ரிம்பர்நலியுமிடுமைபையுடறகிடநது
மும்பரறியாவுருககிடநதாாமனறே . (௨௭)

காரோதவணணன்கசிநதேததுஙகணணுதறன்
பாரோதுமவெள்ளிபபறமபுளததிறறீடிறோ
நீரோடுகணணினிலைதிரிநதாராயிடினுரு
சீரோடுவைகுநதிருவுடையாாமனறே . ... (௨௮)

வேறு.

போற்றுநாரதன்மீட்டுமபூரணாபாதம்வணஙகிக
கூறறமவென்றவைவேறகடகோமளவலலியன்றனை
யூற்றிருங்கடததானையும்பாகள்வெஞசிறைமீட்ட
வேறறடககையினுனைவீழநதுபழிசசியெழுநதான். (௨௯)

கட்டுபொறசடையொலககாதணிகுணடலமாட
வொட்டுவற்கலைதட்பவுளளமெழுநதுமுனசெல்லச
சட்டவெறபினிழிநதுசாரலினமேறறிசைசசூழ
லட்டுநல்லொளிசசெம்பொனலையஙகணடஙகடுத்தான். (௩0)

வேறு.

ஒழுகொளித்தரளநாற்கோட்டுவாபபல்மருஙகுசூழ
விழுகுமும்மதவெள்ளத்தினிராயிரஙகோட்டுவேழ
முழுகொளிபபுவனப்பொற்றோமூட்டியகலினப்பாய்மா
மழுகுபொற்படியினீண்டவாய்தலின்முன்னர்நிற்ப (௩௧)

கழுக்கடைபிண்டிபாலங்கப்பணமுசலஞாங்கர்
மழுக்கதைதண்டுநேமிவச்சிரஞ்சுரிகைசூல
மெழுக்குயஞ்சிலைவாள்பாசமின்னபல்படையினோடு
மழுக்கடையாதபூதராலயமருங்குமொய்ப்ப. ............(௬௨)

பணைதுடிபடகந்தக்கைபணவந்திண்டிமந்தடாரி
கிணைகுளிர்பதலைமொந்தைசல்லரிபம்பைகேழ்மண்
கணைவளைகோடுபீலிகாகளந்தாரைமுற்றுந்
துணையறுகணங்களோர்பாற்சுவையமிழ்தெனச்சேவிப்ப.(௬௩)

விராவுநைவளமுன்னெட்டும்விளக்கஞ்செய்குறிஞ்சியாழு
மராகமுன்னனைவந்துமாக்குறும்பாலையாழும
பராவிவின்னவரும்போற்றும்படுமலைப்பாலைமுன்னாந்
தராதலம்வியக்குமெட்டுஞ்சார்ந்திடுமருதயாழும்.... ......(௬௪)

நேர்திறமுதலாநான்குநிகழ்த்தியமுல்லையாழுந்
தேர்தருநெய்தற்கானதிறனியாழ்விளரியெல்லா
மார்தருபுலவரோர்பாலமைத்திசையெழுப்பவோர்பால்
வார்தருகுழலின்பேதமனைத்தும்வல்லவர்வாசிப்ப.... ... .(௬௫)

வேறு.

காந்தாரம்புறநீர்மைகௌசிகங்குச்சரிநளுத்தைகவுடிநாட்டை
வாய்ந்தோதுஞ்சாதாரிகௌவாணங்கொல்லிக்கௌவாணங்காஞ்சி
யாய்ந்தார்கொள்சாயரிபஞ்சுரம்பழம்பஞ்சுரங்குறண்டியமிழ்தாய்க்காதிற்
போந்தேறுமலகரிநற்பயிரவியென்றிவைவல்லார்புகழ்ந்துபாட.........(௬௬)

கொடுகொட்டிபாண்டரங்கங்காபாலமெனுமிறைவன்கூத்துமூன்றுங்
குடைகொட்டியெனுங்குமரனுடனிரண்டுங்களங்கொண்டொருபாலாடக்
குடமல்லுமரக்காலல்லியமென்னுந்தமக்குரியகூத்துநான்குங்
குடம்வெல்லும்வளைக்கரத்தோரநேகரவணொருபாங்கர்க்கொண்டுபோற்ற.()

உருத்திகனழங்கணைக்கிழவரநேகர்தமக்குரியபேடுவந்துகாட்டப்
பருத்தபுயத்தயிராணிகடையமிடமலர்மாதுபரவையாடச்
சுரித்தகுழற்குமரிமரக்காறழுவவெழுமாதர்துடிகொண்டாட
வரித்தமுலையரம்பையர்கள்கரணமுதற்பலகூத்துமருவியாட..........(௬௮)

உறுவசிமேனகையரம்பைதிலோத்தமையென்பவர்பலர்தாமொழுங்கினின்று
நறுமலர்க்கைவழிவிழியும்விழிவழியுள்ளமுநடப்பநடனமாடத்
தெறுவினையைத்தெறுமுனிவர்குணலைபயின்றுரணங்கடிகழவோத
மறுவிகந்ததும்புருநாரதர்பலர்வீணையினிருபால்வதிந்துபோற்ற........(௬௯)

இந்திரரெண்ணிலர்பிரமரெண்ணிலார்பதினொருமூவருமெண்ணில்லார்
சந்திரரெண்ணிலரேனைவானவரெண்ணிலர்நிசாசரரெண்ணில்லார்
கந்தருவர்விஞ்சையர்கள்கருடர்சாத்தியர்சித்தர்கருமதேவ
ரந்தரரென்பவர்பிறருமநேகரகத்தினும்புறத்துமடர்ந்துபோற்ற........(௬௦)

ஆடிகுடைசாந்தாற்றியாலவட்டங்கவரிகொடியனைத்துமொய்ப்பக்
கோடிமணித்தூணிறுவிக்குயிற்றியபொன்மண்டபத்திற்குமரவேளு
நீடியமும்மதக்களிறுமருகிருப்பவுமையிடப்பாணிலவத்தேசு
கூடியபொற்றவிசினிடைவீற்றிருந்தான்மன்றுணடங்குயிற்றும்பெம்மான்()

அத்தகையகோயிலினையடுத்தநாரதமுனிவனன்புபொங்கப்
பைத்தமணிவாயிலிடைச்சடைசழங்கவுடைசழங்கப்பன்னுவீணை
கைத்தலத்தின்மேக்குயர்த்திச்சனநெருக்கினூடேகிக்கடந்துவாய்தல்
சுத்தமருள்கோமாதருடனிமிலேறிருந்தநெடுஞ்சூழல்புக்கான்.. ,........(௬௨)

வேறு.

ஆங்கணெட்டினுமைந்தினும்
பாங்கினாரைப்பணிந்தன
னோங்குகையிணையுச்சியிற்
றாங்கிமுன்னுறச்சார்ந்தனன். .. . . . (௬௩)

அந்தில்வந்தடாமாசனம்
பந்திகொள்ளப்பணித்துலா
நந்திகண்டிவனாரதா
முந்துகென்னலுமுந்தினான். .............. (௬௪)

அன்றினார்புரமாரழற்
கொன்றவூட்டியவுத்தம
னென்றுவந்தனையோவென
வின்றுவந்தனனென்றனன்.. ... , .....(௬௫)

ஆலமார்ந்தமிடற்றினான்
கோலநோக்கிக்குளிர்ந்தனன்
சாலவன்புதழைத்தெழச்
சீலமார்துதிசெப்புவான். .. .... ........(௬௬)

வேறு.

தண்ணார்மதியுந்தழல்வாளரவுஞ்சடிலத்தணியுந்தலைவாசரணம்
பண்ணாரிசையும்பகைமான்குரலும்படர்செஞ்செவிநாயகனேசரணம்
பெண்ணாமுமையுநீயாணுருவும்பிணையுந்திருமேனியனேசரணம்
விண்ணாடருமண்ணவரும்பணியும்வெள்ளிக்கிரிவேதியனேசரணம்.... (௬௭)

அண்டங்களனைத்துநொடிக்குமுனமடலைப்பொடியாக்குநுதற்சுடராற்
பண்டின்பமளிக்குமலர்க்கணைவேள்படவென்றருண்மீளிமையாய்சரணங்
தொண்டொன்றுமலாலறியாதவர்தஞ்சுரிகுஞ்சிமுடிக்கணியாஞ்சரண
மிண்டுந்தருமன்படிவத்துதவும்வெள்ளிக்கிரிவேதியனேசரணம்.........(சஅ)

தண்டாதுலகோர்க்குவரம்பலவுந்தழையச்சொரியங்கையின்மும்மலமு
மண்டாதடைவாருடலும்பொருளுமனுவுந்தரவேற்றருள்வாய்சரணங்
கண்டானலனென்றெவரும்பரவுங்கடியார்மலர்துன்றுபதத்திடைமண்
விண்டான்பதுமக்கண்ணீந்தருளும்வெள்ளிக்கிரிவேதியனேசரணம்.....(சக)

மத்தக்கரியீருரிபோர்த்தருளும்வயவாவியவார்க்கருளாய்சரணம்
பத்திக்கமிழ்தாகியினித்தருளும்பரமாபுரமாய்த்தவனேசரண
மெத்திக்குமிறைஞ்சநடம்புரியுமிறைவாமறைவாய்மொழியாய்சரணம்
வித்தைக்கொருவைப்பெனவேதிகழும்வெள்ளிக்கிரிவேதியனேசரணம்.(ருo)

அழலங்கையினாய்சரணஞ்சரணமரிதங்கையினாய்சரணஞ்சரணம்
பழியென்பணியாய்சரணஞ்சரணம்பரவென்பணியாய்சரணஞ்சரணங்
குழவெண்மதியாய்சரணஞ்சரணங்குணவோர்மதியாய்சரணஞ்சரணம்
விழிமும்மையினாய்சரணஞ்சரணம்வெள்ளிக்கிரியாய்சரணஞ்சரணம்...(ருக)

செய்யாவுருவாய்சரணஞ்சரணஞ்செய்யாய்கரியாய்சரணஞ்சரண
நெய்யாவுடையாய்சரணஞ்சரணம்நெய்யார்படையாய்சரணஞ்சரணம்
பொய்யார்க்குரியாய்சரணஞ்சரணம்பொய்யார்க்கரியாய்சரணஞ்சரணம்
வெய்யாய்தணியாய்சரணஞ்சரணம்வெள்ளிக்கிரியாய்சரணஞ்சரணம்.(ருஉ)

வேறு.

எனநாரதனேத்துதலும்பகவன்
பனவாவிழைவோதுபணித்துமெ
வனகாவுனதாளுறுமன்படியேன்
மனமாரவழங்குதிமாலறவே...................(ருங)

காரார்தருதென்கயிலாயமிதின்
வாரார்முலையோடுமகிழ்ந்தருளின்
சீரார்தருசேவையெந்நாளுமெனக்
காராவமுதேயருளென்றனனே...............(ருச)

அவ்வாறிறைவன்வரமாங்கருளச்
செவ்வாய்மையினான்கொடுசேவடிதாழ்ந்
தொவ்வாமலமோப்பியபோதிவனத்
துவ்வாவமுதுந்தொழமீண்டனனே..........(ருரு)

வேறு.

கற்பகவேலிசூழ்கடவுளாணிரைகள்வைகப்
பொற்பிருநிதிகள்கோடிபொலிந்தநீரோடைசூழ
விற்பொலிமணிச்செய்வைப்பின்வெள்ளிமேல்வேய்ந்திட்டுள்ளா
லற்புதக்கவிகைப்பூங்கலமுத்துமம்பலமுங்கண்டான்...............(ருசு)

வெள்ளியம்பலமுன்றாழ்ந்துவியத்தருநடமும்போற்றிச்
சுள்ளியின்வேலிசூழ்ந்தசுடர்மலைமுகங்களான
தெள்ளொளியிலிங்கமேலாற்செறிமணிமோலியேயா
நள்ளொளிச்சிகரக்கோயினளிவளைவலமாச்சென்றான்.............(ருஎ)

கதிர்மணிக்குலமும்பொன்னுங்கையரிக்கொண்டுபோது
மதிர்புனல்வழக்கருதவற்புதக்காஞ்சிமாடே
முதிர்வளம்பலவுநோக்கிமுன்னிநீள்போதிக்கானத்
தெதிரறுதுறைநீராடியெம்பிரான்கோயில்சார்ந்தான்...............(ருஅ)

கொழுந்தெழுங்கிரணக்கல்லிற்குயிற்றுகோபுரமுன்றாழ்ந்து
தொழுந்தலைக்கரத்திரேடுந்துணைவிழியுறைப்பப்போந்து
விழுந்தனனேற்றின்முன்னர்விழுந்தனமலங்கண்மூன்று
மெழுந்தனனின்பவெள்ளமெழுந்ததாங்குடங்குமாதோ ...........(ருக)

அயனரியரனுமாகியளித்தளித்தழித்துமற்றவ்
வயனரியரனுக்கெட்டாவானந்தப்பொருளேயங்க
ணயனரியரனும்போற்றமுளைத்தருளாதிலிங்க
மயன்றருகுமரனென்றதவத்திறற்கண்டுகொண்டான்................(சுo)

வறுமையுற்றவர்கள்சிந்தாமணியெதிர்கண்டாலென்ன
முறுகியவன்புபொங்கமுதல்வனைருகுபோந்து
மறுகியபிறவிவேலைவுறக்குமொள்ளமிழ்தைக்கண்ணன்
மொறுமொறுத்தமரர்நிற்பமுகந்துகொண்டருந்திறனே......... ...(சுக)

தேக்கியவுளத்தானந்தச்செழுங்கடலூற்றேயென்ன
வாக்கியவிழியினீருமயிர்தொறுமரும்பும்வேரு
மாக்கையைமண்ணுச்செய்யவருட்புனற்குளித்தான்போன்று
நீக்கியமலத்தானுங்குநெடிதுநின்றரிதினீங்கி.........................(சுஉ)

இருள்குடிகொண்டகூந்தலெழில்குடிகொண்டபொற்றோ
ளருள்குடிகொண்டவாட்கணணிகுடிகொண்டகொங்கை
பொருள்குடிகொண்டசெஞ்சொற்புகழ்குடிகொண்டதாளு
மருள்குடிவிலகிவைகுமரகதமயிலைத்தாழ்ந்தான்...................(சுங)

ஒன்றெனப்பலவேயென்னவுருவெனவருவேயென்ன
வன்றெனவாமீதென்னவணுவெனமகத்தேயென்ன
நின்றவன்பரமானந்தநிருத்தஞ்செய்போதிமன்றும்
வென்றவைம்பொறியான்சென்றுவிம்மிதத்திறைஞ்சிப்போந்தான் (சுச)

தவழ்புனற்காஞ்சியாற்றுத்தடங்கரை மருங்குழக்கட்
பவனருட்குறியொன்றன்பாற்பதிட்டைசெய்தாங்குப்பாங்கர்
நவமுறத்தீர்த்தமொன்றுநலத்தகவாக்கியந்தச்
சிவமலிநீரினாட்டிச்செய்தனன்பூசைமுற்றும்........................(சுரு)

அன்னதன்சிவலிங்கத்தினருச்சனைமுறையிற்செய்து
மன்னியவாதிலிங்கவரதனைப்பணிந்தும்வெள்ளி
நன்னகத்திறைவன்கோலநயத்தகக்கண்டும்மையத்
தென்னுமன்பிலாதநூயனின்னணமிருக்கின்றானல்................(சுசு)

வேறு.

இந்தமாநிலம்வழுத்துமெய்த்தவந்திரிலங்குவேற்படைவலக்கரத்தணிந்தோ
ணந்திகூறிடக்கேட்டதுமதனைநாரதற்கவன்றெருட்டியவாறு
மந்திற்கேட்டநாரதனதன்வழியேயடுத்துவந்தனைபுரிந்ததுமெல்லாம்
வந்தவாறினிக்காலவன்வாய்மைமரீஇயதோர்மினென்றறைதருஞ்சூதன்....()

நாரதன்வழிபடுபடலமுற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ருருசு.

---

உ

# காலவன்வழிபடுபடலம்.

வரியளிமதுவுண்டுமதுரமெல்லிசைபாடும்
விரிமலரயனீன்றமேதகுகாசிபனுக்
குரிமையின்மகன்வேதமோதியசெந்நாவன்
கரிசறுதவமாற்றுங்காலவனெனும்பேரான்... .............(க)

நல்வினையோவாமேநயந்துசெய்திடுநாளி
னல்வளர்மலபாகமடுத்தருள்பதிவுற்றுத்
தொல்வினையவமாறத்தொகுதருகருமந்தாம்
பல்வகைகளுமொப்பாம்பரிசுறவிவைநினைவான்..........(உ)

செய்திடுகருமத்தாற்சேர்பயனுலகத்து
மைதிகழிருள்சீக்கும்வானவனுலகாதி
பைதிகழ்மணிநாகப்பள்ளியனுலகந்த
மைதமருலகத்தினுர்வமொடெய்துவதாம்..................(ங)

மேவுமவ்வுலகத்துமேதினிவரைப்பேபோ
லோவிலைடபொறிகட்குமுறுபுலனுகர்வித்தே
போவனகாலங்கள்புதுமையிஒன்றுருவாய்மை
யாவதன்றண்டங்களனைத்துமவ்வியல்பினவே ..........(௪)

வேறு.

காரணமூன்றினன்றிக்காரியநிகழ்வதின்றாங்
காரணமண்டங்கட்குக்கருதுறின்மாயைசத்தி
காரணமில்லாவீசன்முதலுணைநிமித்தங்காண்பர்
காரணமாயைநல்குங்காரியதத்துவங்கள் .......... .........(௫)

தத்துவக்குழுவின்செய்கையல்லதுசகலமில்லை
தத்துவஞ்சடமேயற்றேற்றததுவச்செயறரும்வேறே
தத்துவமானசித்தின்சத்தியொன்றடுத்தல்வேண்டுந்
தத்துவநம்மையென்றுந்தகைப்பதுமில்லையாமே..........(௬)

அத்தகுசித்துநாமேயன்றிவேறுண்டோமற்றுந்
தத்துவவுடலேநாமுந்தருக்கினேனிந்நாள்காறும்
பொத்துதத்துவத்தைநாடிற்பொருந்துநான்வேறுமானேன்
சித்தினைநாடவென்னிற்சித்தும்வேறுண்டுபோலும்.......(௭)

அனைத்துமாய்மாயைம்மையடுத்ததுகருமத்தாகு
நினைத்திடுகருமந்தானுநிகழ்வதாணவத்தினாகும்
வினைத்திருக்கெய்தநிற்றல்வெய்யவாணவவிருட்டு
மெனைத்துயிரினையும்வாட்டுமெபகருவவிரவினாகும் .........(௮)

இத்தகுதொடர்களெய்நாதெவற்றினுமேலாய்நின்ற
வத்தகுகடவுளன்றியறிவெழுபருவமாதி
மிக்குறவினைத்துவீடுவிளைப்பவரிலையத்தேவுந்
தக்கவாவழிபாடாற்றிச்சார்தரார்க்கருளாதம்மா. .........(௯)

அருவுருவிரண்டுமின்றியடர்குணங்குறிகளின்றித்
தெருளுநின்மலமாயொன்றாய்ச்சித்துமாய்ச்சத்துமாகிப்
பொருவில்பூரணமாயின்பாய்ப்போக்கொடுவரவுமில்லா
வொருவனைவழிபாடாற்றலொருவர்க்குமுடியாதேனும்..(௧௦)

மந்திரமூலகிற்றீட்டும்வரிவடிவெழுத்தினின்று
வெந்திறற்பூதமாதிவிலக்குமாபோலவெட்டா
வெந்தையும்வடிவினின்றேயிருண்மலமகற்றிவீடு
தந்திடுமருளாலெங்கோன்றங்கியவடிவுதம்முள்..........(௧௧)

## வேறு.

வண்டுமுரலமுறுக்கவிழுமலர்மேலவனைப்பணிகிற்பி
னண்டமடங்கவுயிரெல்லாமாக்குமாறறருகிற்கும்
விண்டமலரினறுந்துளபவிண்டுமலர்த்தாள்வழிபாட்டின்
மண்டுமுயிரைத்திதிப்படுத்துவளர்க்குமாற்றலுளதாமால்.......(கஉ)

புவனமுழுதுமொருநொடியிற்பொடிக்குமரனைவணங்கினற்
புவனமுழுதுமொருநொடியிற்பொடிக்குமாற்றலினிதருளு
மவுனமுடையராயுமாமகேசரடியைப்பூசிப்பிற்
கவனமறுந்துவிவாகத்திற்கருத்தையுதவிப்புரப்பாரால்.......(கங)

அமரர்விழையுங்கலியாணவழகர்பாதம்பூசிப்பிற்
கமலன்முதலோர்தலைதுளக்கக்கலியாணந்தைமுடித்தருள்வ
ருமைதனுருவந்தமதுருவுமொற்றிநிருந்தார்தமைப்போற்றிற்
சிமயமுலையார்போகத்திற்சிறப்பமோகங்கொடுப்பாரால்.. ...(கச)

தொல்லையுலகம்போற்றெடுக்குஞ்சோமாக்கந்தர்தமைத்தாழி
னல்லமகவுஞ்சந்தானத்தொடர்புமினிதுநல்குவார்
மல்லற்றிகிரிப்படைமால்கைவழங்கிஞாயருச்சிப்பி
னல்லவிரியப்பெரும்போகமகிலம்வியப்பவளிப்பாரால்..... (கரு)

வம்பார்நெய்வவடவாலின்வதிந்தார்கமலத்தாளிறைஞ்சிற்
றம்பால்விருப்புந்துயரிலங்குஞ்சகத்தில்வெறுப்புந்தழைப்பிப்பார்
பம்பாதரவிற்கடிஞைகொளும்பயிக்கவேடத்தைப்பரசிற்
கொம்பேரிடையார்கரநெரிப்பக்கொள்ளும்போகம்வெறுப்பிப்பார்.()

கையிலெடுத்தசூலத்துக்கங்காளரைப்பத்திமைபுரியின்
வையமுழுதும்பணிகேட்பவயிராக்கியத்தையளித்திடுவ
ரெய்யுமதவேளுருப்பொடித்தவிறைவர்மலர்த்தாளருச்சிப்பிற்
பொய்யிலறிவுள்ளசத்தரும்பப்புணர்பக்குவத்தைவருவிப்பார்(கஎ)

எருமையூர்தியுயிர்குடித்தவெறும்த்தாட்புலவர்கழல்பழிச்சிற்
பருவமுடையார்க்கிடர்பலவும்பாற்றியபயங்கொடுத்தளிப்பர்
பொருவில்வலத்துச்சலந்தரனைப்புரட்டுங்கடவுள்பதமேத்தின்
வெருவில்யோகமுழப்பவர்தம்வெகுளித்தழலைவீட்டுமால்.....(கஅ)

பேணுமதில்களொருமூன்றும்பிழைப்பப்பொடித்தார்சரண்பரசிற்
கோணையுயிரைவயமாக்குங்குணமூன்றனையும்பேதிப்பார்
பூணுமதத்துநரமடங்கல்புரட்டுஞ்சரபத்தடிவழுத்தின்
மாணும்வினைமாயையின்வலிகள்வழுவக்கடைக்கண்புரியுமால்(கக)

நெருப்புக்குளிரும்விடமுண்டநீலகண்டர்சரணடுதிப்பி
னிருப்புக்கிடனின்றெனமலநோயிரியல்போகக்கடைக்கணிப்ப
ரொருக்கிமனத்தைமூன்றுதாளொருவர்க்கடிமையுறச்செய்யிற்
கருக்கைசரியைகிரியையோகத்தினுழக்குங்கடன்பணிப்பார்..(உ0)

இருவரிருபாற்கினைத்தெழுந்தவேகபாதர்தமைநாடிற்
பொருவின்ஞானநிட்டையிவைபுந்திவிழையவருள்புரிவர்
தெருளுமறைகண்ஞானியாய்ச்சிவனும்வடுகர்க்கன்புசெயின்
மருவுஞ்சங்கமனைத்தினையும்வழுக்கிமுழுக்கவாழ்வாரால்......(உக)

தருமவிடையேற்றினிதுகந்ததம்பிரானைவிழைந்தடையிற்
பருவமுடையார்க்கனுக்கிரகம்பரிந்துபுரிந்துபுரந்தருளுஞ்
செருகுமிதழிச்செஞ்சடைச்சந்திரசேகரர்தாணமனமுறத்திற்
பெருகுஞ்சனனமரணத்திற்பெரிதுமச்சந்தோற்றுவரால்.....(உஉ)

நின்றுசபையிலானந்தநிருத்தம்புரிவார்க்காளாயின்
வென்றபொறியார்க்கானந்தவெள்ளம்பெருகவிளைப்பராற்
றுன்றுசடையிற்றிரைக்கங்கைசுருக்கினூர்தங்கழலடையின்
மன்றவுயிர்க்குநிரந்தரமானந்தநிகழவழங்குவரால்............(உங)

வேறு.

மொழிந்தநாலிருமூவர்க்குமூலமா
யொழிந்திடாவருவோடுருவாய்மய
லழிந்தவாறொடுபெண்ணுருவாகியு
மெழுந்ததாகுமிலிங்கநன்மூர்த்தியே........... .... (உச)

மாடுவேண்டினுமண்முழுதாளுறும்
பாடுவேண்டினும்பண்ணவர்விண்ணமாள்
பீடுவேண்டினும்பேதுசெய்தியாவையும்
வீடுவேண்டினும்வெய்துமுடிக்குமே.......... ....(உரு)

ஆதலாலிலிங்கத்தினமர்ந்தருள்
வேதநாதனைமேதகுவைப்பிடை
யேதநீங்கவிறைஞ்சுதுமென்றுளக்
காதல்கைமிகக்காலவன்முன்னினன்............. (உசு)

அண்டர்நாதனையாங்கத்தலந்தொறுங்
கொண்டகாதலிற்கும்பிட்டுப்போதுவான்
வண்டுபாடமதுப்பொழிபூம்பொழில்
விண்டுழாவுறுங்கொங்கினைமேவினன்..............(உஎ)

ஆங்குவைகுமமலன்பலதளி
தாங்குகாதலிற்றாழ்ந்தெழுந்தேகியே
யோங்குமாதிபுரத்தினையுற்றனன்
வீங்குகாஞ்சிநதிக்கரைமேயினான்..................(உஅ)

நலக்குங்காஞ்சிநதிக்கரைநண்ணலும்
வலக்கணும்வலத்தோளுந்துடித்தன
வலக்கணந்திக்குமற்புதவைப்பிஃ
திலக்கம்பூசித்தற்கென்றுமகிழ்ந்தனன்..............(உகூ)

மின்னொழுக்கிமிளிர்தரலைத்தெனப்
பொன்னொழுக்கிப்புகுநதிக்காஞ்சிநீர்
தன்னொழுக்கிற்றகப்புகுந்தாடினான்
மன்னொழுக்கமரபுளிமுற்றினான்......................(௩0)

வேறு.

அச்சுவத்திரட்கானகத்தூடுபோயமரர்தம்மடவார்கள்
கச்சுவத்திரங்கலனொடும்வாழ்தரக்கருணைசெய்பெருமானை
விச்சுவத்திருப்பெயருடைவிமலனைமெய்யடியார்போற்றி
நச்சுவத்திரமைந்துடைநாதனைநனியிடத்தெதிர்கண்டான்................(௩௧)

கண்டகண்மலருறுசிறப்பெய்தியகாட்சியிற்புனற்றாரை
கொண்டதண்ணனன்முன்றாழ்ந்திடாதுயர்தருகொள்கையிற்கரம்வேணி
மண்டுசென்னிமேற்குவிந்ததுகருணைமுன்மடிதராதெழுந்தென்ன
மொண்டுகொண்டவேரொடுமயிர்பொடித்ததுமுழுத்தவனடிவீழ்ந்தான்(௩௨.)

புரண்டுமண்மிசையெழுந்தனன்றொழுதனன்புரிசடைநறுந்தூளி
வரண்டிவன்னிலத்துழிதரத்தட்டமிட்டாடினன்வலம்வந்தான்
திரண்டமாமறைபன்முறைபழிச்சினன்சென்றொருமருங்கெய்தி
யரண்டகாதெனவுலகுகைதொடுமுணவறமனுக்கணித்திட்டான்.........(௩௩)

அற்றைநாளிரவுறங்கிலன்மற்றைநாளலரிகீழ்த்திசைவேலை
யுற்றகாலையிலெழுந்துகாலையிற்செயுமுறுகடன்முறையாற்றி
வற்றலோடுகையேந்தினார்கோயிலின்வடகிழக்கினிற்காஞ்சிப்
பொற்றநீர்நதிக்கரையிலோர்சிவலிங்கம்புதிதுறத்தாபித்தான்.............(௩௪)

திருத்தமொன்றவணகழ்ந்தனனத்தடத்திருத்தமந்திரமோதிக்
கருத்தன்சென்னியிலாட்டியாராதனைக்கடனெலாமுடித்திட்டான்
வருத்தியாக்கையைக்கனிபுனல்வளியுண்டுவரிசையினவைநீக்கி
நிருத்தனைந்தெழுத்தயுதத்தையாயிரநித்தலுங்கணித்தானால்...............(௩௫)

ஆதிலிங்கனையருள்பெறக்காலவனடுத்துவந்தனையாற்றிச்
சோதிமல்கினானெனப்பெயர்திசைதொறுஞ்சுலாவலினாங்காங்கு
நீதிமல்குறவதிதருமாதவர்நித்தலுமடுத்தேத்திக்
கோதிலத்தவன்குணங்கள்கொண்டாடுவர்குறுகுவர்தமதெல்லை.........(௩௬)

இசைபரந்தெழவின்னணமயுதமாண்டிவனருந்தவமாற்ற
மிசைபரந்தெழுதேவரும்பூதரும்விரவியெங்கணுஞ்சூழ
நசைபரந்தெழுசீர்த்திவெள்விடையின்மேனால்வகையிசையெல்லாந்
திசைபரந்தெழத்தேவர்கணாயகன்சினகரத்தெதிர்நின்றான்.............(௩௭)

பஞ்சதுந்துபிமுழக்கமுஞ்சிவகணம்பரந்தாகரவென்ன
விஞ்சுறுஞ்சிவமுழக்கமுஞ்செவித்துளைவிரவமெய்ச்சிவயோகி
னெஞ்சமுய்த்தவனாயெனவிழித்தனனின்மலன்றனைக்கண்டா
னஞ்சுமுள்ளமோடெழுந்தனன்பணிந்தனனவசமாய்க்கிடக்கின்றான்...(௩௮)

வலக்கணின்றநான்முகன்முகநோக்கினன்மழமதவிடையூர்தி
நலக்கணின்றனமெனவுளமகிழ்ந்தவனடந்துதன்மருமானை
நிலக்கணின்றெடுத்தொருகரந்தாங்கினனெடியவன்முகம்பார்த்தா
னலக்கணின்றிகந்தனமெனமகிழ்ந்துசென்றவனொருகரமீந்தான்........(௩௯)

அருளிப்பாடியண்வருகெனவிருவருமறைந்துடன்புகுகாலை
யிருளிப்பாடிலதெனுங்குழலுமைமுகமிறைவனோக்கினனன்னா
டெருளிப்பாடுறலரிதுகொலினியிவன்றிகழுநம்மோடொன்றாய்
மருளிப்பாடறவதிபவனல்லனோவெனவருநகைகொண்டாள்...........(௪௦)

தாதைதாதைமூதாஃததன்றாதையுந்தடங்கரந்தரப்போந்த
மேதைமீட்டுமங்கிறைஞ்சினனெழுந்தனன்வியந்தனன்வலம்வந்தான்
பேதைபாகனையிமையவர்க்கிடர்புரிபேமதிலடுமேருக்
கோதைவார்சிலைக்கரத்தனையுள்ளகங்குழைதரத்துதிசெய்வான்........(௪௧)

வேறு.

தேவர்கடேவபோற்றிசெங்கண்மால்விடையாய்போற்றி
மூவர்கண்முதல்வபோற்றிமுக்கணெம்பெருமான்போற்றி
மேவலர்புரமூன்றட்டமேருவன்சிலையாய்போற்றி
பூவலரிதழிமாலைப்புரிசடைப்புராணபோற்றி......................(௪௨)

மண்ணிடையைந்தாய்நின்றுமண்ணுமாய்வதிந்தாய்போற்றி
தண்ணியபுனலினான்காய்ப்புனலுமாய்த்தவழ்ந்தாய்போற்றி
யொண்ணிறவழலின்மூன்றாயழலுமாயொளிர்ந்தாய்போற்றி
திண்ணியவளியிரண்டாய்வளியுமாய்த்திரிந்தாய்போற்றி............(௪௩)

வானிடையேகமாகிவானுமாய்விரிந்தாய்போற்றி
பானுவுள்ளீடாய்நின்றுபானுவுமானாய்போற்றி
தூநகைமதியுள்ளீடாய்மதியுமாய்ச்சூழ்ந்தாய்போற்றி
நானெனுமுயிர்க்குள்ளீடாயுயிருமாய்நவின்றாய்போற்றி...........(௪௪)

ஐம்புலவேடர்தாக்கவலைப்புண்டேனோலமோலம்
வெம்புடற்சிறையிற்பட்டுமெலிகின்றேனோலமோலம்
பம்பிருவினையின்வல்லிபரிந்திடவறியேனோல
மிம்பரித்தொடரினின்றுமெடுத்தருளிறைவாவோலம்...............(௪௫)

பொறிவழிநடந்துகொட்கும்பொறியினைத்துடைப்பாயோல
நெறியெனக்குழியில்வீழ்த்துநிசியிருளறுப்பாயோல
மறிவெனவறிவாய்நிற்குமறிவகலறிவேயோலஞ்
செறிபொழிற்போதிகீழ்த்திகழ்ந்தபேரொளியேயோலம்..........(௪௬)

இருந்துதிமுனிவன்கூறவிமயவெற்புயிர்த்தாளஞ்ச
வருந்துதிக்கையின்வேழமலைத்தருண்முனைவன்கேளாத்
திருந்துதிகவலைச்சேற்றிற்சிக்கயாப்புண்டநெஞ்சம்
பொருந்துதியுவகைவேட்டபொருளினிநுவறியென்றான்.........(௪௭)

இத்தலத்திழிஞரேனுமிருந்தருந்தவங்களாற்றி
யத்தமற்றவருமுத்தியடைவதுவேண்டுநின்பாற்
பத்திமையடியேற்கென்றும்பணித்திடவேண்டும்வேட்ட
முத்தியீதென்றுதேறமொழிந்தஃதீதல்வேண்டும்....................(௪௮)

என்றனன்முனிவர்கோமானிமயவில்வாங்கிநொச்சி
வென்றவன்கருணைபொங்கவேட்டநல்வரங்களீந்து
துன்றியகுழுவைநோக்கத்தொழுதவையகலப்போக
நின்றவன்முடிகைவைத்துநிலையினையுணர்த்தப்புக்கான்............(௪௯)

வேறு.

அகரமோடுறுமகரத்தின்வலிகெடவடுக்கும்
பகரமேவலும்பதிதன்மமுதலியமுறையா
னிகழுமாவயினீடருண்மலமறவுயிர்தான்
றிகழுநாணெனவதனையேசிவமென்பர்தெளியார்........(௫௦)

ஏகமேயெனுமிருக்கெனினிருக்கினுட்பொருள்கே
ளேகமேபதிபலவலவெனுமதுகாண்டி
யேகமேயெனச்சுட்டுவாரொருவனிங்குளனவ்
வேகன்போலலனிருண்மலத்தோடெளனிவனே.........(௫௧)

மன்றவேதமத்துவிதமென்றுரைத்திடுமரபா
லொன்றலாற்பொருளில்லையெனினுணர்த்துதுந்தெளிதி
யென்றும்வேறன்மையுணர்த்துமிக்கிளவியேயிதனு
ணின்றவாருயிர்பலவுந்தானாய்நிற்குநிமலன்......... (௫௨)

சொன்னதத்துவமசியெனுஞ்சுருதியின்மொழியு
மன்னுகாரணப்பதியுநானெனவரும்பசுவு
மென்னவேபொருளிருமைகண்டியைந்துவேறின்மை
தன்னைநாட்டியதல்லதுதனியென்றதின்றே. .......... (௫௩)

ஈண்டுநாமுரைத்திட்டதேபொருள்பொருளேகம்
வேண்டினாருரைத்திட்டதுவெற்றபொய்யாதல்
காண்டிஞாதிருஞானஞேயமுங்கரைந்தன்றா
னீண்டவேதமற்றொன்றெனநிகழ்த்துமோவதுதான்... (௫௪)

சத்தியாலுயிர்க்கிருளறத்தனுகரணாதி
யுய்த்துடங்குநின்றசைப்பதையுணர்கிலார்பதியே
மெத்துமாயையிற்பிணிப்புண்டுவீற்றுவீற்றாகி
முத்தியெய்துமென்பார்மொழிவிரோதநீதெரிதி....... (௫௫)

பொக்கமிக்கறப்புனலொடுபுனல்கலந்தாங்குத்
தொக்குநின்றிடுமறிவுடனறிவெனச்சொல்வி
னொக்குநற்பதியுயிரெனலாமொத்ததென்னிற்
றக்கதன்றுபாசத்துறலாதலிற்றவறே.................... (௫௬)

ஆட்சிநற்கரணங்கெடவாகுமுற்றன்பங்
காட்சியென்னக்காணாதமைமுத்தியேன்மரண
மாட்சிநித்திரைமரத்துயிராதியுமுத்தி
மூட்சிபெற்றனவாமதனான்மொழிபிழையே............. (௫௭)

குளிகைதாக்கலுஞ்செம்புறுகோதுமுற்றழிய
வொளிபெற்றாங்குறுமலமுயிர்க்கருளினாலொழியத்
தெளிவுசேர்வதுமுத்தியேற்செறிமலங்களிம்பின்
விளிவுறாதுநித்தியமதனாலிதுவீணே..................... (௫அ)

அருளெடுத்தலுமெய்வகையுணர்வுமைந்தொழிலும்
பெரிதெடுத்திடுமுயிரெனல்பிழைமறைபேசா
திருளடுத்தசிற்றறிவினுக்கைந்தொழிலெடாதாற்
பொருளடுத்ததண்புனரிநீர்முழுவதாழி................ (௫௯)

மாட்டத்தங்கியகாட்டத்தினங்கியின்மலத்தை
யோட்டித்தங்கலுஞ்சிவமுயிரேகமாமென்னிற்
காட்டத்தின்மையங்கியினுறுங்கரையிருபொருளு
நீட்டித்தோர்ந்துபாரேகமாய்நிற்குமோநில்லா............(௬0)

வேனில்வெப்பிடையுழன்றவர்மென்றருநிழல்பெற்
றூனவெப்பினைத்துடைத்தல்போலரனடிநிழல்பெற்
றீனவல்வினையிரித்துமென்பதும்பிழைமரம்போன்
ஞானவித்தகனவைநலந்தெரிதராதவனே...............(௬௧)

உலகமாய்ச்சிவம்பரிணமித்துயிருமாய்வினையுண்
டிலகுபேரொளியதீதத்திற்றருமென்பரிதுபொ
யுலகுகாரணமாயையுண்ணுன்வினையமல
னிலகுறுமொளிகுருடனுக்கிருட்டறையிடத்தே........ (௬௨)

வினையொப்பெய்துழிக்கருவியுமலத்தையும்வீட்டி
முனைவனல்கியஞானமுஞானத்தின்முதலுந்
தனையுநோக்குறுதேகமாய்ச்சார்பயனுவப்பும்
புனைவதின்றியேநிற்பதுபொருளென்பர்சில்லோர்......(௬௩)

அருவவல்வினைதொலைந்திலாதழியினுங்கருவி
மருவிநிற்பினும்வாய்மையெய்தாதவையொன்றாய்ப்
பொருதுமென்றிடினபேதமாம்புணர்பயனுவப்பு
மொருவுமென்றிடினென்பயனுரைத்தமுத்தியினால்......(௬௪)

இன்னபல்வகையவரவரியம்புமாறெல்லா
நன்னரல்லனகாட்டினநற்றவவினிக்கேண்
முன்னும்வன்மலம்பசுபதிமூன்றுநித்தியமாய்
மன்னுமெங்கணுமாயினுமலமுயிர்ப்பதிவே...............(௬௫)

வேறு.

சிற்றறிவாய்ச்சுதந்திரமின்மையுமாயன்றே செறிந்தவுயிர்கேவலத்தினிருள்விழிபோற்கிடப்பப், பற்றுபருவத்திறைவன்பரிந்துடலவிளக்குப்பணிப்பவதுவாய்வினையிற்படர்ந்துபுரிகாலை, யுற்றமருந்துறுபித்துக்கறிவறியாமையினுமூட்டுதாயெனச்சிவபுண்ணியமுடனின்றுறுவித், தற்றமிலாதியிற்பந்தமனுதியிற்பந்தமுமாயடர்ந்தமலமூன்றினையுங்கீழாக்கியறுத்து....................(௬௬)

தத்துவத்தினுருக்காட்சிசுத்தியுறலோடுந்தனைநோக்கியுயிர்சிவமாத்தருக்கவிறைமுன்னு,யித்தனைநாள்காறுமிடர்ப்பிறப்பிறப்பிற்படுநீயிருஞ்சிவமன்றுனைக்காணவெடுத்தருளுமுதருன்,சுத்தவருளெனக்காட்டக்கண்டருளாற்றெழில்கடோற்றுவலென்றெழவிரும்பினெரிபோலவருளே, யத்தகைமைபுரிவதுன்க்கிலையெனத்தனுண்மையறிந்தருளேமுதலென்னவருளாயேவிடுமால்()

அருளிதுமற்றனாதிமுத்தன்சத்தியவன்சத்திமான்கிரணமலரியைப்போல
றிகவெனவறிந்து பொருவில்சிவத்தினையருளுங்கழியவிழிகதிரைப்புணர்ந்த
தெனவொன்றாகாதிரண்டாயும்படாமற், பெருகுபரமானந்தவெள்ளமொன்
றேதிளைக்கும்பெற்றியிதுமுத்திநிலைபெற்றவுடல்பகலின், மருவும்விளக்கென
மாயுமதற்கமைத்தவூழ்வதிந்திறைவன்றனதாகவேற்றிடுவன்காணே...(௬௮)

சஞ்சிதமுன்பேயழிந்ததேறும்வினையுளதேற்றயங்கருளினிரியுமலமழியா
துசத்தி, செஞ்சுடர்முன்னிருள்போலத்தேயுமுடலுலகிற்றிரிதருகால்வாதனை
யிற்றிறம்புவதுமுளதா, மஞ்செழுத்தைவிதிப்படியுச்சரிக்கினதுவிலகுமாண்
டருளுந்தனிமுதலைமூன்றிடத்தும்வழிபட், டெஞ்சலிலாச்சீவன்முத்திபரமுத்
தியிரண்டுமீண்டேபெற்றிடுவரிறைஞானமுணர்ந்தோரே................(௬௯)

வேறு.

என்றுகாலவமுனிக்கிறைவன்முத்தியருள
நன்றுமுத்திபெறுநற்றவன்மகிழ்ந்துதலைவா
வொன்றுவாதனையுமாக்கையொழிகிற்பினிலையா
நின்றவிவ்வுடலுநீக்குகெனவண்ணலருளும்...............(௭௰)

வெள்ளியம்பலநமக்குளதுவெள்ளிவரையிற்
கள்ளவைம்பொறிகடந்துவருகாலவவதி
னுள்ளுமன்பர்வினையோயவொழியாதுதினமுங்
கொள்ளுமின்பநடனங்குயிலுகின்றனமரோ...........(௭௧)

போதியம்பலமிதாமிதனினும்புரையெலாங்
காதியைந்தொழினடித்துமதுகாணலரிதா
மோதியாய்ந்தவருமாதலினரோவொருதினம்
பாதிமாதொடுபயின்றுபுரிதும்பலர்தொழ................(௭௨)

இன்னதானவரசம்பலமிறைஞ்சியிருநீ
நன்னர்மாலயர்தமக்குநடமாடுதுமிவ
ணன்னவேலைநடனந்தொழுதியாக்கையொழியு
மென்னவோதினன்மறைந்தனனிலிங்கமுதல்வன்......(௭௩)

மும்மைவையகமுமேத்துமுதல்வன்மறைதர
விம்மினன்விழியினீருகவிழுந்தலறின
னம்மவோவிறைவனீங்கவுயிர்வாழ்க்கையமரு
மெம்மனோர்க்குமெளிவந்ததெவனென்றுகசிவான் ......(௭௪)

வண்டுகொளிறைவன்மாலைபுகுமின்மதுமிக
வுண்டுதேக்கெறியலாகுநுமதண்டியொழிவி
னண்டவாணரறியாயொருமடந்தையயர்வு
கண்டிடாமைகடனன்றெனுமினென்றுகரைவான். ...(௭௫)

இதழிவண்டெடரியனேற்றதிளிவந்ததலையென்
பதளுநோற்றனவராவினமுநோற்றனகுறை
மதியுநோற்றதுவயங்குருவினின்றவிழியாற்
பதியைநோக்குறவுநோற்றிலனெனப்பரிவனல்..........(எசு)

ஒன்றவுள்ளகம்வரிக்குமொருவன்படியெலாஞ்
சென்றுநோக்குதிசைதோறுமுருவந்திகழ்தரக்
கன்றினீங்குபசுவிற்கடிதடுத்துநிலமேன்
மன்றவீழ்ந்தெழும்வணங்குமிதுமாயமெனுமால்..........(எஎ)

அன்பெலாமொருபிழம்பெனவடுத்தமுனிவ
னின்பவெள்ளமினிதூறவதிவுற்றிறைவனூர்
வன்பெரும்பழையமாமலமிரித்தவடிவின்
முன்புபோலவழிபாடுகண்முடித்துவருமால்.............(எஅ)

பள்ளமானபிறவிப்பரவைநீந்தமுனிவன்
றெள்ளமாகவருள்பெற்றமைதொகுத்துரைசெய்தாங்
கள்ளவைம்பொறியிலீர்கடவுளான்வழிபடல்
விள்ளுவாமெனவிளம்புமொருசூதமுனிவன்..............(எகு)

காலவன்வழிபடுபடலமுற்றியது.
ஆகத்திருவிருத்தம் - சுகஅ.

---

௨

# காமதேனுவழிபடுபடலம்.



மைக்கிளர்ந்தமணிமிடற்றண்ணலார்
முக்குணத்தினுமூவரைத்தோற்றினு
ரக்கடவுளர்க்காக்கமளிப்பழிப்
பொக்கநல்கவுளுற்றுநராயினர்.........................(க)

அன்னமூவருளம்புயமேலவன்
மன்னுசாயம்புமாமனுப்பட்டத்திற்
றன்னைநேருஞ்சகரனென்பானுல
கின்னறீரவிருந்தரசாளுநாள்...........................(உ)

படைக்கயோகிற்பயின்றிருந்தானவன்
விடைக்குறித்திறைமேயதுமேவலும்
படைப்புநின்றதுபார்த்தனர்வச்சிரப்
படைக்கையானெடுபெண்ணவர்யாவரும்...............(ங)

அம்மவோபகலேயயனித்திரை
விம்மநின்றவிளைவிஃதோர்ந்திடிற்
செம்மையன்றெனச்சிந்தைமருண்டன
ரிம்மெனத்திருப்பாற்கடலெய்தினார்..!...............(௪)

இந்திரன்முதலோரிறுத்தாரென
வந்தில்வாயில்காப்பாளரறைதலு
மைந்தனித்திரைகேட்கமலர்விழித்
தந்தைநித்திரையைத்தணந்தானரோ.. ...... .......(௫)

குரவப்பள்ளிக்குழலியோர்பாலுற
வுரவப்பள்ளியுகுமழைபோலம
ரரவப்பள்ளியினான்றனதாரருள்
விரவப்பள்ளியுண்மேவிவணங்கினார்..................(௬)

அணங்குவேல்வலத்தந்தரவாழ்க்கையீ
ருணங்கும்வாண்முகத்துற்றதியங்கென்னெனப்
பணங்கொள்பாயலினான்வினவப்பணிந்
திணங்குமன்பினிமையவர்கூறுவார்...................(௭)

யாதுகாரணமோவறிகின்றிலோம்
பேதையேம்பலகாற்பிறப்பெய்துபு
சாதலெய்துழியல்லதுசார்தராக்
கோதுநித்திரைகொண்டனனின்மகன்..............(௮)

படைப்புநிற்பப்பணித்திடுமாயுளின்
றொடக்கமுற்றிடுந்தொல்லுயிரொல்லையீ
றொடுக்கமுற்று மொடுங்கினளிக்குநின்
னடைக்குந்தாழ்வுநணுகுவதாகுமே.................(௯)

அன்னவாறணுகாமையுலகெலா
மன்னவாக்கம்வழங்குதல்வேண்டுமாற்
கன்னியந்துளவக்கடிமார்பினா
யென்னமீட்டுமிறைஞ்சினரும்பரார்..............(௧௦)

வேறு.

இலகொளிக்கவுத்துவமிமைக்குமார்பினா
னலமருமமரர்தமார்வநோக்கினா
னுலகுறுபடைப்பொருதேனுவாக்குமா
நலமுறச்செய்துநீர்நடமினென்றனன்...................(௧௧)

விடைகொடுத்தருளலும்வியந்துதுள்ளினர்
கடவுளருடனுறைகாமதேனுவங்
கடிமலர்முடிமிசையணிந்தராவின்மேற்
றடவிழிவளர்பவன்றனக்கிதோதுமால்.................(கஉ)

யானைமேலிடுமெழிற்பருமமில்லுறை
பூனைமேலிடுவதுபுகன்றதொக்குமாற்
கானுலாமலர்வருகடவுள்செய்தொழி
றேனுவாலாமெனச்செப்புகின்றதே....................(கங)

அல்லதூஉமடிகளுக்கசதியாடுதற்
கொல்லுவதாமொருபேதையேனிடைச்
சொல்லுலாநின்மகன்றேற்றத்தோன்றியான்
புல்லுறுபௌத்திரியானபொற்பினால்....................(கச)

என்றுவான்சுரபியங்கியம்பக்கேட்டருண்
மன்றலந்துளவினன்மகிழ்ந்துநோக்குபு
நன்றுநன்றசதியாடிலநவிற்றிய
தின்றுநீயறிதிபட்டாங்கென்றேற்பவே....................(கரு)

அத்தொழிலாக்குதற்குரியையல்லையே
யுத்தமியும்பர்முன்னுரியையென்றனை
வைத்தியாமுரைத்துமோவசிக்கற்பாலைநீ
யெத்திறம்வருமெனிலியம்பக்கேட்டியால்...............(கசு)

அன்பினுக்கெளியவனமலநாயகன்
வன்பினுக்கரியவன்மழவெள்ளேற்றினன்
றன்பதப்பணியினற்சகமளித்திட
லென்பணியயன்பணியெடுத்தலாருமே..................(கஎ)

ஆங்கவன்பூசையாலணைவுறும்பொரு
ளோங்கியவுலகினிலொன்றுமில்லையாற்
பாங்குறவவனடிபணிந்துபோற்றுதின்
வீங்கியசிருட்டிநீவிளைவின்மேவுதி...... ................(கஅ)

வழிபடற்குரியநல்வளைப்பொருத்தலி
னழிமதக்கலுழியுமலர்ந்தபூம்பொழில்
பொழிமதுக்கலுழியும்பொறிவண்டோம்புறுங்
கழிசிறப்பிமவரைகடிதங்கேகென்றான்..................(கக)

மாயவனருடலைவைத்துத்தாழ்ந்தெழூஉம்
பாயசீர்த்தேனுவின்படர்ச்சிநோக்கினர்
மேயவோகையினுளம்விளங்கிவிண்ணவர்
போயினாரவரவர்புகலிடங்களின்........................(உ0)

வேறு.

வழிக்கொளுங்காமதேனுமணியொடுகனகஞ்சிந்திச்
செழிக்கும்வெள்ளருவியார்க்குஞ்சிமயஞ்சேரிமயவெற்பின்
விழிக்கொளிர்சுடர்போனிற்கும்விமலனையுளத்திலுன்னி
யழிக்குமைம்பொறிகளோடவடுத்துமேலிவர்ந்ததன்றே......(உக)

ஆங்கொருசூழல்வைகியரும்புனற்றிருத்தமாடி
வீங்கியவன்புபொங்கவித்தகன்சரணம்பற்றி
நீங்கருந்தவங்கடேவவருடமாயிரநிகழ்த்தத்
தேங்கியகருணைவள்ளறிருவுளக்கருணைகூர்ந்து................(உஉ)

மகதியாழ்முனிவனீண்டுவருகெனமதித்தானன்னான்
பகவனாருள்கொண்டெய்ப்பபபடர்ந்தனனிமயவெற்பிற்
றகவினற்றவத்தினின்றதடமருப்பாவைநோக்கிப்
புகரிலாமுனிவனுங்குப்போந்தெதிர்நின்றனன்றே............(உங)

கண்டதுகாமதேனுக்கரையிலாமகிழ்ச்சிபொங்கக்
கொண்டல்கண்டெழுந்தமஞ்ஞைக்குலமெனவெழுந்துதாழ்ந்து
கண்டிரண்முத்தஞ்சிந்தக்கசிந்துளமுருகிநின்றங்
கண்டரும்வணங்கும்வீணையருந்தவற்குரைக்குமாதோ.........(உச)

வேறு.

அருந்தவர்க்குளருந்தவனுயவருந்தவா
திருந்துதாமரைமேயதிசைமுகனுனவ
னிருந்தயோகினிடையேயிருந்துயின்மேவலின்
வருந்திவானவர்மாயனையண்மவம்மாயவன்..............(உரு)

படைக்கநீபணிமால்வரைமேவிப்பரமனு
ரடிக்கணன்புவழாமையருந்தவமாற்றென
விடுக்கவிவ்வரைமேவியிருந்தவமேயினே
னெடுக்குந்தேவவருடமொராயிரமேகின.................(உசு)

இன்னுநாதனிருங்கருணைக்கிலக்காயிலே
னென்னவோகுறையான்செய்தவத்தினறிந்திலேன்
மன்னுபட்டிகைமவல்லவனுதலின்மாயவன்
சொன்னதும்விளையாடல்கொலென்றுதுணிந்திலேன்..(உஎ)

கயிரவத்துரைகண்ணனுரைத்தனனுயினும்
பயிலருந்தவர்க்கவ்வுழிப்பார்ப்பதிநாயகன்
செயிரறுத்துச்சிந்தித்தனயாவையுஞ்சேர்த்திடும்
புயனிகர்த்தகருணையுமென்னிடைப்பொய்க்குமோ....(உகூ)

இன்பமீதலிற்சங்கரனென்பரவ்வீசனுர்
துன்பமென்பாற்றுடைத்திலனுலெனச்சொல்லெழீஇ
யன்பினுற்ருெழுமாவினைநோக்கியருந்தவ
னின்பெருந்துயர்தீவுதியென்றுநிகழ்த்துமால்..........(உக)

தழுவிநீசெய்தவத்திற்குறையிலதாயினும்
வழுவிலாக்குருக்காலமுந்தேயமும்வாலிதேற்
பழுதிலாதகருமம்விரைவிற்பயப்படு
மொழுகலாறிஃதென்றறுமோதுஞ்சுரபியே.............(௩0)

நின்னின்மிக்ககுருவெனக்கில்லைநின்முன்மலர்
தன்னையான்ருெழுகாலமிதற்குச்சமமில்லை
யின்னவெற்பினிடமிக்கதுண்டெனிலவ்விடை
மன்னியான்செயும்வாய்மையருளெனத்தாழ்ந்ததே,....(௩க)

தாழ்ந்ததேனுத்தழைப்பத்தவத்துயர்நாரதன்
வாழ்ந்தகண்ணருள்வைத்துத்தன்னெஞ்சிடைவள்ளியை
வீழ்ந்தகந்தனையாதிபுரோசனைமிக்குறீஇச்
சூழ்ந்துபோற்றிச்சுதையெனவோதத்தொடங்கினன்...(௩௨)

வேறு.

சுரபியைந்தெழுத்தேயெனத்தொல்லைமாநிலத்திற்
பரவுமந்தணமாய்ப்பயில்கின்றதுபணிந்து
விரவுதேவருமேன்மைநாடரிதுமேவினர்க்குப்
புரவுபூண்பதாலாதிமாபுரியெனும்வைப்பு...............(௩௩)

சரதவந்நகரெவ்வுழியெனத்தளரலைநீ
பரதகண்டத்திற்பசுந்தமிழ்நாட்டினிற்சைய
வரைதனக்குத்தென்றிசையினில்வளம்பயில்கொங்கென்
றுரைதனேடுயரொருபெருநாடுளததனில்..............(௩௪)

மதுவனத்தின்மேற்றிசைப்பொறிவண்டுபண்பாடும்
புதுமலர்த்திரள்சுழித்தெழும்பொங்குகாவேரி
நதிதனக்குத்தென்றிசையினும்பராவதிவடபாற்
பதிவுகொண்டெழும்பவானியின்கீழ்த்திசையுளதால்....(௩௫)

செப்புமந்நகரெல்லைகடிசைதொறுநாடி
ஞெப்பமூன்றியோசனையுளவும்பரார்சூழ்வ்
வைப்பின்மேற்றிசைமுடிவினிலிரசதவரையாய்
முப்புரங்களையெரித்தருண்முதல்வனேயிருந்தான்.......(௩௬)

அமலநாயகற்கேற்புறவவ்வரைவலப்பால்
விமலநாயகிவிளங்குமேமாசலமாஞள்
கமலஞரணன்கண்ணுதல்வலமிடம்வரலா
னிமலன்பாலவர்தாமுநின்றூர்நெடுங்கிரியாய்............(௩௭)

ஆரணன்றனக்கருஞ்சிறையிட்டவேற்கரத்தோன்
பூரணன்றனக்கேறபுறத்தானுமோர்பொருப்பாய்
நாரணன்வரைக்கீழ்த்திசைநண்ணியவ்வரையிற்
பாரணைந்தெழத்தனதியவுருவொடும்பயின்றான். .......(௩௮)

குழைகிழித்தெழுகொடுங்கணைவிழியவளரவி
னிழையணிந்தவனயன்புவியிடந்தவனிவருந்
தழையுந்தத்தமதோங்கலிற்சகமெலாமிறைஞ்சி
விழையவேறுமாய்த்தமதியவுருவின்வீற்றிருந்தார்........(௩௯)

அந்தரத்துளாரனைவருமுனிவருஞ்சூரன்
வெந்திறற்குளமவெரீஇயரனருளினன்மேவித்
தந்தம்பேரினாற்றாபித்தசிவலிங்கமனேகம்
பந்தநீக்குமவ்விரசதப்பறம்பிடையுளவால்...............(௪0)

அவற்றுளொன்றனையகனூறத்தொழினுநாற்பயனு
நிவப்பவெய்துறுநியுதம்பன்முறைகங்கைமூழ்கி
யுவப்பின்விச்சுவநாதனைத்தொழவுறும்பயன்க
டவப்பொருந்துமச்சயிலத்தையொருமுறைகாணின்.....(௪௧)

பண்டுநற்றவம்பயிற்றியமாதவர்க்கன்றிக்
கண்டிடப்படாதத்தகுகடவுண்மால்வரைதா
னண்டர்நாயகனுகியவவ்வரைப்பெருமை
கொண்டுரைத்திடக்கூடுமோவொருவர்க்குங்கூடா.....(௪௨)

அனையவோங்கலைத்தன்னிடத்தணிந்துமூவுலகு
நினைவின்வந்தனைபுரிதரநிமலனுர்க்கிடமாய்த்
தனைநிகர்த்திடுமாதிமாபுரியினைச்சார்ந்து
துனையநின்விழைவெய்தெனச்சொற்றனன்மறைந்தான்(௪௩).

மகதிவீணையின் மாதவனருளினை நோக்கிப்
புகலிலேற்கொருபுகலிடங்கிடைத்ததாலென்ன
வகமலர்ச்சியினமரரானருந்தவன்சரணந்
தகவணங்கியப்பனிவரைதணந்துசென்றன்றே..........(௪௪)

உயர்ந்தசையமால்வரையினையடுத்தவணொழிந்து
வியந்துவிண்ணவர்போற்றுறும்வெள்ளியங்கிரியை
நயந்தடுத்ததுநறும்பயஞ்செருத்தனின்றூறிப்
பயந்தகன்றினையூட்டியுட்பரிவுசெய்சுரபி................(௪௫)

வேறு.

குருமலிநவமணியின்குவடுகள்பலநின்ற
மருவுசிந்தாமணியின்வளத்தனவுலமெல்லாந்
தருவெனமரமெல்லாந்தழையொளியிழைதருவ
கருவளர்கொடியெல்லாங்காமர்வல்லியின்வாய்ந்த......(௪௬)

கற்சுனைநறும்போதுங்காமர்நீர்தவழ்வனவும்
விற்செறியிருநிதியின்மேதகவிளங்கினவாற்
பொற்சிதர்ஞெமிர்சாரற்புல்லியமிருகமெலா
நற்செயல்வளர்காமதேனுவினண்ணினவே..............(௪௭)

எங்கணுந்தேவர்குழாமெங்கணுமரம்பையர்க
ளெங்கணுமிருடியர்களெங்கணுமகம்புரித
லெங்கணும்விம்மிதங்களெங்கணும்பெருவளங்க
ளெங்கணுமெழிற்குகைகளெங்கணுமினியனவே........(௪௮)

அருவியின்குலமொருபாலலர்மடுத்திரளொருபா
லிருவியினிலனொருபாலேனலின்புனமொருபாற்
செருவினைவேடொருபாற்றேன்முரல்வனவொருபாற்
கருமுகிறவழ்வொருபாற்களிமயிலகவொருபால்.........(௪௯)

மும்மதக்களிவேழமூடியவிருளத்துச்
செம்மணிக்குகையுள்ளாற்சேவகங்கொண்டொழிந்து
சும்மைகொண்டொளிர்கிரணச்சோதியைத்தழலென்று
விம்மெனவீமனைப்போலினத்தொடுமிரிவனவால்........(௫0)

சோதிசெய்மரமந்திதுன்னுபுதுயில்கூர்ந்து
பாதியினிரவெல்லைப்பசுமயில்கண்மலர்த்துக்
காதியதழல்வந்ததுகதுவியதெனவோடிப்
போதியல்சந்தானப்பொதும்பர்புக்குறைவனவே.......(௫௧)

நஞ்செனவறியாதுகளிர்மடுப்புனல்பருகித்
துஞ்சியயூகத்தைத்துணையதுவிளையப்போய்க்
கஞ்சமொடொளிர்கின்றகற்சுனையமிழ்தத்தைப்
பஞ்சியிற்றோய்த்தூட்டிப்பருவரலொழிவனவே........(௫௨)

பளிக்குக்குன்றருகண்மிப்பயிரவுமணைகில்லாக்
கிளிக்குறுதுனிநீவக்கெழுமியங்குறுசேவ
லொளிக்கவினிழலோக்கியுதுவெனமுயங்குற்று
வெளிக்கணின்றதுநீங்கவேறுபட்டலமருமே............(௫௩)

இன்னனவளமெல்லாமிமையவர்பசுநோக்கித்
துன்னியமகிழ்தூங்கித்தோடவிழலருந்தி
முன்னுறுநதிக்காஞ்சிமுரிதிரைப்புனலாடி
மன்னுறுகடனெல்லாமரபுளிமுடித்தன்றே...............(௫௪)

வேறு.

சேர்ந்துதன்னிடத்திற்றிகழ்ந்தவைந்துபொருளோடும்
பாரோந்துபலபொருளும்பல்கவமைத்துக்கொண்டண்மி
நீரோந்துசடைமுடியினிமலனைவழிபட்டுக்
காரோந்துமவ்வரையிற்சிலநாள்கழியவதிந்ததே...........(௫௫)

வரைநீஞ்சிதனின்முளைத்தமணிமாலிங்கமைந்தோடுங்
கரைநீர்க்காஞ்சியிருமருங்குங்காழிலமரர்தாபித்த
புரைதீரிலிங்கம்பற்பலவும்பூசித்திருந்தகடவுளான்
றரைசேர்போதிவனத்திறைவன்றன்னைப்பணியவெழுந்ததே

மணிவாரிப்பொன்கொழித்துமலர்களுந்தித்தேன்விரா
யணியாரத்தவழ்ந்தேகுமருநீர்க்காஞ்சிமருங்கூடு
தணியாதவிழைவோடுஞ்சாருங்காமதேனுத்தான்
றுணியார்சோமன்வழிபட்டசோமேசனைப்பூசித்ததே..(௫௭)

வேறு.

என்றவெல்லைகுதனையிருந்தவர்வணங்குபு
நன்றுசோமன்வார்குழனங்கைபாகனார்தமைச்
சென்றுபூசைசெய்தவேதுசெப்புகென்னவன்னவ
னென்றுமன்பினுள்ளகமுவந்தவர்க்குரைக்குமால்............(௫௮)

வேறு.

முதலுகத்தினின்முளரிமேலவன், புதல்வன்றக்கன்பூத்தனனைஞ்ஞூற்றுவர்
குதலைவாய்மொழிக்கொம்பனார்களைச், சுதைநிகர்த்தவத்தோகைமாரினுள்...()

எழுவர்கூடியவிருபதின்மரோன், ளெழுகுதாரகையொண்களார்தமைக்
குழுமிவிண்ணவர்குதுகலங்கொள, முழுமதிக்குநூன்முறையினீந்தனன்.(௬௰)

பங்கயத்தனும்பதினைந்தென்றுசொற், பொங்கெழிற்றிதிப்பூவைமார்த
மைத், திங்களுக்குறச்சேர்த்தினனவர், தங்களன்பனுய்த்தருங்கிவாழுநாள்.

மன்றலங்குழன்மாதுரோகிணி,பொன்றயங்குதோட்புணர்ச்சியேவிழைந்
தொன்றவேனையோரோர்ந்துதேய்கநீ,யென்றுசாபமங்கிறுத்திட்டாரரோ.

அலங்குலைபங்கதிரமரனத்திரி,நலங்கொள்சேவடிநண்ணித்தாழ்ந்தனன்
வலங்கொள்சாபத்தின்வரவுசொற்றன,னிலங்கருந்தவனேவவேகினன்.(௬௩)

குலிங்கராதியோர்குறுகியேத்துமப், புலிங்கத்தீக்கையான்பொருப்பின்
சாரலி, னிலிங்கநூன்முறையிருவிப்போற்றினன், கலிங்கத்தோலினன்கதழ்
வின்முன்னுறீஇ..........................................................(௬௪)

மாதராரிடும்வலியசாபமற், போதமுற்றுதல்புல்லுருதுகா
னுதலாலுடலல்கிமல்குகென், றேதநீங்கவீர்ஞ்சடையினேற்றினன்......(௬௫)

அற்றந்தீர்தரவமலநாயகன், கற்றைச்செஞ்சடைகாணிபெற்றிடும்
வெற்றவெண்மதிவெள்ளிவெற்பின்மே, லுற்றவேலையவ்வோங்கல்காண்பவர்.

அலுக்கண்முற்றுநீத்தாயுண்மல்குற, விலக்கணத்தமரினியமாதரு
நலக்குமைந்தருநவையில்செல்வமுங்,குலக்கடும்பொடுங்குழுமிவாழ்வரால் ()

தாமவாண்மதிதாழ்ந்துபோற்றிய, சோமநாதனார்மேன்மைசொற்றனம்,
காமதேனுவக்கடவுளார்தமை, யேமமல்குறவினிதுதாழ்ந்தபின்.........(௬௮)

வேறு.

கொங்கணேசுரரோயிராக்கதேசுரர்சீர்குலவணர்தேசுரர்வாய்மை
தங்கியவாகீசுரரகத்தீசர்தக்ககாளீசுரர்தீர
வெங்கணும்வளர்வேத்திரவனேசுரர்வீரோசரின்பருள்விசாகேசர்
துங்கமார்சாந்தாகேசுரர்தாலேசுரனையுந்தொழுதுதாழ்ந்ததுவே.........(௬௯)

நயக்குமூலேசரிந்திரோசுரர்நாகேசுரர்காலவேசுரர்நோய்த்
துயக்கறும்வசிட்டேசுரர்வாமதேவேசுரர்காசிபேசர்தொல்வினையைப்
புயக்குநற்சனகேசுரர்புகழ்புலத்தியேசர்பாற்கரோசர்புத்தேளிர்
வியக்கும்வண்பார்க்கவேசர்தம்பதமும்விதியுளிதொடர்ந்துபோற்றியதே.(௭௦)

இடர்கெடுத்தருளுமங்கியீசுரரோமேசுரர்நாரதேசுரர்நாற்
புட்வியும்வணங்குந்தில்லைவனேசர்பூங்கழற்பாதமுமேத்தி
விடபம்விண்டுழாவும்போதியங்கானின்விரிநிழலகத்துறமேவி
யடர்பெருவளமுமதிசயம்பலவுமவ்வயினெடிதுநோக்கியதே............(௭௧)

எங்கணுமுப்பத்திரண்டிலக்கணத்தினிலிங்கமோபலவுளவெங்கு
மங்கணர்பூசைக்குரியபல்லிடமுமமைந்துளவாதலின்யாங்குத்
தங்கிநாமெந்தவிலிங்கத்திலாராதனைபுரிவாமெனவயிர்த்துப்
புங்கவர்சுரபிசிற்பவாறூடுபொலிந்ததாலசரீரிவாக்கு.....................(எ௨)

வேறு.

விண்ணிடைவாழும்பசுவேநின்னையம்விடுதிகண்டா
யொண்ணிறவாண்மதிசூடியநாதற்குரியதல
மண்ணிடையீதன்றிவேறின்மையோர்ந்துயர்மாதவரு
மெண்ணறுதேவருமென்றுமிவணிருக்கின்றனரோ.............(எ௩)

தணவாமையீண்டுவதிதலேவேட்டுத்தண்மாமலரோன்
பணவாளரவிற்றுயில்வோன்கணிச்சிப்படையவனு
மணமாரும்போதிவனத்திடையேவளர்ந்தண்டமளா
யிணராரரசமரமாயிருந்தனரின்புறவே........................(எ௪)

மூவருமாகியபோதியின்மேற்றிசைமொய்க்னக
மாவனைமேவியநாவலிறத்தன்மறுத்திருப்ப
மேவரவேற்றுருவாயிருக்கின்றதுவேதமொடு
தேவருநாடருந்தேவன்றிருவருள்செய்திடவே...............(எரு)

பாவலர்போற்றவளர்பாரிசாதம்பலாமரந்தண்
பூவலர்மாவுஞ்சித்தேசமரமுமெனப்பொலியு
நாவலர்போற்றிடநான்குகந்தம்மினூாவலது
வோவிலதாகியுகமொருநான்குமுறுந்தொறுமே..............(எசு)

கலியிடையீசன்றிருவருளாற்சித்துக்கைக்கொளலா
ணெலிமலர்ப்பன்னீர்மரமெனவையகமோதுவது
நலிதலில்லாதசித்தேசமரமெனுநாமமுறு
ஞெலிதழன்மாதவர்நீக்கமுறுவிந்நெடுவனத்தே..............(எள)

அன்னணம்வேற்றுருவாகியநாவற்கணியிடத்தே
மன்னியபேரருளாறுதிலிங்கம்வயங்கியதான்
முன்னொருநாள்விந்தமால்வரையண்டமுகட்டளவுந்
துன்னுதனேக்கிவடவரைநாணித்துளங்கியதே...............(எஅ)

இதனைக்கழுத்தமிறுப்பதெவ்வாறென்றினைந்துநிற்ப
மதனைக்கழுத்தமிறுத்தபிரான்மதுவார்கமலப்
பதமிக்கழுத்துங்கருத்துடைநாரதன்பார்த்தணவி
யதனைக்கழுத்தமறுமாறுனைப்பவெழுந்ததுவே...............(எகூ)

ஈண்டோர்கணத்திலணைந்துவன்மீகமெனப்பொலிந்து
தூண்டாவிளக்கன்னசோதியைத்தன்னகத்தேநிறுவி
நீண்டானுங்காண்பரிதாகப்பொதிந்துநிற்கின்றதிதோ
காண்டாளையாகநறும்பால்சொரிமடிக்காமர்பெண்ணே.....(௮௰)

இந்தவன்மீகத்திடைநறும்பால்பொழிந்தேத்துதிநீ
சிந்தையில்வேட்டதுபொள்ளெனமுற்றுறுந்தேனுநின்பால்
வந்திடுமாறுமவ்வாறில்வருஞ்செந்நெலாதியுங்கொண்
டந்தணர்க்கீந்துலகின்புறினீயுய்தற்கையமுண்டே............(௮௧)

வேறு.

என்றுவானிலெழுந்தவாக்கொடிடக்கணுடைவிரிச்சியு
நன்றெழுந்ததுநோக்கிநோக்கிநயந்துவாய்மைநவிற்றிய
வென்றவைம்பொறியானையுன்னிவியந்துவாழ்ந்தனமென்றவ
ணின்றதேனுநடந்துகாஞ்சியினீர்படிந்துபடர்ந்ததே..........(௮௨)

காதரம்பலகாவதங்கள்கடந்திருப்பமுக்கண்ணனு
ராதரம்பெரிதுந்தனக்கணித்தாகவன்புதழீஇக்கொடு
நாதனுருருமூடுபுற்றினயந்துபான்முலைவிம்முறப்
போதவாட்டிமகிழ்ந்துபூசைபுரிந்தருந்தவமேயதே..........(௮௩)

நிச்சநிச்சமிவ்வாறுபூசைநிகழ்த்தியும்பர்தமாண்டுகே
ளெச்சமின்றியொராயிரஞ்செலவெய்தருந்தவமேயதாற்
பொச்சமின்றியெழுந்தவன்புபுகுந்துருக்கநெகிழ்ந்துள
நச்சிநச்சிநறுங்கணீருகநன்னெறிப்படுதேனுவே...............(௮௪)

கற்றகல்வியினும்பயன்கருதார்புரங்கனலூட்டிய
கொற்றவில்லியையேத்தலென்றுகுறித்தவாய்மையினந்தணீர்
பெற்றம்வந்தனைசெய்தவாறிதுபிஞ்ஞகன்குளப்புச்சுவ
டுற்றவாறினியோதுவாமென்றுரைக்கலுற்றனன்சூதனே.....(௮௫)

காமதேனுவழிபடுபடலமுற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ௫௰௫.

---

௨

# குழகன்குளப்புச்சுவடுற்றபடலம்.

கற்பகநீழல்வைகுங்காமருகாமதேனுப்
பொற்பகப்போதிநீழற்பூசிக்குநாளிலேனோர்நாண்
முற்பகற்பூசையாற்றிமுனிர்தவத்திருந்ததாக
விற்பகற்கதிரோன்மேல்பால்வேலையைச்சாரச்சென்றான்.....(௧)

தனதகமிருக்கைகொண்டதம்பிரானுருவமெல்லாங்
கனலுறழ்நெய்த்தோர்தோய்ந்தகாட்சியிற்பொலியுமாறு
முனமுலகனைத்துமுள்ளத்தறியுமுற்பனமேயென்னத்
தினகரச்செல்வன்மாதோசேர்ந்தனனுடலஞ்சால...............(உ)

இரவெனுங்காலநண்பனெய்துவதோர்ந்துதென்பாற்
பரவைமண்ணுலகமாதுபசுமஞ்சள்குளித்ததேய்ப்ப
விரவியவெப்பநீங்குமிளவெயின்மிளிரவேகி
யரதனமிமைக்குமேல்பாலலைகடன்முகட்டைச்சார்ந்தான்......(௩)

பகைகொளுங்கரியநாகம்பற்றுபுபையப்பையத்
தகைகொளவிழுங்கியாங்குத்தரளமுமணியும்பொன்னும்
வகைவகைகரையினெற்றும்வார்திரைக்கடலினுள்ளா
னகைகொளுங்கிரணக்கற்றைநாட்கதிர்குளித்ததன்றே.........(௪)

செம்மைசெய்யரசன்மாயத்திகழும்வெண்மதியார்க்கஞ்சி
விம்முறுதொழிலிற்பாங்கர்மேவியமாந்தரொல்லாந்
தம்முடையிருக்கையண்மித்தகவுறவடங்கியாங்குக்
கொம்மெனப்பறவையாதிகுவிந்ததஞ்சேக்கைசார்ந்து.........(ரு)

உரியவனொருவன்மாயவொக்கலுமயலுங்கூடிப்
பரிவொடுமவலித்தாங்குப்பகலவனீங்கலோடும்
புரிமுறுக்கவிழ்ந்துபைந்தேன்பொழிமலர்ப்பொதும்பர்தோறும்
விரிசிறைத்தொழுதிப்புள்ளின்றழுனிமிக்கெழுந்தமாதோ.......(சு)

குடநிகர்செருத்தல்விம்மிக்குவிமுலைவீங்கித்தாங்காத்
தொடரிருகாலின்வாரச்சுவைப்பயமொழுகக்கற்றுப்
படுமணியிசைப்பவோடிப்பட்டிகடோறுஞ்சார்ந்தாங்
கடர்மணக்கனிவிற்கன்றையழைத்திடுங்குரல்களெங்கும்.........(எ)

கலவிசெய்தவசமாகிக்காமருசேக்கையிட்ட
வலரணைப்படுக்கைநின்றுமணங்கனூர்தலைவனீங்கத்
தலையெடுத்தெழுவதென்னத்தழற்கதிர்க்கலவிநீத்த
மலர்மதுக்கமலத்தோடுவண்டலைநிமிராநின்ற....................(அ)

உருகெழுபரிதித்தோன்றலொண்கதிர்க்கரத்தாலள்ளிப்
பருகலிற்குறைந்தபொய்கைப்பனிப்புனனிரப்புமாபோன்
மருண்மலிமாலைக்காலம்வருதலுமனஞ்சோர்ந்து
பெருகியகண்ணீர்வாரப்பேதுறுநேமிப்புள்ளு...................(கூ)

பரிதியங்கடவுளென்னும்பற்றலனிரியல்போக
வருமதியரசற்குற்றமாலையஞ்செல்வனன்றன்
பொருண்மலிதெனுதிக்கின்புடவியாமனையைச்சால
விருளெனுங்கதவஞ்சாத்தியிருந்தனன்காவல்பூண்டே..........(௧௦)

ஒற்றையந்திகிரியெங்குமுருட்டிவார்கிரணமென்னப்
பற்றியசெங்கோலோச்சிப்பரிவுசெய்யிரவுநீக்கிக்
கொற்றவனேகவாங்கேகுறுநிலமன்னனொன்ன
முற்றியமாலைநோக்கிமுல்லைகணகைத்தமாதோ. ..... ...... .(௧௧)

வெய்யவற்கொளிமையார்ந்துவேறுபட்டிருந்தசெந்தீ
யுய்யவெண்மதிக்கீழ்ச்சில்லதேயமுற்றுள்வதொப்ப
மையணிவிழியினார்கள்வயக்குமொண்விளக்கமாகி
யையெனமனைகடோறுமமர்ந்தொளிகளுற்றுமாலோ...... .(௧௨)

அருவிழும்மதமால்வேழத்தகடுகீண்டயில்கொள்சூலத்
தொருவன்வந்தெழுந்ததேபோலுலகெலாம்பொதிந்துநின்ற
விருணெடுவயிறுபோழ்ந்திட்டெழுந்ததாலெறிநீர்வைப்பின்
மருவியபைங்கூழெல்லாம்வளர்த்திடுமுவவுத்திங்கள்.........(௧௩)

உரகமுண்டுமிழ்ந்தகாலையுட்டுளையெயிற்றுக்காரி
விரவியதென்னநாப்பண்விளங்கியகளங்கத்திங்கள்
கிரணங்கள்களுற்றிற்றெங்குங்கிளரிருட்கபாடநீக்கிப்
பரவுமிற்பொருளைக்கையிற்பரிசித்துப்பார்க்குமாபோல்......(௧௪)

வரையெலாம்வெள்ளிவெற்பின்மயங்கினமாயோன்பாயற்
றிரைதவழ்கடலேயென்னத்திகழ்ந்தனகடல்களெல்லாம்
புரைதபுவெள்ளிதன்னாற்பொலிந்ததோருலகேயென்னத்
தரைவளருலகமுற்றுந்தயங்கினகிரணத்தம்மா.................(௧௫)

விழைதருகருப்புவில்லிவெண்மதிக்கவிகைமுற்றுந்
தழைதகத்தூக்குமுத்தின்றாமங்களரசங்காட்டுக்
குழைதருசாகைதாக்கக்கொம்மெனச்சிதர்ந்துசுற்றி
னுழையுழைகிடத்தன்மானுமுடுக்களங்கொளிர்ந்ததோற்றம்..,(௧௬)

மைந்தர்களாக்கங்காணவயிறுவாய்ந்துயிர்த்ததாயர்
சிந்தையின்மகிழ்ச்சிமேன்மேற்றிளைத்தெழுதிண்ணமன்றே
சந்திரனெழுதலோடுந்தரங்கநீர்ப்புணரிபொங்கி
யந்தின்மிக்கெழுந்ததென்பவாரவாரத்தினோடும்..............(௧௭)

மறைநெறிக்கஞ்சாத்திங்கள்வார்கதிர்க்கரங்கணீட்டி
மிறைசெயவுள்ளமாழ்கிமெலிந்தெனதகத்தின்மன்னு
நிறையினையழித்தலென்னென்றெனோவெனக்கும்பிட்டாங்குத்
துறைமலிகமலக்காடுதூமலர்கூப்பிநின்ற......................(கஅ)

பாங்குறுகமலமாதைப்பகலவன்கலவியாற்ற
வீங்கிதுபார்த்தலொண்ணாதெனவளர்குவளையெல்லாந்
தீங்கினுக்கஞ்சிமூடுஞ்செறியிதழ்மலர்க்கண்டம்பாற்
றூங்கியவன்பர்காணத்தடந்தொறும்விழியாநின்ற..............(கக)

நீத்தனையெம்மைச்சாலநெருப்பெனவுடற்றும்வெய்யோன்
பாய்த்தியமிறையிற்பட்டுப்பருவரலுழந்தேம்பாராய்
காத்தினிக்கைக்கொளென்றுகனிந்துசெவ்வாய்விண்டாங்கு
பூத்தனகயிரவங்கள்புதுநிலாவெறித்தலோடும்..................(உ0)

தாமரைப்பொகுட்டின்மேவித்தண்ணறுநுகர்ந்தவண்டு
காமருகுமுதநீலங்கதுவித்தேன்பருகாநின்ற
தேமருசெல்வமாயச்சேர்ந்தவர்தம்மைநீத்திட்
டேமருமேதிலார்பாலிரும்பயன்றுய்ப்பார்மான...............(உக)

கணவர்தம்வதனத்திங்கட்கருணையஞ்சுதைகூட்டுண்டு
பணைவரவல்குனல்லார்படர்விழிச்சகோரங்கொட்ப
வுணவினைவிழைந்துசூழ்ந்தவும்பருஞ்சகோரப்புள்ளு
மிணர்படுகிரணத்திங்களின்சுதைநுகராநின்றார்...... ........(உஉ)

வேறு.

பகலிற்றூக்கியபடர்சிறைக்காக்கையின்குழாங்க
ளுகலிற்சார்தரவொறுப்பனகூகையின்குலங்க
ளகலிற்றீர்தருநாமவேலரசர்நண்ணுறை
யிகலிற்றீர்தருகாலம்பார்த்திருப்பதுதகைய..................(உங)

அரியலாருநரொருபுறமரிவையர்தமக்குத்
தெரியல்பூண்கலனணிகுநரொருபுறந்திணிதோட்
பிரிகலாதவரொருபுறம்பிரிந்தவர்ப்பெறுமை
யுரியமாணலமிழக்குநரொருபுறமானார்... .....................(உச)

திமிரவேழத்தைத்தேம்பொழிற்பாசறைதளைத்து
நிமிரும்வாண்மதிக்குடையெழநிறைமணஞ்சீத
மமிழ்மென்கான்மணித்தேருடையமரனுமுடற்றுந்
துமிலப்போர்துறந்திரதிதோடொய்யிலிற்றோய்ந்தான்........(உரு)

மாதராரிணைவிழைச்சுமாசெனத்தெளிந்தகன்று
காதலாரணமறிகலான்கழற்றுணைநிறுவி
யேதமேதுமெய்யர்தமெய்யிருடியர்தமக்கும்
போதமாதர்பாற்புகுவதற்கெழுந்ததவ்விரவு......................(௨௬)

உயிர்கள்யாவையுமுவப்புறுமுவாமதியிரவி
னெயில்கண்மூன்றையுமெரித்தவர்பூசனையியற்றிச்
செயிரொலாந்தபுதேவரானிருக்கையைச்சேர்ந்து
பயிலும்யோகத்தினிருந்ததுபடர்பொறியடக்கி................(௨௭)

ஆயகாலையிலறவனூர்திருமுன்னரொல்லா
மேயவானிரைக்கன்றொடுமேவியாட்டயர்ந்து
தூயதேனுவின்கன்றிருந்ததுசுடர்மதியின்
பாயவாணிலாநோக்கியுட்படர்களிகூர்ந்து......................(௨௮)

மதியெனுந்தனிமாமனுமகிழ்ச்சியினோக்க
நுதிகுரங்குறநோன்மைசால்வாலினையெழுப்பிப்
பதிசெவித்துணைநிமிர்தரப்பார்சிதளொடுப்பக்
கதிகொண்டோடியதுளர்தருகாலும்பின்னாக..................(௨௯)

ஓடிச்சேணிடைநிற்குஞ்சற்றேய்யெனமீளும்
வாடிவேரொடுமிறும்புகள்குளம்புற்றுமடிய
நீடிநின்றபைம்புதலினைக்குப்புறுநிமிருங்
கூடிநின்றகன்றினத்துறுங்குறுகிமோந்தார்க்கும்................(௩0)

நிலங்கதிர்த்தகோட்டினுநெடுந்தாளினுமகழும்
விலங்கிமேக்கெழீஇப்பின்னடிவிதிர்ப்புறவோடுங்
கலங்கும்வன்றலைதுளக்குங்காசினிதுகளாடி
யிலங்கமண்டிலங்கொளுந்திசைதிசையிரிதருமால்.............(௩௧)

நிருத்தமாட்டயர்நிருமலன்கன்றுருவாகித்
திருத்தமேவரச்செய்திடுநடனமீதொன்றே
கருத்தினூடரிதெனக்கடவுளர்விசும்பேறி
யுருத்தவன்பொடுமிமைப்பிலாவிழிப்பயனுற்றார்..............(௩௨)

சடசடென்றிரிதருந்தனியோதையுந்தழங்கப்
படர்நெடுங்குரல்பயிற்றுறுமோதையும்பரப்ப
வடர்வனத்துறைபறவையுமிருகமுமஞ்சிக்
குடர்குழம்பவோட்டந்தனவூர்வனகுமைந்த....................(௩௩)

கவையடிப்படுங்கதிர்மணிக்குலங்களும்பொடிந்த
குவையிலைத்தருக்கோட்டிடைப்படுவனதுமிந்த
விவையெனத்தெரியாவகையிலதைகள்குழைந்த
வவையிழைத்தலினுங்குறைநிரைகளும்வெருண்ட..............(௩௪)

அன்னகன்றுடையுறப்புறப்பமர்தருமமா
ரின்னன்மிக்குழந்தெய்த்தனனொன்செயவல்லார்
வன்னிகொன்றையுமத்தமுமலைத்தவார்சடில
முன்னவன்றனைக்காவெனமுறைமுறைபணிந்தார்............(௩௫)

அட்டநாகமுமட்டதிக்கயங்களுமலைந்த
முட்டிலாதுமண்பரித்தமாசேடனார்முடிகள்
சட்டவாற்றிலவாயினதவிர்ந்துவாழிடமாய்
விட்டமாதிரந்தலைவரும்விதிர்விதிர்த்தனரோ...................(௩௬)

அடியழுந்தமிக்கிடுந்தொறுமவனிகம்பிப்ப
நெடியகுன்றுகடுளங்கினதுளும்பினநெடுநீர்க்
கடல்களுடியகாரிகைமடந்தையர்கணவர்
தடவுவார்புயமிறுகுறத்தழீஇயினர்தாமே......................(௩௭)

களிமிகுந்தெழவின்னணமாட்டயர்கன்று
நெளியவன்னிலனேரோவெனநேருறவோடி
யொளிசெயாதிலிங்கத்தினையுள்ளுறப்பொதிந்து
வெளியினின்றவன்மீகத்தைமிதித்ததோரடியின்...............(௩௮)

நீட்டியிட்டகாணிருமலன்சென்னியிலழுந்திப்
பூட்டியிட்டெனப்புயக்கவந்துருமையின்முகத்தைக்
கோட்டிக்கோட்டிஞற்கோட்டுமண்கொண்டுபுற்றுடைத்துச்
சேட்டுமாயணியுருவமுங்கீழ்ந்துசென்றதுவே.................(௩௯)

குளம்பழுந்தியவூற்றினுங்கோடுபுக்கெடுத்த
விளம்புணூற்றினுமெழுந்தநெய்த்தோர்பெருகியதாற்
களம்புகுந்துபுற்றுருவமாய்க்கரந்தமாமேரு
வளம்பொலிந்ததன்னொளியினைவயக்கினன்மான.............(௪0)

திண்மைமல்குமண்பொதிந்துபூசனைபுரிதிறனோர்ந்
தொண்மைமல்கியவங்கியும்பூசனையுஞற்ற
வண்மைமல்கியதிருவுருவனைத்தும்போலுந்
தண்மைமல்கியசெம்புனல்பெருகியதயக்கம்..................(௪௧)

## வேறு.

இறைவனார்திருமேனியிளங்கன்றினிடருழந்த
மிறைதெரிந்துசோகத்தின்விழுந்ததுபோலுயிர்த்தொகுதி
பொறைதவிர வருதுயிலிற்புணர்யாமங்கழிதரவை
கறையடுத்ததுறுஞ்சோகங்கழிக்கவருமருத்துவன்போல்.....(சஉ)

கனிவாயைத்திறவாதுகளத்தொலிகொண்டழுவார்போ
னனிவாயினிசைமிழற்றிநண்ணுவவண்டலர்தோறும்
பனிவாய்ந்தமலர்களின்வாழ்பன்னவர்க்குப்பணிவார்கட்
கினியான்மெய்வடுப்பட்டதிசைத்திசைத்தேருவபோல.....(சங)

நிலவுமிழும்பனிக்கிரணநிரப்பவருங்குளிர்க்குடைந்திட்
டொலிமயிர்ச்செம்போர்வையழகெறிக்குமுருப்போர்த்ததுபோ
லொலிகுருதிகொப்பளிக்குமுறுதெரிந்தாற்றுமே
கலிகெழுவன்குரலெழுப்பிக்கனைவனகோழிக்குலங்கள்.....(சச)

திரணமெடுத்திடைநாட்டித்தேவர்கடம்வலியழித்த
பரமரொறுத்திருமேனிபடுமூறுதெரிந்ததனு
லுரன்மலிந்துவரும்பாவமொழிப்பமுயன்றனபோல
வரமலிந்தவலிகெழுவுமனுக்கணிப்பகருங்குருவி...............(சரு)

எட்டுருவினோருருவாயிருந்தநாமெம்பிராற்
கிட்டமுறுந்திருமேனியிடர்காணத்தகுமேயென்
றுட்டிகழும்வருத்தத்தாலொளிமழுங்கிற்றுவாமதிய
மட்டுமொளிவிளக்கழலுமவ்வாற்றின்மழுங்கிற்றே............(சசு)

உருத்திரனைச்சதாசிவனையொளிர்விந்துநாதத்தைக்
கருத்திறந்தபேரொளியைக்கடப்பாட்டிற்றியானித்தார்
வருத்தமறுஞ்சரியைமுதனற்பணியுமரீஇயினோர்
திருத்தனவனுருச்செம்புண்டீரநினைப்பார்போல.............(சஎ)

கூகைவிழியொளிவிளங்கக்குணிப்பரியபலவிழிகட்
காகுமொளியடக்கமுறவடுத்தவிரவினைநோக்கி
யேகுதிகொலெனவியம்பியிழித்தலர்தூற்றுவபோலச்
சாகைதொறும்வளர்சேக்கைத்தடஞ்சிறைப்புள்சிலம்பினவே...( )

கருமவுதயர்தழைத்துக்கழிகாலைக்கனலியந்தே
ரருணவுதயஞ்சிறந்ததரசனெனவிருந்தவன்கண்
டுருவினிறைக்கிடர்செய்ததோர்ந்திலனென்றுயர்கணங்கண்
மருவுமவன்றிசைநகரம்வாளெரியூட்டியதென்ன.............(சகூ)

வேறு.

பனியெனும்பருவந்தாக்கப்பங்கயப்பொய்கைமுற்று
நனியழகிழந்தாலென்னநாயகனிறந்தலோடும்
வனிதையரணிநீத்தென்னமதியொடுமுடுக்கண்மாயத்
தனியொடுவானமாங்குத்தவ்வெனவிருந்ததம்மா.............(௫௦)

வேறு.

கண்ணகவுருவாகக்கைக்கொண்டோன்றிருமேனி
புண்ணகத்தனதுருவும்புண்ணுதல்கற்பென்று
மண்ணுதமணியுருவம்வார்குருதியெழப்புண்ணாய்
விண்ணூரவெழுந்தான்போன்றெழுந்தனன்வெங்கதிர்க்குரிசில்..()

வேறு.

நெருங்கிவிண்ணமரர்சாலநெடுமலைகொண்டுவாட்டத்
தருங்கதிர்மணியெவர்க்கும்பயன்படத்தக்கதன்றென்
றிருங்கதிர்மணியையாருமின்புறவீன்றதென்ப
கருங்கடன்மருங்குசூழ்ந்தகாமர்பாற்புணரிநாண.............(௫௨)

நெருப்பிதுசுடுமென்றஞ்சிநிறைபுனலள்ளியோக்கி
விருப்பொடுந்தணிப்பார்மானவெஞ்சுடரொழுதலோடுந்
தருப்பணமறையினீதிதவறிலர்செய்யாநின்றூர்
பொருப்பினைவணக்குந்திண்டோட்பூரணன்பாதம்போற்றி..(௫௩)

வெய்யவனுருவநோக்கிவெருண்டுபைங்குவளைக்கான
மொய்யெனமலர்க்கண்மூடிற்றுவாமதிக்கலவிக்காலை
யையெனவுறுத்தப்பட்டவணியிதழ்க்குறியைக்காப்பச்
செய்யவாய்மூடிற்றோடைத்தேம்புனற்குமுதக்காடு...........(௫௪)

தணந்தவென்கணவன்வல்லேசார்தரவருளுகென்னுப்
பணந்தழையரவமாலைப்பகவனைக்கரங்கள்கூப்பு
மணந்தவழ்கமலமென்றாழ்வருதலுந்தழுவிமார்பம்
புணர்ந்திடக்கூப்புங்கைகள்பொருக்கெனவிடுத்துநின்ற......(௫௫)

ஆடவர்மணித்தோளாரவணைந்திராப்பொழுதுமுற்றும்
பாடகத்தளிர்மென்பாதப்பாவையர்குவவுக்கொங்கை
பீடுமிக்குறுதனேக்கிப்பின்கொடுத்திணைந்தாலென்ன
வாடியநேமிப்புட்கள்வயின்வயின்மகிழ்ச்சிகூர்ந்த...........(௫௬)

விளம்பியகாலைப்போதின்விளைகமழ்தீர்த்தமாடி
யுளம்பொதியன்புபொங்கவுறுகடனாற்றித்தேனு
விளம்பனிமதிவெண்கோட்டினெரிபுனைசடிலத்தேவை
நளம்புறுவனத்திற்பூசைமுடித்திடநோக்கிற்றன்றே.........(௫௭)

தீதுறுசகுனங்காட்டத்தெய்வதச்சூழனீண்ட
பாதவங்கிடந்தவாறும்படர்துகள்பட்டவாறும்
பூதலம்புழுதிபட்டபுதுமையுநோக்கியென்னே
யீதிவணிகழ்ந்தவாறென்றெண்ணியங்கேகுங்காலை..........(ருஅ)

பாலினலாட்டப்பட்டுப்பளிக்கொளிகாட்டும்புற்றின்
மேலெலாஞ்செங்நீராடிமிளிர்தலைநோக்கியீது
மாலினர்பூசையாற்றிமந்திரத்தருச்சித்திட்ட
சேலினர்தடத்துச்செந்தாமரைமலராகுமன்றேல்.............(ருக)

புத்தியிற்றனதனன்மிப்பதுமராகத்தின்குப்பை
மெத்துறச்சொரிந்துபூசைவிளைத்ததொன்றாகுமன்றே
லத்துமற்றமரர்செஞ்சாந்தணிந்ததாமதுவுமன்றேற்
கொத்துறுமசுரரன்பிற்கோடித்தசெம்பட்டாமால்............(சுo)

என்றுசேயிடையேகண்ணுவிமையவருவக்குங்கற்றான்
மன்றவீதெனத்தேருதமனத்தொடுமனவேகத்திற்
சென்றதுதேவதேவர்சிந்தையுநாடொணாத
கொன்றைவார்சடையான்வைகுங்குரூஉமணிப்புற்றின்பாங்கர்..()

பாயினகுருதிநோக்கிப்பதைபதைத்தன்னோவன்னோ
வாயினசெய்தியென்னேயாரிதுசெய்யவல்லார்
தாயினுமினியார்க்கீதுசார்வதேயென்றுதன்பான்
மேயினமழவுக்கன்றைவிழியுறப்பார்த்துச்சோரும்...........(சுஉ)

கோட்டொடுகுளப்புக்கால்கள்குருதிதோய்ந்திருந்தகெட்டேன்
பாட்டளிமுரலுங்கொன்றைப்பசுந்தொடைப்பரமனார்தந்
தீட்டியபுகழ்சான்மெய்யிற்செம்புனல்வெள்ளம்போர்ப்ப
வேட்டைவல்வினையைச்சாலவீட்டவோவீண்டுப்போந்தேன்....()

பூவினுனுறங்கவாக்கம்பொய்த்ததும்புலவரீசர்க்
கேவினற்கிசைத்தவாறுமேறுமாலவன்சொனம்பித்
தாவிலாத்தவஞ்செய்தாய்ந்ததவத்தினன்கனாந்தவாறு
மேவியாகாயவாக்குவிரித்ததுமிதற்குமன்னோ................(சுச)

நன்னலம்பயப்பதுண்டேற்றியவுநல்லவாகுஞ்
செந்நலமிழப்பதுண்டேனல்லவுந்தீயவாகு
மின்னவால்வினையினுக்கமெனினிடையேதுவான
வன்னவர்தம்மைநோவவழக்கிலையந்தோவந்தோ............(சுரு)

நல்லுயிர்கோறல்செய்தநன்றியைக்கோறலாதி
புல்லுபபாதகத்துட்பொலிந்ததிண்வினைகளாகுஞ்
சொல்லுமாபாதகங்களவற்றினுந்துயரஞ்செய்வ
வல்லதிபாதகங்களவற்றினும்வலியவாமே......................(சுசு)

உறுமதிபாதகத்துளொருவிழிநுதலிற்கொண்ட
மறுவிலிக்கிழைத்தகுற்றமாற்றுறுகழுவாயில்லை
தெறுவலிக்காலற்செற்றோன்சேவடிப்பிழைப்பினுள்ளும்
பெறுமுருவூறுசெய்தபிழைக்குநேர்பிழையுமில்லை...............(சுஎ)

அப்பிழைபடைப்புவேண்டியருந்தவமாற்றிநாயே
னெப்புலவோருங்கூடியின்னமுதெடுக்கமுன்னி
யொப்பின்மந்தரத்தைநாட்டியுரகங்கொண்டலைத்துவேலை
வெப்புநஞ்சடப்பட்டாங்குமேவினேனென்செய்கேனே...(சுஅ)

திருவடிப்பிழைத்தல்சற்றேசெய்யினுஞ்செய்தபாவி
மருவியகுலத்துமுன்னர்வந்திறந்தோரெல்லோரும்
பொருநினரிருக்கின்றோரும்பொருந்தமேல்வருவோர்தாமு
மொருவருநிரயமுற்றுமூழிகள்பலவுந்துய்ப்பார்...............(சுகூ)

நன்குறநமக்குநாடியிருத்தலுநவையேயாகு
மின்குடிகொண்டமேனிவிழுப்புணுக்காற்றேனுற்றே
னென்குலமிறக்கவின்றேயானுமிங்கிறுகவென்னுத்
தன்குலக்கன்றுமாழ்கத்தரையிடைவிழுந்ததன்றே.............(எ0)

நாசியினுதிரஞ்சோரநனிதலைநிலத்தின்மோதுங்
காசினிகுழியக்கால்கள்கதுமெனவெடுத்துத்தாக்கும்
பூசியநீற்றுத்தன்மெய்புண்கொளப்புரண்டுகொட்கு
மாசிடைபுயிர்ப்புவீங்கியடங்கமூர்ச்சித்ததம்ம..................(எக)

நெடிதுபோதவசமாகநிலத்தெதிர்கிடந்ததாயைப்
படியின்மேனின்றகன்றுபரிவொடுநக்காநின்ற
தடியினூபுரங்களார்ப்பவாடியவழகனேக்கி
நொடியின்வானிடையேநின்றானைமைசாலறவெள்ளேற்றின்()

வேறு.

பாரிடநெருங்கமலர்பண்ணவரிறைப்ப
வாரணமுழங்கவடர்பல்லியமியம்ப
வாரணிமுலைப்பெணிடமன்னினளிருப்ப
நீரணிவனத்தின்வெளிநின்றருளுநாதன்........................(எ௩)

ஓங்குமொலியானுமிடையும்பர்திரளானுந்
தாங்கருவெருட்கொடுதளர்ந்துவிழுதாயை
நீங்கியலமந்துநெடிதோடியதிளங்கன்
றுங்கதனைநோக்கியயன்மேல்விழியளித்தான்..................(எச)

அந்தணன்வணங்கியருகேமெலநடந்து
கொந்துபடுபாசமுருகொய்துகரநீட்டிப்
பந்தமுறவங்கைவளர்பாசமிடறிட்டுத்
தந்தனடத்தியொருசாமிதிருமுன்னர்.....................(எரு)

அங்கணன்விழிக்கடையளிப்பவருணந்தி
யங்கைகொடுதட்டியெழுகென்றறையவூழி
யங்கியுமிழ்வேல்வலமணிந்தகுமரேச
னங்கணெழுகும்புனலகங்கைகொடுமாற்ற.................(எசு)

ஐந்துகரனண்ணலருள்செய்யவுடலந்தை
வந்துபுழைவார்கையறன்மல்குதுளியாக
வெந்துயரின்மூழ்குமதன்மெய்முழுதுமுய்த்தா
னந்தியதுசோகமுயிர்நந்தியதுகற்றன்.......................(எஎ)

சொறிந்தனனெழுந்தசுரையானுடல்வலாரி
மறிந்துலவுகாற்றினிறைவன்றுகடைத்தான்
செறிந்துபுனலாட்டிவருணன்செலமுகுந்த
னறிந்திறைவர்தாளணியதாகவுறுவித்தான்....................(எஅ)

பண்டறிகிலாதபரமன்படிவமாரக்
கண்டதுளநெக்கதுகனற்கண்மெழுகென்ன
விண்டவிழிநீர்பொழியமெய்மயிர்பொடிப்ப
மண்டனில்விழுந்துவலம்வந்துதுதிசெய்யும்..................(எகூ)

வேறு.

தண்ணார்மதிசூடியசங்கரனே, விண்ணோர்பணிகின்றவிழுத்துணையே
யண்ணாவருளேயமுதேயளியே, மண்ணாவினையேற்கெளிவந்தனையே...(அ0)

ஆறாடியவார்சடையந்தணனே, நீறாடியமேனியினின்மலனே
யேறாடியநீள்கொடியெம்பெருமான், மாறாவினையேற்கெளிவந்தனையே....()

ஏஏயெனவேள்வியிறுத்திடுநாட், காயாதபனார்பல்கழற்றினவா
வீயாதவிண்ணோர்தபவீட்டினவா, மாயாவினையேற்கெளிவந்தனையே...(அஉ)

அடியாரகமேகுடியாமொளியே, படிநாடரியபரதெய்வதமே
முடியூமுடிவேமுதலாமுதலே, மடியாவினையேற்கெளிவந்தனையே.....(அா)

கங்காளமணிந்தகரும்புயனே, சிங்காமலர்மெல்லணையான்சிரமொன்
றங்காந்துணையாடவறுத்தவனே, மங்காவினையேற்கெளிவந்தனையே....(௮௪)

அறிவாமமலேசனுடம்பிகையே, வெறியார்கடம்வீழ்கரடத்தவனே
பொறிமாமயிலூர்தருபுண்ணியனே, மறியாவினையேற்கெளிவந்தனிரே.....()

வளிவந்துளர்போதிவனத்திடையே, களிவந்திலதான்கழிவுற்றதெனத்
தெளிவந்தவர்செப்பலுருவகையே, யெளிவந்தனைபோலுமெனக்கிறைவா.()

அருண்மேனியளித்தவர்செய்தொழிலுள்,வெருளாதுபடைப்புவிதிப்பலென
மருளான்மதியெண்ணிவலித்தமையா,னிருளார்பழிபாவமிணங்கினவே.(௮௭)

கெட்டேனடிகேள்கிளர்பொன்னுருவம், பட்டேருவப்படர்காற்சுவடு
நெட்டேசிநிகர்த்தமருப்புழவு, மொட்டாதவர்நேரவுறுத்தினனே..........(௮௮)

கருணைக்கடலாதலினீகடியா, திருமைக்குமளிப்பவெதிர்ந்தனையா, லருமைத்
திருமேனியணங்கவளெப், பொருள்கொண்டுபொறுத்தனள்பூரணனே(௮௯)

கணவன்வழிகாரிகையாரதனுன், மணமென்குழன்மாது பொறுத்தலுமா
மணவுங்கணநாதர்முனுனவர்தாங், குணம்யாவதுகொண்டுபொறுத்தனரோ..()

தலைவன்வழியல்லதுசார்ந்தவரு, முலைவொன்றுமுறுத்தல்செயாரதனு
னிலைநின்கருணைப்பெருநீர்மையறிந், தலைசெய்திலரான்றகணத்தவரே...(௯௧)

அண்ணுபிழைசெய்துயிர்வாழ்க்கையுமிங்,கென்னுமதனுலெனையின்னருளா
லென்னுருயிருள்ளளவுந்தழலுங், கொன்னுர்நிரயங்குடியாக்குதியால்....(௯௨)

வேறு.

நடுநடுத்தின்னணநவிற்றுமாவினைக்
கடுமிடற்றிறைவர்கண்ணளித்துத்தேற்றுவார்
விடுவிடுகவலையைவிதிர்ப்புற்றஞ்சலை
கொடுநெடும்பிழையினையகத்திற்கொண்டிலேம்..............(௯௩)

மன்றநீபுரிந்திலைமதவிளங்குழக்
கன்றறியாமையிற்கண்டதிப்பிழை
யொன்றுநின்பரிவினுளத்திற்கண்டில
மன்றியுமடியவர்குற்றங்காண்கிலேம்.........................(௯௪)

குளப்படிச்சுவடும்வன்கோட்டினேறுநம்
வளப்படுமுடிக்கணிமதியினுக்கினே
முளப்படுமுமைமுலைச்சுவடொண்கைவளைத்
திளைப்புறுதழும்பும்போன்மகிழ்சிறத்தலின்......................(௯௫)

ஒள்ளியவிவ்வடையாளமும்பர்சூழ்
வெள்ளியங்கிரிமிசைவிளங்கிலிங்கத்து
நள்ளுறவணிந்தனநவிற்றிலிங்கங்க
டெள்ளியவுலகம்வேறின்மைதேறவே.........................(கசா)

இவ்வடையாளங்கண்டிறைஞ்சியேத்திடு
மௌவியமனத்தினரேனுமன்னவர்
பௌவமென்றயிர்ப்புறும்பவத்தினீங்கிப்போய்ச்
செவ்வியமுத்தியைச்சேர்வர்திண்ணமே........................(சுஎ)

ஆதலினின்பரிவகற்றிச்சூழலின்
மாதவமாற்றிநீவாடுகின்றனை
யேதுளத்தெண்ணியதியம்புகென்னலுங்
காதலினுரைத்திடுங்காமதேனுவே..............................(கஅ)

வாழிநின்பொற்கழல்வாழியென்பிழை
யூழியுநிரயம்புக்குழந்துதீர்ப்பதோ
பாழிமால்விடத்தினைப்பருகினுலென
வேழையேற்கிரங்குநின்கருணையீட்டமே.........................(கக)

கடையனேனுய்ந்தனன்கன்றுமுய்ந்ததிங்
கிடையரூதென்குலமென்றுமுய்ந்ததா
லுடையவபிழைபொறுத்துவத்திமற்றினி
யடைவதுன்பாலெனக்கற்புச்செல்வமே........................(க00)

வானவர்சூழ்ச்சியின்மாலங்கேவலி
னுனமர்கொடியினுயகிலமாக்கலும்
யானுறவருளுதியெனலுந்தேனுவுக்
கேனவெண்கொம்பினுனியம்புகின்றனன்.....................(க0க)

பத்தியுமளித்தனம்பலருங்காணிய
வித்தலத்திப்பொழுதெமதுநாடகங்
கைத்தலக்கனியெனக்காட்டக்காணுதி
முத்தியும்வழங்குதுமுடிவிற்றேனுவே..........................(க0உ)

வேறு.

காமதேனுபுரமென்னவிந்நகரிகாமமல்குபெயர்கொள்ளவு
நீமறுதரவின்வைகலானரசினீடுசூழலிதுபட்டியென்
னுமேவுநமக்குமப்பெயர்முனுட்டிநாதனெனவோதவு
மேமமாருலகமுற்றுமின்பமுறவீண்டுனக்குவரமாக்கினும்.........(க0ங)

நேசமல்கிவழிபாடுசெய்குநரைநீடுமுத்தியினிறுத்துநிர்ப்
பீசமாநகரமீதிதன்கணுயர்பெற்றமேவிழைவுமுற்றுறத்
தேசுலாவுபொருளாதிநல்குவதுசெய்திலேநகரமுத்தியே
வீசமென்பதுவிளக்கநின்றவொருசான்றுமுண்டதுவிளம்புதும்...(௧௦௪)

வடுகவொண்மருள்வலம்புரிந்துமலிதோகைஞாளியெனும்வாகனம்
விடுதிசெய்தவொருஞானநல்வடுகன்மேவியிக்கரிகாவல்பூண்
டிடுவனீங்கினிதுகாண்டியாதலினிணர்த்தகோடுகளொசிந்தெழக்
கடுவனின்றுகளுமிவ்வனத்துனதுகாமநல்குதல்கணித்திலம்......(௧௦௫)

வரும்பிறப்பினலமெய்தநிற்குமறம்வந்தவிப்பிறவியின்னலந்
தரும்பெரும்பொருள்பரந்தகாமமிலைவதம்மைநாடியதவங்களு
மரும்புமெய்யொளியளிக்குமிந்நகரினைத்தியோசனைதெனுதுற
விருந்துணர்ப்பொழில்வராகநீள்வனையிருந்ததானைமலையென்பரே....()

தூம்புறுங்கைமதவேழமேய்ந்துபயில்சோலைசூழ்ந்தவதனுச்சியி
னும்பரத்தினடிநின்றெழுந்தொழுகுமாம்பராவதிவடாதினிற்
றேம்பழுத்துவருகாவிரிக்குடதிசைக்கணுர்த்துலவுகாஞ்சியென்
றோம்புகின்றகுடிஞைத்தெனுதொருசபீசமாநகரமுண்டரோ....(௧௦௭)

வன்னிநீள்வனமிருத்தலானஃதுவஞ்சியென்றுபெயர்மேவிய
தன்னமாநகரடுத்துநம்முருவினைதுபூசைபுரிகிற்றியாங்
குன்னவாவினைநிரப்புதுங்கடிதினென்றுரைத்தருளியும்பரார்
துன்னுசூழலிடையாரணங்கடுதிசெய்யமாநடனமாடினன்......(௧௦௮)

நந்திமத்தளமுழக்கவீணைகொடுநாரதாதியிசைபாடநீ
ளிந்துவென்றநுதலம்மைதாளமிசையக்கரத்தின்முறையொத்திட
வெந்தைபோற்றிசயபோற்றிபோற்றியெனயாவருங்களிதுளும்புற
வந்திவண்ணனுயர்பிப்பிலப்பொதியிலாடல்கண்டதுயர்பெற்றமே....()

போதியம்பலநடித்துநாதர்புனிதச்சிவக்குறியுளாயினர்
சோதிமல்குநடனச்சுவைக்கடலழுந்துகின்றசுரர்கோதன
மாதிலிங்கமறைபுற்றுமுற்றுமடியோடகழ்ந்துவெளிகண்டது
கோதிலாதநிதியஞ்சனத்தவர்குறித்தகழ்ந்துவெளிகண்டென......(௧௧௦)

இட்டகாற்சுவடுநீண்டகோடுழுதவேறுநல்லவடையாளமாம்
பட்டிநாயகர்வன்மீகநாதர்பகராதிலிங்கமகலாதவர்க்
கொட்டுமன்புளமயற்புறத்தொழிவிசைந்திலாமைசிலநாளுற
முட்டிலாதவழிபாடுமுன்னரின்முடித்திருந்திசைவுகொண்டபின்.(௧௧௧)

பிப்பிலாரணியம்வெள்ளிமால்வரை பெருக்கருதபிறவாநெறி
யொப்பிலாதபிறவாநெறித்தலமொளிர்ந்தபல்பொருளும்பரா
ரெய்ப்பிலாதுபலகாலமும்பணியியற்றிலிங்கமொடுமுள்ளகந்
தப்பிலாவகையுறுத்திறைஞ்சுபுதணந்ததாலமரர்கோதனம்......(ககஉ)

வேறு.

மாடுபோந்துறுமாதிரநோக்கிவணங்குபு
நீடுகின்றவருச்சுனமால்வரைநேர்புகுந்
தோடுநீர்ச்சுனைதோய்ந்துமையம்மையுயிர்த்தரு
ளாடுசெல்வத்தைநச்சியிறைஞ்சியெழுந்ததே..........(ககங)

உச்சியோங்கலிவர்ந்ததனூடுருவப்புகுந்
தெச்சமாகவிருப்பனகுன்றிடைத்தாழ்ந்துபோ
யெச்சநாயகனாகியவீசனிருந்தருள்
கச்சமில்வளமல்கியநாகங்கலந்ததே....................(ககச)

அங்கணாதன்முடித்தலத்தும்மடையாளங்கண்
டெங்கணாயகனின்னருளின்னணமோவெனப்
பொங்குமார்வம்புறத்தெழவன்புபுதுக்கிப்போய்ப்
பங்கினாள்சிலைநண்ணியவளைப்பணிந்ததே..............(ககரு)

அரிதினங்ககன்றூடறுத்தேகியயன்சிலம்
புரிதினேத்தியொழிந்துசென்றுனைவிலங்கலின்
வரிதுழாவியவண்டுளராம்பரமூலத்துப்
பெரிதுமூற்றெழுநீர்த்தந்துளைந்ததுபெற்றமே..........(ககசு)

ஆம்பராவதியின்கரையேநடந்தாங்கிடைத்
தோம்படாவகைசோமன்பணிந்தசோமேசனைக்
கூம்புறுதவன்பாற்குழைந்தேத்திக்கும்பிட்டுப்போய்
நாம்படாதருணல்கும்வஞ்சித்தலநண்ணிற்றே.........(ககஎ)

அன்னமாடுமகன்றுறைக்காவிரியாற்றினு
மின்னநீர்த்திடுமாம்பரமாநதியின்கணும்
துன்னியாடிச்சுருதிகளுடருந்தோன்றலைப்
பன்னுநூன்முறைப்பூசனையாற்றிப்பயின்றதே........(ககஅ)

காலகாலன்கபாலங்கையேந்தியகண்ணுத
லேலவார்குழலோடெதிர்தோன்றியெண்ணும்வரஞ்
சாலவீசலுந்தாழ்ந்ததுகொண்டுதணந்துபோய்
ஞாலமாதியுயிர்த்தொகைநன்றுபடைத்ததே...........(கககூ)

ஆனடுத்துயர்பூசனையாற்றியகிலமுந்
தானளித்தலினுற்கருவூரொனத்தக்கது
வானடுத்தெழும்வஞ்சிபசுபதியாயினுர்
பானகஞ்சினர்பாழியுமானிலையாயிற்றே................(கஉ௦)

கூர்கழித்தலைக்கூடம்பவிழ்நீலங்கண்ணிலந்தண்
கார்கழித்தமிடற்றினர்காமர்பேரூரின்விண்
ணூர்கழித்துறுமானெதிராடலுவந்தது
மார்கழித்திருவாதிரைநாளந்தமாண்பினுல்..............(கஉக)

ஆண்டுதோறுமந்நாள்வரும்போதங்கடுத்துயர்
தாண்டவம்புரிதத்துவநாதனைத்தாழ்பவர்
பூண்டசோதிமுடியடையாளங்கள்போற்றுவோர்
நீண்டமாலறியாநிலையெய்துவர்திண்ணமே............(கஉஉ)

அமிர்தமீன்றவலைகடற்றென்றியவாறுவந்
தமிர்தமாட்டியருச்சனைசாலவியற்றிய
வமிர்தலிங்கத்தமலர்தமிக்கதைகேட்டவ
ரமிர்தராகுவர்செல்வருமாகுவர்வாய்மையே..........(கஉ௩)

ஈதுநாதன்முடிக்கடையாளமியைத்தவா
றோதினுமினிமாதவத்தீர்பொன்னுடையினுன்
பூதநாதனைத்தென்கயிலாயத்துப்போற்றிய
காதைகேண்மின்களென்றருட்சூதன்கரைவனுல்......(கஉ௪)

குழகன்குளப்புச்கவடுற்றபடலமுற்றியது.
ஆகத்திருவிருத்தம்-௬உஎ.

---

௳

# தென்கைலாயப்படலம்.

கள்ளிவர்நீலமலர்ந்துவிரைத்தகழிச்சூழற்
றுள்ளியவாளைவிழுந்துகளச்சொரிசெந்தேறற்
பள்ளமடைப்பணைபைம்பொழில்சூழ்நதுபரிந்தோம்பும்
வள்ளியகீழைச்சிதம்பரமென்றொருவைப்புண்டால்............(க)

ஆரணமின்னுமளந்திதுவென்றறியாதெய்க்கும்
பூரணன்மேலைச்சிதம்பரவைப்பதுபோலென்றும்
வாரணவுந்தனமாதுமைகாணமகிழ்ந்தாடு
நேரணவுந்தவரல்லதுகாணநிகழ்த்தானுல்....................(உ)

அத்தகுமாநடனந்தரிசிப்பவருட்டாதை
யுத்தமனேவவியாக்கிரபாதனுவந்தேகிப்
பத்தியினல்வழிபாடுகள்செய்துபயின்றியோகின்
வைத்தகருத்தொடுவைகினன்வைகியகாலத்து..................(ங)

தாருவனத்தினர்கொள்கைதெரிந்துதடுத்தாள
வாருமதிக்கணியுஞ்சடைவேய்ந்தழனூடாடுங்
காருமலைத்தகளத்தர்பயிக்கவுருக்கொண்டார்
வாருமலைத்தெழுபூண்முலைமாதுருமால்கொண்டான் .........(ச)

வாழியதாருவனத்திடைமற்றிருவோருஞ்சென்
றூழியினன்முனிவோர்நிறைசிந்தவருட்செல்வன்
றூழிருளோதியினார்நிறைகொண்டுதவத்தோர்கள்
பாழியனைத்துமறுத்தவனுடல்பயின்றனே..... ......... .....(ரு)

ஆங்குடனின்றருளாடல்வணங்கியமாலன்று
வீங்கியவல்லிருணீங்கியகாலைவிழிக்கின்றான்
பூங்கணுகப்புனன்மெய்முழுதும்புளகம்போர்ப்பத்
தாங்கியவன்பொடுசங்கரசங்கரவென்றார்த்தான்...............(சா)

அச்சுதகந்தனினுங்குளிர்சேடனடுத்தேத்தி
யச்சுதமிட்டவருச்சியினன்விழியான்முன்னு
ளச்சுதன்வெந்தவிஞான்றுமயர்த்திலையிக்காலத்
தச்சுதவென்கொலயர்த்தனையென்றுவினுயன்றன்............(எ)

மாதவர்சிந்தைமயக்கமறுத்துமகிழ்ந்தாட
னுதனவின்றதுமற்றுமுனைப்பநடங்காண
வாதரவுற்றருள்பெற்றொளிர்மேருவடுத்தன்யாற்
காதரமோடவருந்தவமுண்டிகைவிட்டாற்றி.....................(அ)

கானமர்கொன்றையினொதிர்போந்துகருத்தோர்ந்து
தேனமர்தில்லைவனம்புகுமாறுசெப்பிப்போத
வானமரத்திரிவாழனகுயைமருங்கன்று
தானமர்வுற்றபதஞ்சலியாய்த்தனதூர்நண்ணி.... ..............(க)

சில்பகலங்கணிருந்துதிகழ்ந்தபிலத்தூடு
பல்பகனீங்கவிவர்ந்துவியாக்கிரபாதன்சேர்ந்
தல்பகலுந்தொழுதில்லையடுத்தனையானீயிங்
ஙொல்பகனற்பகலென்றுகளிப்பவுடங்கண்மி................(கo)

பொன்னொடுபூசம்வரக்கதிரோனடுவொன்புல்ல
மின்னொளிர்மன்றின்விளங்கிழைகாணவிடைப்பாக
னன்னடமாடநயந்துபணிந்துநலங்கொண்டு
மன்னியிருந்தனனாடொறுமாடன்மகிழ்ந்தேத்தி..............(௧௧)

வேறு.

ஆயகாலையாழிப்பாயலான், போயசேடன்புரிவதென்னெனத்
தூயநெஞ்சிற்சூழுமெல்லையின், மேயவீணைமுனிவன்விள்ளுவான்........(௧௨)

மேருமாட்டுமேவிமாதவ, யாருமாற்றற்கரியதாற்றினா
னோருமீசனுருவுவேறுகொண், டருணர்வமென்றுபேதித்தான்..........(௧௩)

உறுதிநோக்கியுமையொர்பாகனாய், மறுவிலாதவாய்மைகூறுபு
நிறுவுதில்லைநிருத்தங்காட்டிடச், சிறுமைநீங்கிச்சேவைசெய்யுமால்......(௧௪)

இனையவண்ணமியம்பநாரதன், வினைதுழாயின்மௌலிவானவ
னனையனாயினான்கொல்சேடனென், றனையன்னதருளைமுன்னினான்..(௧௫)

ஈங்கிருந்திட்டென்னையெய்தினே, னாங்கவன்றனோடுந்துநான்
பாங்கினோற்பிற்பரதமற்றெனை, நீங்கவீசனிகழ்த்துமேகொலாம்........(௧௬)

ஏறதாகவேறினானுருக், கூறுமாகக்கொள்ளகில்லனோ
வாறுசூடியாடல்காண்பலென், றாறுமன்பினெய்யென்றேகினான்......(௧௭)

வேறு.

பொற்கோட்டிமயவரைப்புறத்துப்பொலிந்தகைலைவரையடுத்துச்
சொற்கோட்டமுமௌவியவுளமுந்துறந்தவடியார்தொழுமேரு
விற்கோட்டியகைப்பெருமானைவிளையார்மலர்தூஉய்மணியிமைக்குங்
கற்கோட்டிமிலேற்றின்னிலாகள்காப்பவெடுத்தோனிறைஞ்சினான்....(௧௮)

வேறு.

எழுந்துவலம்வந்தனனிருந்துதிவிளைத்தான்
கொழுந்துமதிவேய்ந்தகுழகாகுறுகுவார்கட்
கழுந்துபடுவன்பிறவியாழிகரையேற்ற
முழுந்துருளுமுன்னுதவுமும்பர்பெருமானே............(௧௯)

வீமதிரியம்பகவிடங்கமலநாச
வாமமகலாதவுமைமாதுமணவாள
தாமமணிவேணிசசிகண்டவிடமுண்ட
சேமமணிகண்டசிவலோகவடிபோற்றி..................(௨௰)

புராதனநிராமயபுரங்கள்பொடிசெய்த
தராதலநெடுஞ்சகடசங்கரசயம்பு
கராசலவுரிக்கவயகச்சபவுரத்த
வராவணிபுயத்தவடிகேளடிகள்போற்றி.................(உக)

வாதுபுரிசாளியைவணக்கியநடத்த
நீதுபுரிசண்டனுயிர்செற்றதிறலாள
போதுபுரிகொன்றைபுனல்புல்லறுகுவன்னி
தாதுபுரிமத்தமிலையுந்தலைவபோற்றி........................(உஉ)

வேறு.

ஒருமுறைபோற்றியொன்பதோடொருமுறைமைபோற்றி
தருசதமுறைமைபோற்றிசகத்திரமுறைமைபோற்றி
வருமுறையயுதநூறுயிரமுறைமலர்த்தாள்போற்றி
குருபரகோடிகோடிகோடியினளவும்போற்றி.....................(உங)

ஐயபொற்சடிலம்போற்றியருள்பொழிகடைக்கண்போற்றி
செய்யபங்கயங்கள்வென்றதிருமுகப்பொலிவுபோற்றி
பையரவிணையாக்கொண்டபடர்செவிக்குழைகள்போற்றி
கையமர்படைகள்போற்றிகாலினூபுரங்கள்போற்றி...............(உச)

வரிப்புறத்தும்பிபாடுமதுமலர்க்கொன்றைமாலை
யெரிப்புறங்கண்டவேணியிசைத்தவநின்முன்போற்றி
வெரிப்புறம்போற்றிபக்கமேலொடுகீழும்போற்றி
தெரிப்புறங்கொண்டகோலத்திறமெலாம்போற்றியென்று.........(உரு)

துதிபலவிளைத்துத்தானைத்தொக்கிருகாலுளாக்கி
விதியுளிநூடங்தம்பட்டவிண்டுவையிறைவன்கூவி
முதிருமன்புடையையென்றுமுதுகிடைக்கொம்மைகொட்டி
மதியிடைவேட்டதென்னேவழங்கெனவழங்குமாயன்............(உசு)

கண்ணடிமிளிரக்கொண்டாய்கங்காளந்தோளிற்கொண்டாய்
வண்ணவென்பிறப்பிற்கோடுமருப்புரிபலவுங்கொண்டாய்
பெண்ணெனவிணைத்துக்கொண்டாய்பேமதிற்கணையாக்கொண்டாய்
திண்ணியவிமிலேறாகத்திருவுளமகிழ்ந்துகொண்டாய்..............(உஎ)

முழுதுலகளிக்குமாற்றன்முன்னெனக்கீந்தாய்பின்னர்
விழுமியபடைகளீந்தாய்வியத்தகுபுதல்வரீந்தாய்
கழுமணியனையமெய்யிற்காமருவலப்பாலீந்தாய்
வழுவுறுமுனிவர்தாருவனத்திடைநடனமீந்தாய்....................(உஅ)

றின்னருட்கிலக்கமாகநின்மலநீயிவ்வாறென்
றன்னையுமடிமைகொண்டதாயத்தாற்புலியும்பாம்பு
நன்னலமெய்தத்தில்லைநகர்வயிற்குயிற்றுநின்ற
மன்னருணடமுமின்னேவழங்குவாயென்றுபோந்தேன். ..........(உக)

அருந்தவம்பெரிதுமாற்றுமடுபுலித்தாளனோடும்
வருந்திமெய்யரிதினோற்றவாளராத்தலைவனோடு
மிருந்துநின்னடனம்போற்றவிருந்தவஞ்செய்தேனல்லேன்
றிருந்தியவுலகவாழ்விற்சிக்கயாப்புண்டேனேந்தாய். ..............(௩௦)

ஒருவர்தம்பொருட்டுமேலையுஞற்றுதலுளதேலன்று
திருநடங்காண்பேனென்னிற்சிந்தையுமமைந்ததில்லை
மருவியவுடலமுன்னேமாய்தலுமுளதாமற்றுப்
பொருவிலிநடனங்காட்டப்புரிதகவென்றுதாழ்ந்தான்..............(௩க)

அருள்பொழிமுறுவல்சற்றேயரும்பியாலாலமாந்தி
யிருள்பொழிமிடற்றுத்தேவன்வெயில்பொழிதிகிரியேவி
மருள்பொழிசிஞ்சுமாரம்வெளவியவும்பல்காத்தோன்
றெருள்பொழியுள்ளத்தார்வந்திருவுளஞ்செய்துசாற்றும்............(௩உ)

வேறு.

பதஞ்சலிவியாக்கிரபாதனொன்பவ
ரிதஞ்சலியாதுசெய்திடவவர்க்குநாஞ்
சிதம்பரநகர்வயிற்செய்யுந்தாண்டவஞ்
சுதந்திரமாக்கினும்பிறர்க்குத்துச்சிலாம்..................(௩௩)

மலைபடைக்கலமணிவாகனங்களாய்க்
கலைகதிரொமதுருக்கலப்புமாகிய
நிலையவனுடகநிகழ்த்திக்காட்டுறின்
முலைவனுநமக்கதுமுறைமையன்றுகாண்................(௩௪)

குணதிசைச்சிதம்பரங்குடவலாக்கையாய்
மணமலிதில்லையங்கானமாதவந்
திணிதருகுடதிசைச்சிதம்பரந்தவ
ரணிபுரிந்திறைஞ்சிச்சூழச்சுவத்தகான். ..................(௩௫)

தெள்ளொளிக்கனகமன்றிணர்த்ததில்லையு
ளொள்ளியநமதருநருவின்வண்ணமாம்
வெள்ளியம்பலம்விரிபோதிக்காட்டினுள்
வள்ளியவெமதருவண்ணமாகுமால்......................(௩௬)

அல்லதூஉமெவற்றினுமதிகநீரது
நல்லொளிநமதுபாலத்துநண்ணுபு
வில்லுடைக்காமனைவிளிப்பமேக்குநீண்
டெல்லுமிழ்விழிவிழித்திடமண்வீழ்ந்ததே................(௩௭)

வீழ்ந்ததுவெள்ளியாய்விளைந்ததாதலிற்
போழ்ந்திருள்பொறித்தொளிர்மணிபொன்னென்னவுந்
தாழ்ந்தனமேன்மையிற்றகவுயர்ந்ததாற்
சூழ்ந்தவருள்ளமுந்துலக்கும்வெள்ளியே................(௩௮)

மணிவரைபொன்வரைமண்ணிருந்துநாந்
தணிவறுகாதலிற்றவளவெள்ளிவெற்
பணிவளர்கோயில்கொண்டமர்ந்தவண்ணமுந்
துணிவுறுமதனுடைத்தூய்மைத்தோற்றத்தால்..........(௩௯)

அரதனமன்றினுமம்பொன்மன்றினும்
விரவியமகிழ்வினுமகிழ்ச்சிமிக்கதா
மிரசதமன்றின்மற்றெமக்கெஞ்ஞான்றுமே
புரவுகொண்டயன்றனைப்பூத்தவுந்தியோய்..............(௪௰)

அடிமையர்பலருளுமன்புமிக்குறு
மடிமையையாதலினவரொலாரினு
நெடியவவுரிமையைநினக்கெனக்குறி
நெடிதுசெயதனிடைநிருத்தங்காட்டுதும்................(௪௧)

வாதுசெய்தூர்த்ததாண்டவத்தின்வார்முலை
மீதுகண்ணுறத்தலைவெள்கிச்சாய்த்தவள்
கோதுகுமாநந்தநடமுங்கும்பிடத்
தீதுகுமாதவஞ்செய்திருக்குமால்..........................(௪௨)

மூலவன்மலமறமுருக்கிமுத்திசேர்
காலவமுனிவனுங்காமர்நாடக
மேலவங்கினிதுறக்காணுமிச்சையிற்
சாலவன்பியற்றுபுதங்கிப்போற்றுமால்...................(௪௩)

வேறு.

இலங்குவிராட்புருடனுக்குக்குணதிசையிற்சிதம்பரந்தானிதயமாகு
நலங்கிளருங்குடதிசையிற்சிதம்பரநாரணனயனுங்கிழமைபூண்ட
துலங்கிடைபிங்கலைசுழுனைமூன்றுமரியயன்வரைகள்சுடரும்வெள்ளிப்
புலங்கிளர்நம்வரைமூன்றுமாய்விந்துத்தானமெனப்பொலிந்ததாகும்....(௪௪)

அனைவிராட்புருடனுக்கங்கனவரததாண்டவநாமாடிக்காட்டுந்
தன்மையினுலெந்நாளுமிடையறாதொளிர்நாதந்தழங்காநிற்கு
மன்னியமாதவர்கேட்பர்கேட்டவர்க்குமாறாதவறிவானந்தம்
பன்னரியமுதன்மையுநித்தியமுமுறும்விகாரமுதற்பலவுநீங்கும்..........(சரு)

அவ்வனைப்பினைமைவழிபட்டசும்புமொளியிரசதவம்பலத்தினுடல்
செவ்விபெறத்தரிசித்தோர்விந்துநாதந்தவிரத்திகழுஞானத்
தெவ்வமலிமலமூன்றுமிரியவுயர்சிவபோகமினிதுதுய்ப்ப
ரிவ்வரநம்வரைமேலுமிரசதவம்பலங்காண்போரெய்துவாரால்..........(சசு)

மருத்துளருமத்தகையதென்கயிலைநமதுருவாய்வுயங்குமாற்றா
லுருத்திரவெற்பெனும்பெயருமுறும்யோகவரையெனவுமுரைப்பர்சான்றோ
திருத்தமுறநடம்பயின்றுதெரித்துநடம்பயிற்றுவோர்செத்தெல்லோருங் [ர்
கருத்தடங்கும்யோகுழப்பநாமிருந்துதனியோகங்கைக்கொண்மாண்பால் ()

விண்ணவரிற்சாத்தியரின்விஞ்சையரிற்கருடரிற்காந்தருவர்தம்மின்
மண்ணவரிற்பலரங்கண்யோகுழந்துநற்கதியைமருவினோர்க [தால்
டெண்ணமுறவிப்பொழுதும் யோகுழப்போர்தமையெண்ணிற் றெரிக்கொணு
வண்ணமுறுமதன்பெருமைதெரிக்கலுறின்வானவர்க்கும்வாழ்நாள்போதா.()

ஆவயிற்சென்றெமைப்பூசைபுரிந்தமரர்சுரபியுரித்தாதலானுங்
கோவடிவின்வருமைந்துங்கொண்டெமதுமுடிக்காட்டுங்கொள்கையானுந்
தூவடிவினுருவாய்த்தோற்றியறமெமைப்பரிக்குந்தொடர்பினுனுந்
தேவரனைவருமுறுப்பிற்செறிந்தபசுஈமக்குவகைசெய்வதாகும்...........(சகூ)

நீயுமொருகோமுனியாயாங்கடுத்துநமைப்பூசைநிகழ்த்துகண்டாய்
மாயிருவையகம்வியப்பப்பொன்னுமிரவியுமீனமருவாநின்ற
வேயுமொளிப்பூரனையுத்திரமாதிவாரமிவையினைந்தவேலைப்
பாயுமொளியிரசதவம்பலத்தாடல்புரிதுமினிப்படர்கவென்றான்........(ருo)

வேறு.

குறைமதிமுடியினர்குறைதப, வறைதலுமறைகழலடிமலர்
நிறைமதிநெடியவனேருற, முறைமுறைதொழுதனன்முன்னுவான்......(ருக)

பூமுனியாதுறைபொற்புடை, மாமுனிவருமறுமாற்றினு
னேமுனிமுதலவிகந்தனன், கோமுனியெனவுருக்கொண்டனன்.......(ருஉ)

பொற்கலைபூமிபடுத்தனன், வற்கலைமாணவுடுத்தனன்
விற்கலின்மோலிவிடுத்தன, னற்கலில்வேணியடுத்தனன்................(ருங)

வினையொடுசாந்தம்வெறுத்தனன், புனைதபபூதிபொறுத்தன
னுனைகலனுதியொறுத்தனன், சுனைபடுமக்கந்துறுத்தனன்..............(ருச)

அந்தியினருண்மனுவிண்டனன், குந்தியனடையடிக்கொண்டனன்
கந்தியல்கயிலைமுன்கண்டன, னுந்தியவொலிசெவியுண்டனன்.........(ருரு)

பரவியவரைவளம்பார்த்தன, னரகரகரவெனவார்த்தனன்
விரவியபுளகமெய்போர்த்தனன், சிரமிருகைத்தலஞ்சேர்த்தனன்......(ருசு)

தண்டெனவடிவரைதாழ்ந்தனன், ரெண்டுசெய்முறைபலசூழ்ந்தனன்
மண்டியவன்பிடைவாழ்ந்தனன், விண்டுவினெஃகுதல்வீழ்ந்தனன்....(ருஎ)

வேறு.

வருடையுமரைகளும்வழுவையுமுழுவையு
மெருமையுமுளியமுமெறுழியுங்கவயமு
மரிணமும்புருடவன்மிருகமுமரிகளும்
வெருண்மகண்மிருகமுமிடைசரியொழுகினன்.........(ருஅ)

வருக்கையுங்கதலியும்வகுளமுமகருவுந்
துருக்கமுந்திமிசுந்திந்திருணியுங்குடசமு
முருக்கமைதிலகமுந்திரிகைகுங்கிலியமு
நெருக்கியசிறுநெறிநெடியவனொழுகினன்..............(ருகூ)

வெள்ளிலுஞ்சுள்ளியும்வில்லமுமில்லமுங்
கள்ளிவராண்களுங்கதமறுவேங்கையு
மள்ளிலையாரமுமலர்சொரிநாகமு
நள்ளிணர்ப்பொழில்பலநடைவயினொருவினன்.........(சு0)

வஞ்சியர்நெஞ்சிவர்மஞ்சளுமிஞ்சியும்
வஞ்சியுந்துஞ்சிலவஞ்சிலழிஞ்சிலும்
வஞ்சுளமுஞ்செறிமஞ்சிவர்பஞ்சர
வஞ்சமும்விஞ்சவருஞ்சலங்கொஞ்சினன்...............(சுக)

வேறு.

விண்ணோங்கியபணைநின்றுகுவெண்ணித்திலமணியும்
பண்ணோங்கியவரிவண்டுளர்பனிமென்மலரினமுந்
தண்ணோங்கியதிரையிற்கொடுதள்ளித்தவவுரறி
மண்ணோங்கியதவழ்காஞ்சியைமகிழ்ந்தானதிற்படிந்தான்....(சுஉ)

பனிநீர்மலர்விரைமென்கனிபலவுங்கரமருவிக்
கனிநீர்மையினுளமென்புகள்கரையப்புணர்விழியி
னனிநீர்மணிமருமத்துகநநீண்முடியேறித்
தனிநீர்மையினகலத்தலைவனதாண்மலர்தாழ்ந்தான்..........(சுங)

கண்ணார்தருமணியைத்தவர்கருதுஞ்சுடரொளியைப்
பண்ணார்தருபயனைக்கனிபழுனார்தருசுவையைத்
தண்ணார்புனனிழலோத்தமர்தமியேன்பெருவாழ்வை
விண்ணார்தருமமிழ்தத்தினைவிதியால்வழிபட்டான்............(சுச)

அமையாவுளமலமந்தவணரிதிற்பெயர்கிற்ப
வுமையாளையும்வழிபட்டவணொழிவுற்றுயர்சார
லெமையாளவுமிமையோர்தொழவிறைவீற்றிருந்தருள்வார்
தமையாலயமுள்ளெய்துபுதாழ்ந்தான்விடைகொண்டான்...(சுரு)

அடர்வெள்ளியின்வேய்ந்தொள்ளொளியசும்பித்தனிவிசும்பி
னிடமல்கியபலவைப்பையுமெழில்வெண்ணிறமாக்கு
நடமல்கியவருண்மன்றமுநயனத்தெதிர்காணத்
தொடர்மல்கியவன்பாற்றொழுதெழுந்தான்மலையிழிந்தான்...(சுசு)

வேறு.

மாதிக்கானைதாங்கியமண்ணுண்டவன்மாசு
மோதிக்காமமுற்றருள்காஞ்சிமுதுகூலஞ்
சோதிக்கானவன்புதுளும்பத்தொடர்வுற்றுப்
போதிக்கானம்புக்குவணங்கிப்புறஞ்சூழ்ந்தான்..........(சுஎ)

மாதவராலும்வானவராலுமண்ணாலு
மீதவன்வண்ணமென்னவொணாதவிறைமுன்னர்ச்
சீதரனென்னுங்கோமுனிசென்றுதிருவார்ந்த
பாதமிறைஞ்சிப்பன்முறைசூழ்ந்துபரிவுற்றான்............(சுஅ)

துஞ்சுதலோடுமுண்டிவிடுத்துத்தொழுமந்நா
ளெஞ்சியகாலைச்செய்கடன்முற்றுமினிதாற்றி
யிஞ்சிகள்சூழ்ந்தவெம்பெருமான்கோயிலின்மாடே
நெஞ்சுறுமன்பாற்றென்கயிலாயநிருமித்தான்..........(சுகூ)

தென்கயிலாயமிருத்துமிலிங்கச்சிவனாரை
நன்கருள்சக்கரதீர்த்தமெனப்புவிநாடத்தான்
றன்கயினங்கொருதீர்த்தமகழ்ந்தத்தடநீரா
லென்கடனுட்டுதனின்கடனுடுதலென்றாட்டி............(எ0)

தூசவிர்சாந்தந்தூமணியாரஞ்சுடர்மோலி
வாசநன்மாலைமற்றுமணிந்துமறையோதி
யாசகலாறுதீஞ்சுவையுண்டியயில்வித்துத்
தேசவிர்தீபமாதியளித்துச்சேவித்தான்...............(எக)

இன்னணநிச்சந்தென்கயிலாயமினிதேத்தி
முன்னவனுதிலிங்கமுமேத்திமுதிர்யோகந்
தன்னிலைகண்டகாலவனேடுந்தவமாற்றி
மன்னியவெள்ளிமன்றும்வணங்கிவதிவுற்றுன்...........(௭௨)

கோமுனிபூசைகொண்டவர்தென்கயிலாயத்தைத்
தாமுறையேத்துந்தன்மையர்செல்வந்தகவாழ்ந்திங்
கேமுறுமின்னலெய்துதலின்றியிமையாருங்
காமுறுநன்சிவலோகமணைந்துகளிகூர்வார்..............(௭௩)

நன்கயிலாயநன்னகர்முற்றுநடுவைகுங்
கொன்கயிலாயமாதிலிங்கத்தின்குடியென்று
தென்கயிலாயமென்றுறுமாறுந்திருமார்பன்
றன்கயிலாயக்கோயிலுக்கிட்டான்றனிநாமம்.............(௭௪)

மாதவர்கல்விருக்கியவள்ளன்மகிழ்கூர
மாதவரன்பார்தென்கயிலாயமிதுவாஞ்சை
மாதவரம்புளாம்வடபாலிற்கைலாய
மாதவர்கேண்மினென்றுவலித்தான்மகிழ்சூதன்.........(௭௫)

தென்கைலாயப்படலமுற்றியது.
ஆகத்திருவிருத்தம் - ௭௦௨.

---

௳

# வடகைலாயப்படலம்.

கொம்பேரிடையாள்குடிகொண்மார்பன், வம்பார்தருபோதிவனம்வைகி
நம்பாநடனந்தருகவென்னுப், பம்பாதரவிற்பணியுநாளில்.................(௧)

வண்டாமரைமாமலரிருக்கை, கொண்டானிடையேகுறுகிமொய்த்த
மிண்டாகியநித்திரைவிடுத்தான், கண்டான்கழுவிச்சுசிமுடித்தான்.........(௨)

முன்போலுலகாக்குதன்முயன்றா, னென்பார்மருமத்தவனிசைத்த
வன்பார்மறையின்முறைமறப்பாற், றன்பாலதுசார்விலதுகண்டான்......(௩)

அந்தோவிதுவோசெயவனந்தல், வந்தோவியதென்றுளமதித்து
நொந்தான்றெழுநிறேன்மைகொளமுந்தைத்,தந்தானவனேசரணமென்றுன்.

எழுந்தானிடையிற்கயிலைநண்ணிக், கொழுந்தோடியவன்பினுளங்கொண்டு
விழுந்தான்விமலேசர்சரண்மீது, தொழுந்தோறவர்தூமுறுவல்கொண்டார்.()

சோகாந்தனையென்னிதுசொல்லென்று, மாகாந்தன்வினவமலர்வாணிக்
கேசாந்தமதானவெழிநுவன், காகாந்தியையென்றுகரைகிற்பான்.........(௬)

## வேறு.

கொடுவினைகொடனுகரணபுவனமொடுபோகமிவைகூட்டிடுமுன
மடுமலவயிற்றினுறைகின்றதெனநித்திரையகட்டின்மருவிப்
படுமுணர்வயர்ந்துமறைவித்தையுமயர்ந்துபணியானதொழிலும்
விடுதிபெறவெற்றவுடல்போன்றுநினையேசரணமேவுதல்செய்தேன்.(௭)

நல்வினையியற்றுதலினோடுகழிதீவினையுநண்ணவடியேன்
றொல்வினையுடற்கணுறுவித்தபரிசானினதுசூழருளினு
லொல்வினைமுதற்றொழிலுஞற்றுநியதிப்பொழுதினோங்குதுயிலாய்ப்
புல்வினையடுத்ததெனின்யானஃதுபோற்றும்வகைபுல்லுறுவதோ.. (௮)

நின்னருளினாலளியனேன்பிழைபொறுத்துமறைநீதியருளி
நன்னருலகந்தமியனேனினிதுயிர்க்கும்வரநல்குதியென
முன்னவனடித்தலமுடித்தலைகூட்டிமொழிமாதுகணவன்
பன்னரியவன்பினுளனெக்குருகவின்றுதிபரப்புதல்செய்தான்........(௯)

இந்திரனுநந்தணிகரத்தவனுமந்தருமேனையவரும்
வந்தடிபணிந்துநனிநொந்தனமிரங்குகெனவல்விடமிடுங்
கந்தரவிதந்தருசுதந்திரநிரஞ்சனகரந்தையறுகு
சந்திரனணிந்தசடிலத்தநினையன்றுசரணேதுமிலனே...............(௧௦)

பராபரபுராதனபராவுதல்செயாருளம்விராவுதல்செயா
நிராமயவலாணவநிராகரணநெஞ்சிடைநிலாவுசரண
விராறனெடிராறுயரிராறுசெயிராகமதிராதருள்பவ
தராதலமராதசருமத்தநினையன்றுசரணேதுமிலனே...............(௧௧)

ஆற்றல்புரிகாலனுயிர்மாற்றிவழிபாடுநனியாற்றுசிறுவ
னேற்றமிகமேலுலகமேற்றியருள்வாழ்வருளுமேற்றின்முதல்வ
காற்றிரதமாரன்மதுவூற்றுகணையேவவுயிர்காற்றுமிறைவ
சாற்றுமறைதோற்றியசதுர்த்தநினையன்றுசரணேதுமிலனே......(௧௨)

சதங்கைசிறுகிண்கிணிதழங்கிடவொதுங்குதளர்மென்னடையுறும்
பதங்கழியுமுன்னடுகதங்கொடிதிமைந்தர்கள்பதங்கள்கழிய
விதங்கழிவிலங்கலுநுணுங்கமறல்கந்தனையிலங்கியதச
சதங்கணிபதங்கொளவழங்கிநினையன்றுசரணேதுமிலனே........(௧௩)

அந்திநிறமுங்கருகவங்கிநிறமுங்கருகவஞ்சுடர்விடுஞ்
செந்துவர்களுங்கருகவிந்துவொடுசெம்பரிதிதேசுகருகச்
சுந்தரமிகுந்ததிருமேனிவலம்வந்ததொடர்பாற்புறமெனைத்
தந்திடலடாதருளுதந்தைநினையன்றுசரணேதுமிலனே............(௧௪)

வேறு

என்றிருந்துதியியம்புதாமரையிருக்கையானைமுகநோக்குபு
கொன்றைதுன்றுசடையெம்பிரானினிதுகூறுவானுலகர்தாதைகே
ணன்றுநின்விழைவுமுற்றவீண்டுவரநல்கிலேநமதுவைப்பதாய்
மன்றவென்றுநிலைபெற்றவாதிபுரியுள்ளதங்கண்மதுரூதனன்............(௧௫)

வெள்ளிமன்றினடமாடல்காணவிழைவுற்றுநம்மருளினுன்மறை
தெள்ளுகோமுனிவனுகிநோற்றருள்செறிந்தகாலவனெடுந்தவக்
கள்ளமைம்பொறிகடிந்துபூசனைகடைப்பிடித்துவதிகின்றன
னள்ளியங்கணொருநீயுமாடனனிகாண்டிபின்புவரநல்குதும்............(௧௬)

பட்டிநாதனெனவெம்மைநீளுலகுபன்னுகின்றதிமையார்பசு
வொட்டிவந்தனைபுரிந்தவேதுவினவ்வும்பரார்பசுவுமவந்தனை
சட்டவாற்றியதுநீயுறங்கிவிடுதன்மைசென்றமையினுதலா
னட்டதிக்கினருமேத்துபட்டிமுனியாகியங்குறுகவென்றனன்..........(௧௭)

ஆலமார்ந்தமலனுரைகிளத்தலுமலர்ந்ததாமரையலங்கலான்
சாலநோற்றதவமென்கொலோபெரியசாமிகொண்டருளுமோர்பெய
ரோலயான்றழுவவென்றுவந்தடியிறைஞ்சியன்புடனெழுந்துயர்
மூலமானநவின்றுபட்டிமுனியாகியாதிபுரமுன்னினான்................(௧௮)

தண்டினோடுகரகம்பிடித்தகரமுந்தயங்குபொடிமேனிமேற்
புண்டரந்திகழும்வண்மையும்பொருவிலக்கமாலைபுரண்மார்பமுந்
தொண்டினுற்குழைவுகொண்டவுள்ளம்வெளிதோற்றுமாக்கையசைவுந்தகக்
கண்டுகோமுனிகளித்துவம்மெனவுகந்தபட்டிமுனிதாழ்ந்தனன்.........(௧௯)

இந்தவாறுவரவென்கொனீயினிதியம்புகென்னும்வளர்கோமுனிக்
கந்தின்மோகமுறவாக்குமாற்றலயர்வுற்றிடைக்கயிலைமேவியான்
றந்தைமாலொடுமிருந்திதாண்டவமளித்துமென்றுவிடைதந்தனன்
முந்தைமாதவமுதிர்ந்ததென்றுவகைமுற்றியுற்றதிவணென்றனன்........(௨௦)

நாயினுங்கடையனேனையும்பெரியநாயகன்றிருவுளஞ்செயு
மாயினுய்ந்தனனெனக்கசிந்தருளையுன்னிநெக்குருகுகோமுனி
தாயினும்பரியுமாதிலிங்கமுறைதம்பிரான்றிருமுனுய்த்தலும்
வாயினைந்துபதமல்கவந்தனைபுரிந்துசூழ்ந்துமறைபாடினான்............(௨௧)

வேறு.

மின்கொண்டமேருவிலங்கற்சிலைதாங்கிக்
கொன்கொண்டநொச்சிகுமைத்தாரிவரென்பர்
கொன்கொண்டநொச்சிகுமைத்தாரிவராயிற்
புன்கன்றின்காலிற்பொதிர்ந்தவாறென்னே
புனிற்றுமருப்பிற்புழைபட்டாரென்னே......................(உஉ)

உழக்குஞ்சமர்க்கணொருவேலரக்க
னழக்குன்றடியினடர்த்தாரிவரென்ப
ரழக்குன்றடியினடர்த்தாரிவராயிற்
குழக்கன்றின்காலிற்குழைந்தவாறென்னே
குருத்துமருப்பிற்குழிந்தார்மற்றென்னே......................(உ௩)

வள்ளிகணவன்மலைபொடிப்பவாரிலைவேல்
கொள்ளப்படைத்துக்கொடுத்தாரிவரென்பர்
கொள்ளப்படைத்துக்கொடுத்தாரிவராயிற்
றுள்ளிளங்கன்றாற்சுவடுற்றாறென்னே
தோற்றுமருப்பிற்றுளைபட்டாரென்னே......................(உ௪)

வேறு.

பீடியல்கன்றினுமடையாளப்பெருமானை
மூடியவன்பாற்பாடியபட்டிமுனியிப்பாற்
கூடியகோலக்கோமுனிகூறுநெறியானே
பாடியல்பூசையாதிகளாற்றப்படர்குற்றான்..................(உ௫)

பொன்னொடுவெள்ளிவார்கனையுந்திப்பொருதோடுந்
தன்னிகரில்லாத்தண்புனற்காஞ்சிநதிதாழ்ந்து
நன்னடம்வல்லோனான்பெறுகென்னுநசையோடும்
பன்னினனொடிச்செய்கடன்முற்றும்படிசெய்தான்............(உ௬)

ஆலவனத்திற்கொற்றவைகோட்டமதன்கீழ்சார்
காலவன்பூசைகண்டருளீசர்நகர்மேல்பாற்
கோலமறாதகாஞ்சியின்றென்பாற்குளிர்பன்னீர்
மூலலிங்கத்தினுத்தரதிக்கின்முன்னுற்றான்....................(உ௭)

தடவியவங்கைக்குண்டிகையாங்குத்தனையுள்ளே
யிடவியதீர்த்தமாகவிருத்தியிமையாரும்
வடகயிலாயமென்றுதுதிப்பவளரங்கி
யடவியினொடுமண்ணலைநூலானமர்வித்தான்..................(உ௮)

குண்டிகைவாவித்தண்புனலானுங்குளிரார
மண்டியகாஞ்சிவார்புனலானும்வளர்வேணி
யண்டனையாட்டிவண்டுபடாதவலர்சாத்தி
யுண்டிகணல்கியொளிபிறகாட்டியுவப்பித்தான்..............(உக)

வடவனம்வாழுங்கொற்றவைபொற்றண்மகிழ்கூரக்
கடவியபூசைகாதலினாற்றிக்கதிர்வெள்ளித்
தடவரையேகிச்சம்புவையங்குந்தாழ்ந்தன்பாற்
சுடர்மணிவெள்ளியம்பலநோக்கித்தொழுதானால்..............(௩0)

நித்தலுமிவ்வாறுதிபுரத்துநிமலற்காம்
பத்திகள்செய்துகாலவனோடும்பசுவான
வுத்தமனோடும்போதிவனத்தினுறைநாளின்
முத்தியளிக்கும்யாகம்வளர்க்குமுறைபூண்டான்..............(௩க)

வேறு.

விண்ணவர்வருகவிஞ்சையர்வருக, புண்ணியமுனிவரர்புகுதகவென்
றெண்ணியமுடங்கலுய்த்தெவ்வெவரு, நண்ணுறவவர்மகிழ்நலஞ்செய்தான்()

வளமருள்காஞ்சியின்வடபாங்கர்க், களமறுவிலதுகண்ணுறநாடி
யளமருபிறவிகளவையேங்க, வுளமுவகையினுறவுழுவித்தான்............(௩௩)

விண்டொடுசாலையும்வியாற்றாற், குண்டமும்வேதியுங்குறித்திட்டுத்
தண்டமும்யூபமுஞ்சமிதைமுதற், பண்டமுங்குறைவறப்பயில்வித்தான்.(௩௪)

வரமலிவஞ்சுளமரமீந்த ,வரணியின்ஞெலிதழலதுமூட்டி
யிரணியவுலகமுமெழுதூமம், பரவியவிருள்செயப்பாவித்தான்.........(௩௫)

துடுப்புநெய்முறைமுறைசொரிந்தங்க, ணெடுப்பியவங்கியினிசைவித்த
தடுப்பருந்தீஞ்சுவைதருமுண்டி, மடுப்பவர்மடுப்புறமடுப்பித்தான்.......(௩௬)

நல்வகைப்பயன்பிறநாடாமே, பல்வகைவேள்வியும்பரனார்த
மெல்வகைமலரடியினைநாடி, யல்வகைமலமறவாற்றினனால்............(௩௭)

விண்ணவரனைவரும்வியப்புற்றார், மண்ணவரனைவருமகிழ்கூர்ந்தா
ரண்ணலுந்திருவருளினரானார், பண்ணியமுனிவனும்பரிவகன்றான்.....(௩அ)

வேறு.

அளவிடுசூழ்ச்சியெல்லையுயிர்கட்கடாதவறிவானசோதியமலன்
வள்வியபாதமுன்னிமறைநான்கும்வல்லமறுவென்றபட்டிமுனிவ
னுளமலியன்புபொங்கவுலகேத்தவாற்றுமுயரோமகுண்டமினைவோர்
விளர்தபுகாமநல்குதிருநீற்றுமேடிதெனநின்றுமேன்மைதருமே....(௩௯)

முண்டகமேலிருந்தபிரமன்சமைத்தமுறையாலவன்பெயரோடும்
விண்டிடுதீர்த்தமானகுண்டிகைத்திர்த்தமாடிமிளிர்நீற்றுமேட்டினிதிபோன்
மண்டியபூதிமெய்யின்வதிவித்தெழுந்துவடபாலடுத்தகயிலை
யண்டனையன்பினேத்துமவரோபிறந்தவறிவாளரல்லர்பிறரே........... (௪௦)

வேறு.

மாதுக்கமாற்றவிழைவார்கண்மண்ணின்மகிழ்போகமெய்தலுறுவா
ரேதுக்களானபலகொண்டுவிண்ணினிமையார்களாதல்விழைவார்
சாதுக்களாதல்விழைவாருமன்புதழைவுற்றபட்டிமுனிவன்
போதுக்கண்மேவிவழிபட்டசெம்மல்புகலன்றிவேறுமுளரோ.........(௪௧)

ஒலிதழுறுப்பணின்றுநிறைநீருணின்றுமுயர்கானடைந்துமுகிலேறுய்
வலிகெழுகுன்றினுச்சிவதிவுற்றுமுண்டிவழுவித்தும்வையமுழுதுங்
கலிகெழுசித்திபெற்றுமதியோர்களெய்துகதிமுற்றுமொன்றுபொழுதின்
மலிதகநல்குமென்பவழிபாடுசெய்யின்வடபாலிருந்தகயிலை.............(௪௨)

வடகயிலாயமேயமணிகண்டர்மேன்மைவளைசெய்துசெப்பலரிதே
புடவியிலெய்துமார்வமருவாதொழிந்தபுரைதீர்ந்தநோன்மையறிவீர்
நடராசனங்கணெருமூவருக்குநயமல்கநல்குதிறன்மற்
றுடலுறுநோய்கண்மாயவுளைசெய்துமென்னவுயர்சூதனோதலுறுவான்..(௪௩)

வடகைலாயப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - எ௪௫.

௨

# நிருத்தப்படலம்.

உரைத்தபருவத்தினெடுமுயர்கணவன்வரவுள்ளித்
தரைத்தலையேக்கறுமடவார்தமைநேரவிடைக்கயிலை
வரைத்தலத்துத்தம்பெருமான்வரைந்தாளொடுநடமால்
கரைத்தவுளத்திடைநாடியிருந்தனர்காலவன்முதலோர்...............(௧)

இவ்வாறுசிவபூசையினிதாற்றியிருக்குநாட்
செவ்வாய்மைக்கோமுனிவன்சிவபெருமானெம்மன்று
மொவ்வாதவிரசதமன்றுளதென்றுனதுகாணு
மவ்வாய்மைபெற்றிலேனெனவயர்ந்துதியானித்தான்...............(௨)

அண்ணலார் திருவருளால சரீரிவாக்கெழுந்து
நண்ணியமுன்னம்பலத்தைநம்பர்மறைத்தருளினார்
திண்ணமுறவவ்வயினீசெய்தொருமன்றதினுங்கள்
பண்ணவன்மெய்யுருவமைத்துப்பணிகவெனப்பணித்ததே..........(௩)

விண்ணெழுந்தமொழிகேளாவிம்மிதனாய்ப்பரவசனாய்
மண்ணிடந்தகோமுனிவன்மாதவத்துக்காலவனைப்
பண்ணரியபெருந்தவத்துப்பட்டிமுனியொடும்விளித்துப்
புண்ணியன்மெய்த்திருவருளாற்போந்ததிதுவெனமொழிந்தான்.....(௪)

மன்னுதிருவருளதுவேல்வாழ்ந்தனம்வாழ்ந்தனமென்று
பன்னியவர்தொழுதாடப்பண்ணவர்களுலகாளு
மன்னவனைவரக்கூவியயங்கியகோமுனிநுங்கள்
நம்பியனைத்தருகவெனக்காவலனுந்தருவித்தான்.....................(௫)

மன்றுபுரியிடங்காணார்மயங்கினர்நிற்குங்காலைக்
கொன்றைசடைமிலைத்தபிரான்கோமளவல்லியினகன்று
தொன்றுதொடுநடம்புரியுந்தொல்லையிடங்காட்டுதற்கு
வென்றிமிகுஞ்சித்தனெனவேற்றுருக்கொண்டாங்கடுத்தான்.......(௬)

கோதிலிரசதமன்றங்கோமுனிவன்முயலுற்றான்
சோதிநடங்காண்டுமெனத்துன்னியவானவரானயர்
வேதியரேனையர்பலரும்விம்மிதங்கொண்டகங்களிப்பப்
போதிவனத்திடைச்சித்துப்புரிபாக்குப்புரிவுற்றான்...................(௭)

வேறு.

பரிதிவானவன்காலையின்மேக்கெழப்பணிக்கு
மருவிமால்வரைதுரும்பெனவளியிடையலைக்குங்
கருவிமாமழையின்றியேபுனலுறைகளுற்றுந்
தருணர்பாலராமூத்தவர்தருணராச்சமைக்கும்..................(௮)

அரவின்வாயிடையலைகடற்சுதையமிழ்தெடுக்குங்
கரளம்வான்சுதையாகுமாகடைக்கணித்தருளும்
பரவைவின்னெழுந்தங்கணேபயில்வுறப்பயிற்றுஞ்
சுரர்கண்மாநுடர்மாநுடர்சுரரெனத்தோற்றும்.................(௯)

மண்ணுளேசிவலோகமும்வருவித்துத்தெரிக்கும்
விண்ணுளேநரருலகமுமேவித்துமறைக்குந்
திண்ணமாகியவசரத்தைச்சரமெனத்திரிக்கும்
வண்ணமாகியசரத்தினையசரமாவயக்கும்.....................(௧௦)

கற்பின்மேதகுமாதருமுளநணிகலங்கப்
பொற்பின்மேதகுமாடவர்தங்களைப்பூக்கும்
வற்பின்மேதகுமாதவர்குழாங்களுமயங்க
வற்பின்மேதகுமரிவையர்பலர்தமையாக்கும்....................(௧௧)

கோடியிந்திரர்கும்பிடக்கடைக்கணித்தருளுங்
கோடிநான்முகர்கும்பிடமுடிவறிதசைக்குங்
கோடிநாரணர்கும்பிடக்குறுநகைகாட்டுங்
கோடிருத்திரர்கும்பிடவருகெனக்கூறும்........................(௧௨)

அறையுமாயிரவாயிரந்தருமநூலமைக்கும்
பொறைகொளாயிரவாயிரம்பொருட்டுறைகிளக்குந்
துறைகொளாயிரவாயிரங்காமநூற்றொகுக்கு
மறைகளாயிரவாயிரம்புதியனவகுக்கும்..........................(௧௩)

எட்டுச்சித்தியும்வல்லவர்முடியினைப்பிரம்பாற்
றொட்டுச்சித்திகடொலைந்தவர்க்கறிவின்மைதுரக்கு
மெட்டுச்சித்தியுஞ்சிறுமகார்களுமெளிதியற்றத்
தொட்டுச்செங்கையினீறவர்மெய்யுறத்தூவும்....................(௧௪)

சித்திவ்வாறுபல்கோடிகள்விளைத்தலுஞ்சித்துக்
கொத்தெலாந்தெரிந்தவர்களும்பரார்குழுவும்
பித்தராகியசித்தரடியிணைபிரியாப்
பித்தராயினர்பெருகுமானந்தமுட்டிளைப்ப.......................(௧௫)

வேறு.

மட்டுவிரியுநறுந்துளபமறைத்தநிறத்துக்கோமுனியும்
பட்டிமுனியுங்காலவனும்பல்லாற்றானுமிவருமொன்
றொட்டியுணருமுள்ளகமுமுணர்ந்துதெளியாவகைமருட்டச்
சட்டவிருவியறிதுமெனத்தழைத்தசித்தர்மருங்கணைந்தார்...(௧௬)

படைத்தியயனுமலையுலகம்பரித்தியரியுமலையாங்கே
துடைத்தியரனுமலைமறைப்புச்சூழ்திதொழுமீசனுமல்லை
தடைத்தமலநோய்நலியவருடருதியைந்துமுகனுமலை
கொடுத்திபலநூன்மாதவர்க்குங்குருவுமலைநீயாரென்றார்.......(௧௭)

முனிவர்வினவமுனிவருக்குமுனியாஞ்சித்தரிறுக்கின்றார்
துனியில்கேள்விமாதவத்தீர்தொகுத்துமொழியக்கேண்மினோ
நனிசித்துடையோரெவ்வெவருநாடுமேதன்மைச்சித்தரோ
மினியபெயருஞ்சித்தேசனென்பதாகுமறிமினோ..............(௧௮)

காலங்கடந்துவினைகடந்துகருவியனைத்துங்கடந்துமல
மூலங்கடந்ததன்மையேமுழுதுமுணர்பேரறிவினெங்
கோலங்கடந்தவுருவினெங்கோலமனைத்துங்குறிக்கொண்டேஞ்
சீலங்கடந்தவறிவினர்க்குச்சேயமல்லேந்தெளிமினோ.......(கக)

என்றுஇளந்தசித்தேசர்க்கெதிர்கைதொழுதுமுனிவரர்கள்
வென்றவினையீர்காலத்தின்விகற்பங்கடந்துமுழுதுணர்ந்த
நன்றியுடையீர்நீராகினம்பனடனநவில்கின்ற
மன்றந்தெரிக்கவல்லீரோல்வகுத்தவுணாமெய்யாமென்றார்.....(உ0)

பொம்மலோதியிடமறைத்துப்போந்தசித்தர்முறுவலித்துச்
செம்மலுடையீராதலினற்றேவதேவன்றிருமன்ற
நும்மையறிவித்திடுதுமெனநுவன்றருய்ந்தோமெனத்தாழ்ந்தார்
வம்மினெனக்கொண்டேன்போந்தார்மணிப்பாதுகைகணிலந்தோய()

ஆதிலிங்கந்தனக்குவடகிழக்கினெல்லையடர்வினைகள்
காதியிருந்தகாலவனீச்சரத்துண்மூவருருவான
போதிநிழலிற்புக்கருளிப்பொருந்தமன்றமெழுகவெனச்
சோதிமலரத்திருவாயாற்சொன்னார்மன்றமெழுந்ததே.............(உஉ)

அண்டமுகட்டைப்பொதிர்ப்பனபோலசும்புமொளியின்கதிர்திமிரப்
பிண்டமானகீழண்டப்பித்திதொடுத்தவடியினதாய்க்
கொண்டதிசைகளோரொட்டுங்குறுகியணியவாய்க்கிடப்ப
மண்டியெழுந்தவிரசதத்தின்மன்றின்பெருமைவகுப்பாரார்........(உ௩)

பளிக்குச்சிலைத்திண்சுவர்நீடிப்பளிக்குச்சுவர்க்குளோவியங்கள்
வெளிக்கணமரர்நிற்பதுபோல்விளங்கிவெள்ளிமேல்வேய்ந்து
களிக்குஞ்செம்பொன்வரைநிறமுங்கழிக்கும்பைம்பொற்றலமுள்ளாற்
றுளிக்குங்கிரணவொளிமணிகடுவென்றிச்சுடர்ந்ததெழுமன்றம்......(உச)

மந்தாரத்தின்மலர்கற்பமலர்சந்தானமலர்தாருக்
கொந்தார்மலராதியிற்செய்தகோதைநவமாமணிமாலை
சிந்தாமணியின்பலகோவைதெய்வநிதித்தாமரைத்தெரிய
னந்தாவொளிப்பொன்னரிமாலையுள்ளும்புறம்புநான்றனவே......(உரு)

பனிநீரளவித்தேன்விராய்ப்பசுந்தாதணைவிமான்மதந்தோய்ந்
தினியபுழுகார்ந்துரோசனைசேர்ந்திளகுநறுங்குங்குமச்சாந்த
நனியெவ்விடனுமணிந்தைந்துநறியபுகையுந்தவழ்ந்தமண
மணிதருலகும்விண்ணுலகும்வளர்மாதிரமுங்கமழ்ந்ததே..........(உசு)

உடம்படல்போன்றிறைமறுத்தோர்ந்தமவ்
வுடம்பிடித்தடங்கணுளைக்குங்காதலா
லுடம்புமென்கொடியெனவொசியமீட்டுந்தாழ்ந்
துடங்குதன்பரிசனமுறவங்கேகினாள்...............(கஉ)

வந்தனள்சதியெனவழங்குதூதுவர்
முந்துபுக்குரைப்பமுன்முகத்துச்சென்றனை
டந்தைதவம்மென்றிலன்றன்னைத்தேர்ந்தவன்
சுந்தரமனைவியுஞ்சொல்லொன்றுடிலள்.............(க௩)

மக்களும்பேசிலர்மருங்குதுன்றிய
வொக்கலுமுவந்திலரொருமருங்குபோ
யிக்களத்தின்னுமென்விளையுமன்னது
மிக்கறிவாமெனவிருத்தன்மேயினாள்...............(க௪)

உருத்திரச்செம்மலுக்குதவும்பாகமற்
றருத்தியின்மாயனுக்களித்திட்டானவன்
மருத்திகழ்பூங்குழல்வனசமென்முகைத்
திருத்திகழ்முலையவளெக்கிச்சிந்திப்பாள்..........(க௫)

வள்ளலாரருளினைமறுத்துப்போந்தனக்
தெள்ளியவுணர்விலஞ்சிதம்புத்தக்கனு
மெள்ளினனிறையையுமிவன்மகண்மையைத்
தள்ளுதன்முறையெனத்தழலின்மூழ்கினாள்.........(க௬)

துவன்றியமுனிவருஞ்சுரரும்யாவருங்
கவன்றனர்துடித்தனர்கலுழ்ந்துதக்கனு
மிவன்றனக்கிப்பழியெய்திற்றம்மவோ
பவன்றனையெள்ளியபான்மைத்தாலென்றார்.,......(க௭)

அழுங்கியசோடைகொண்டடுத்துளார்விடம்
விழுங்கியதெனமதிவேறுபட்டன
ரொழுங்கிலாத்தக்கனும்வெற்றுடம்பனா
யெழுங்கனன்மகத்தொழிலியற்றினின்றனன்.......(க௮)

வேள்வியந்தீயிடைமேவினார்க்கெலாம்
வாழ்வினையளிப்பவண்மாய்ந்தவண்ணமோர்ந்
தாழ்வினைவிடமிடற்றடக்கிகோபியாத்
தாழ்வினைச்சடையொன்றுதரையினெற்றினான்.....(கக)

எற்றியசடையினின்றெரிபொன்வேணியு
நெற்றியின்விழியுநீடலையின்கோவைகண்
முற்றியவுரமுமொய்படைகையேந்திய
வெற்றியும்விளங்குறவீரன்றோன்றினான்.............(உ0)

வணங்கினனிறைவனைமலர்க்கைவாய்புதைத்
திணங்கலர்க்கிரும்படையெடுப்பநேர்கலா
துணங்குறத்திருவுளத்தொன்றுஞ்சேவக
வணங்கரும்பணியெனக்கருள்கவென்றனன்........(உக)

மாறுகொண்டொருமகம்வளர்க்குந்தக்கனைக்
கூறுசெய்தவ்வழிகுழுமினோர்க்கெலாம்
வீறுசெய்தண்டங்களவிளைதிட்டம்மக
நீறுசெய்தமர்கெனநிமலனேவினான்..................(உஉ)

வேறு.

நிழன்றவொருவெண்கவிகைநீடுமரசாட்சி
கழன்றுவளர்தக்கனுயிர்கையகலவீரன்
றழன்றுபலசாரதர்கடற்புறம்வளாவ
வழன்றின்மகளபின்றொடரவைதவணடுத்தான்....... ..(உங)

சிற்சிலகணங்கடிசைதோறும்வழிகாப்பப்
பற்பலகணங்களொடுபாழிமகமாற்றும்
பொற்புறுகளம்புனிதவீரனுறலோடு
மற்பவுணர்வாளரனைவோருமஞர்கூர்ந்தார்...............(உச)

தக்கனமுடியெச்சன்முடியீர்ந்துதழலிட்டான்
றொக்கவழலங்கையொடுநாத்திரடுணித்தான்
புக்கபகன்வாள்விழிபுயந்துபகலோன்பல்
லொக்கவுகவெற்றியொருவீரன்மதிதேய்த்தான்.........(உரு)

நாசியொடுமாதர்கணகிற்றுணையிழந்தார்
பேசும்வகையென்னைபெறுவானவர்திறத்தத்
தேசினுடல்பற்பலர்சிதைந்துயிரிறந்தார்
கூசியுயிர்கொண்டுபலர்கொம்மெனவிரிந்தார்.............(உசு)

வேள்விவளர்சாலையழன்மேவவினிதூட்டித்
தாள்வினையினேர்ந்துசமராடுமுவணத்தோன்
வாள்விடுகனற்பரிதிமாயவலிகாற்றி
மீள்வினைபுரிந்தருளினானிகரில்வீரன்......................(உஎ)

அன்றுவருவீரனரியேறெனவிறுப்பத்
தொன்றுவருமாயன்முதலாஞ்சுரர்களெல்லா
மன்றவழுவைத்தொகுதிமாறுவர்களென்றால்
வென்றிவிடையான்வலியின்மேன்மையறிவாரார்.......(௨௮)

## வேறு.

வன்னியின்முழுகித்தக்கன்மகளெனுமுறைமைநீத்த
கன்னிகல்வரைகட்கெல்லாங்காவலன்மகளாய்வைகி
மின்னவிர்சடிலமோலிவேதியன்வதுவையாற்றத்
தன்னுளத்தினிதுமுன்னித்தவம்பலபுரியாநின்றாள்............(௨௯)

ஆரணமுறையிட்டின்னுமளவிடற்கரியமுக்கட்
பூரணரருளால்வீணைப்புனிதமாமுனிவன்போந்து
போரணிமதவேலுண்கட்புணர்முலையுமையாள்செய்ய
தாரணிபாதந்தாழ்ந்தித்தவஞ்செயலெற்றுக்கென்றான்.........(௩௦)

வாயினான்மனத்தானீண்டவடிவினாலெட்டவொண்ணாத்
தாயிலாத்தாயன்னானைச்சார்வதுகுறித்ததென்று
வேயினாற்புரிந்தாலன்னவீங்குதோளிறைவிவிள்ள
வாயினீதமலைகேளென்றறைகுவன்வீணைச்செல்வன்..........(௩௧)

எவ்வயின்வதிந்துநீமற்றிருந்தவம்புரிந்தாயேனு
மவ்வயினிறைவன்மன்றலாற்றினானின்னைச்சேருஞ்
செவ்விநீட்டிக்குமாற்றாற்சிறுவரைவதுவைமுற்ற
வொவ்வரும்பேரூர்வைப்பினுஞற்றுதல்கருமமென்றான்.......(௩௨)

அங்ஙனமாகவென்னாவருந்தவமுனியைப்போக்கி
யுங்ஙனந்தவங்களாற்றுமுமைமடமாதுமேனைக்
கிங்ஙனந்தீர்ந்துபேரூர்க்கெய்துவறவத்துக்கென்றா
ளெங்ஙனநின்னைப்போக்கியிருத்துமென்றன்னைநைந்தாள்....(௩௩)

அருகுறுபாங்கிமார்களன்னையைவணங்கிநந்த
மருமலர்க்கூந்தலாட்குமாடகத்திவவுநல்யாழ்ப்
பொருவறுமுனிவன்வந்துபுகன்றனன்பேரூர்வைப்பிற்
கருதியமுக்கட்பெம்மான்கடியயர்ந்திடுவனென்னா...........(௩௪)

ஆதலால்வதுவைக்கேகுமதுதனைவிலக்கவொண்ணா
போதுகவென்பதன்றேபொருத்தமென்றுரைப்பவன்னை
காதலின்மகளைவல்லேகைகளாலணைத்துமோந்து
நீதியிற்கணவனார்க்குநிகழ்ந்ததுநிகழ்த்தினாளே..............(௩௫)

அருந்தவப்பேறுவாய்ந்தவாரணங்கென்னையற்றேல்
வருந்துதலில்லையென்றுமனத்திடைமகிழ்ச்சிகூர்ந்து
திருந்தியவிமையவெற்பன்றேவியங்குவப்பக்கூறி
முருந்திளமுறுவற்செவ்வாய்மொய்குழன்மகளைநோக்கி......(௩௬)

தேவரும்பரசுமேலைச்சிதம்பரநகரம்புக்கான்
மூவருமிறைஞ்சுமுக்கண்மூர்த்தியார்விரைந்துமன்ற
லாவதுசெய்யுமாயினவ்வயினின்னேயன்றாய்
போவதுகருமமாகுமெனப்புகன்றுரைத்துப்பின்னர்...........(௩௭)

அணிகலனமைத்தபேழையவிரிழைத்துகில்பெய்பேழை
தணிபெறுபனிநீர்ச்செப்புதண்ணியசாந்துச்செப்பு
மணமலிவிரையின்செப்புமான்மதச்செப்புமற்று
மிணர்மலர்க்குழலினாளுக்கெண்ணிலகொடுத்துப்பின்னர்......(௩௮)

பாங்கியர்தங்கட்கெல்லாம்பலவகைச்சிறப்புநல்கி
யோங்கியபடைஞர்க்கூவியொண்டொடிமுன்கையாது
நீங்கறுபேருர்க்கின்றுசெல்லுவாளுடங்குபோந்திட்
டிங்குவந்துறுகவென்றானெழுந்தனரவர்கடாழ்ந்து............(௩௯)

புரசைவெங்களிறுந்தேரும்புரவியுந்தானையோடு
விரசினகடைமுன்றலைமிடைந்துதுந்துபிகளார்ப்பப்
பரசுநர்பாங்கர்ப்போதப்பலசனம்விலக்கிமுன்னே
கரிசில்கஞ்சுகியோர்செல்லக்கண்டவர்வியந்துநிற்ப............(௪0)

குறளொடுசிந்துமுன்னேகுறுகுறுநடந்துசெல்ல
மறமலிவாள்கையேந்தியாணுடைமாணத்தாங்குந்
திறனுறுபேடிமார்களண்மையிற்றிரண்டுசூழ
நறைமலிகூந்தற்செவ்வாய்நாடகமகளிராட..... ...............(௪௧)

கவரிகண்மருங்குதுள்ளக்கவிகைமேனிழற்றிச்சீர்ப்ப
வவிர்மணிவடங்கள்சுற்றினமைத்தசாந்தாற்றிபம்பத்
தவிரருங்காதல்பூண்டதந்தைதாய்விடைபெற்றம்பொற்
சிவிகையினிவர்ந்துசென்றாடெள்ளியோர்மனத்துச்சென்றாள்..(௪௨)

நரன்றுவேயுக்கமுத்துநாகத்தின்மருப்பின்முத்தும்
வரன்றுவெள்ளருவிதூங்குமருங்கெலாம்வேடரீண்டி
முரன்றுதேனெழுந்துமொய்க்குமுதிரிறாலழித்துமுக்கட்
பரன்றனிக்குமரற்போற்றும்பலவரைகடந்துசென்றாள்.......(௪௩)

பரம்பரன் றன்னையெண்ணார்படர்பெருங்கும்பிபோல
நிரம்பியவிடும்பைநல்குநெறிவயினியங்குவோரை
யரம்புசெய்யெயினச்சாதியமர்ந்தபன்முரம்புசூழ்ந்த
சுரம்பலகடந்துசென்றுவெந்துவங்கடந்துசென்றாள்...........(சச)

நிரைமணியோதையாயர்நிகழ்த்துவேய்ங்குழலினோசை
நுரைதயிர்கடையுஞ்சும்மைநுடங்குமென்கொடியின்முல்லை
விரைமலர்வண்டினார்ப்பும்வேறுவேறிசைப்பக்கேளாப்
பரையெனுமட்சுப்பொற்பாவைபலவனங்கடந்துசென்றாள்.....(சரு)

முண்டகமுறுக்குவிட்டுமுகமலர்ந்திருப்பச்செந்தேன்
கொண்டுடைந்தாதுபில்குங்குவளைகள்விழித்துக்காண
விண்டுடைந்தேறல்காலும்விரைக்கயிரவவாய்விள்ளக்
கண்டுகண்டினிதுசென்றாள்கழனிகள்பலவுமாதோ..............(சசு)

தாந்திரைகொணர்ந்துவீசுந்தரளமூர்ந்துவருமேழ்கப்
பூந்துணர்த்தாதுபோர்க்கும்புன்னையங்கானமெல்லாந்
தேந்துளிதுளித்துவாசஞ்செறித்துமென்மலர்கண்முன்ன
ரேந்துதன்கடல்சூழ்வைப்பினிடம்பலகடந்துசென்றாள்........(சஎ)

வேறு.

பண்டுபிரமன்முடிதேடிப்பரிந்தெதன்கணேறுதிமமற்
றண்டர்பெருமான்மனைவியிவளடியுமுடியுமறிந்துநலங்
கொண்டுமகிழ்வாமெனவெங்குங்குழுமுற்றெனநீர்நிலைதோறு
மண்டுசிறகரோதிமங்கண்மகிழ்கூர்கொங்குநாடடுத்தாள்......(சஅ)

அரும்புவிரிந்தமலர்த்தேனுமாலைமடுத்துக்களமர்தெறுங்
கரும்புசொரிந்தாறுஞ்சாறுங்கலந்துகால்களெனவொழுகிச்
சுரும்பருழக்குமலர்ப்பண்ணைந்தொகுதைஞ்சாலிநனையோம்பப்
பெரும்பைதிரநீத்தலும்போற்றும்பேரூரெல்லைநண்ணினாள்...(சகூ)

வேறு.

திருநகரெல்லைநாழ்ந்துசெழும்புனற்காஞ்சிதோய்ந்து
மருமலிமன்றப்போற்றிவளரிரசதவெற்பேந்தி
யருவுருவென்னநின்றவாதிலிங்கந்திற்பூசை
பெருகியவன்பினாற்றிப்பெருந்தவமியற்றநின்றாள்........(ருO)

உடங்குசென்றிருந்தசேனையொள்ளியகழற்கால்வீர
ரடங்கருமகிழ்ச்சிபொங்கவாதிலிங்கத்தைப்போற்றித்
தொடங்கியநவத்தினைத்தொழுதருள்விடைபெற்றேகித்
தடங்கைவேழங்கள்சூழ்தண்பனிவரையின்வாழ்ந்தார்...(ருக)

காலங்கடோறுங்காஞ்சிக்கடிபுனறோய்ந்துவேத
சீலங்கொண்டிமையமாதுசெய்திடுந்தவத்தின்பேறு
ஞாலங்கண்டுய்யச்செய்வானதிமதிபொதியும்வேணி
யாலங்கொண்மிடற்றிறைவனோரந்தணக்கிழவனானான் ......(ருஉ)

வேறு.

திங்களுமிழ்வெண்சுதைதிமிர்ந்தொளிர்வதென்னத்
தங்குதலைவெண்ணரை நயங்கமதியேபோ
லங்கண்வளர்வெண்சிகைமுடிந்ததமைவெய்தப்
பொங்குபொடியென்னவுடல்போர்த்தநரைசேர்ப்ப.......(ருங)

மடங்கலுரிமாறியதுபோன்றுமணிமார்பி
னுடங்குபுரிநூல்குலவநோன்மைவளர்தோண்மேற்
படங்குழுவுறாநதுபகட்டுரிமெய்வேறா
யடங்கியதுபோன்மெனவுடைந்துசரிகிற்ப...............(ருச)

துவ்வமிழ்தமன்னதுவர்வாய்மொழிமடந்தை
யிவ்வுருவினேகலுறின்யாதுமிசையாளென்
றவ்வரையினார்ந்ததுகிலேதிடைவிலக்குஞ்
செவ்வியினெகிழ்ந்துதிகழ்வுற்றதுசழங்க...............(ருரு)

திரைந்துநசைமெய்முழுதுஞ்சென்னிகைகுலைப்ப
விரைந்துவளிநாசியின்விராவவிடையாவ
நிரைந்தெழுநரம்புநெடுகித்தசைகடேங்க
வரைந்தறியொணாதமொழிவாயிடைவழங்க..............(ருசு)

அண்மையினடுத்தவரைநோக்கவுமகங்கைத்
திண்மைகொடுநான்றவிமைசெவ்விதினுயர்த்த
வண்மையுரைகேட்டிலதுபோன்றுவளர்காதி
னொண்மைமகரக்குழையொளிர்ந்துகதிர்வீச.............(ருஎ)

நேடிநெடியோனெடிதுலந்துமறியாத
பீடுவளர்சேவடிகள்பேணுமவனில்லாஞ்
சேடுவளர்பாரினுறல்செவ்வியலதென்றுப்
பாடுமறையின்கழல்கள்பாதமலர்சூட.....................(ருஅ)

நாளுமினிதாக்குபுகழ்நன்றிசெயவோங்கித்
தாளொடுவளைந்தனையதண்குடைநிழற்ற
மீளியர்வெருக்கொள்வடிசூலமொருகோலாக்
கோளிகுகரங்கொடுகுறித்தியவைசென்றான்..............(ருகூ)

வில்லெனவளைந்தவுடலாதரவுவீக்கும்
வல்லநெடுநாணெனவயங்குதடியின்பாற்
புல்லவெதிர்நின்றுவிடுபூசுரனைநோக்கி
நல்லவடியாரெனநயந்துமைபணிந்தாள்....................(சு0)

வேறு.

பணிந்தபார்ப்பதி, யணங்குக்கண்ணலார்
மணங்கொண்மங்கல, மிணங்குகென்றனர்...........(சுக)

ஏந்தல்யாண்டையை, போந்தபுந்தியென்
னீந்துவப்பல்யான், கூர்ந்துகூறென்றாள்...........(சுஉ)

வேறு.

மாசையன்னநன்மாமையாவென
தாசைவீசுகேனென்றியாதலாற்
றேசமோடுமென்செய்தியாவையும்
பேசுகேனெனப்பேசும்பூசுரன்................(சுா)

வெள்ளிமால்வரைமேவும்வாழ்க்கையே
மெள்ளுறாதவெம்பில்லின்வாழ்க்கையா
ளுள்ளமேயலாவுருவுமொன்றெனக்
கொள்ளுமன்பினன்குறைவில்செல்வத்தாள்...(சுச)

என்னவாறுநாமியைந்துநின்றன
மன்னவாறெலாமமையுமாற்றலாள்
கன்னிவாகனங்காமுற்றாரினுந்
தன்னையன்றிநாந்தமியமாகலம்................(சுரு)

இரந்துசெல்வநெம்மியற்கையாயினும்
பரந்துவந்திடும்பன்பினோர்க்கெலாஞ்
சுரந்தகாதலிற்றுறுத்துப்பல்பொருள்
புரந்துநிற்குமப்பொலிவினீங்கிலள்............(சுசு)

பகையடுத்திடிற்பாரித்தெங்கர
மிகைசெய்தாணியின்விசிகம்பற்றுமு
னகைமணிக்கொடியன்னநாயகி
தகைகொடன்கரந்தனுவெடுக்குமே............(சுஎ)

இயவைநீந்துதலெய்துமாயிடிற்
பயிறல்கொண்டொருபாலுடங்குறுஞ்
செயலிற்றீர்ந்துபின்செல்லுவாளலண்
முயறல்கொண்டுதான்முந்தவுஞ்செயாள்......(சுஅ)

அருளிச்செய்யினுமறிந் துளோருமெம்
மருளில்கண் சுடும்வன் கனென்பர்கள்
வெருவக்காயினுமவள்வியன் கணைப்
பொருவில்சீதளப்பூங்கனென்பரால்..........(சுக)

சுணங்குபூத்தவிர்தொய்யின்மென் முலை
யிணங்கிவைகலுமின்பநல்கினு
மணங்குமற்றவளார்வமென்சொல்கே
மணங்குமெய்ப்பசப்பகல்வதில்லையே..........(எ0)

கொழுநனையலாற்றெய்வங்கொள்கலா
விழுமங்கற்பனைவிற்றுமாதர்க்குத்
தொழுமவட்கெனைத்தெய்வஞ்சொல்லுத
லெழுபிறப்பினுமியற்கைத்தென்பவே..........(எக)

மன்னுமக்களைவாய்ப்பநல்கியுங்
கன்னியென்னுமக்கவின்படைத்துள
முன்னுவையகமுழுதுந்தாடொழு
தன்னையென்றுசொல்லருளினெல்லையாள்.....(எஉ)

தாயுந்தந்தையுஞ்சகோதரங்களு
மாயசுற்றமுமமைந்திலேநமக்
கேயுநன்மனையாளின்யாவையு
மேயவாழ்க்கையேவீங்குதோளினாய்..........(எங)

வேறு.

பலவிளம்புவதென்னையெம்பலகுணமெல்லாங்
கலவுமன்னவளில்லையேலில்லையவள்கழியச்
சுலவியெங்கணுந்தொலைவருமோகத்தால்வேறாய்
மலிநரைதிரைமூப்பெமைமருவியதணங்கே..............(எச)

கல்லரத்தமெய்பூட்டியகாழகமுடுத்து
வில்லடுத்தபல்வார்சடைவிளங்குறமுடித்து
நல்லடுத்தமெய்த்தவம்பலநாள்கழிவெய்த
வில்லடுத்தவம்மாதுறவியற்றினமதனால்................(எரு)

அனையமாதுகொலவளெழிற்சாயைகொலென்ன
நினையநின்றிடுநின்வயினடுத்தனமினிமே
வினைவதொன்றிலையின்பமேயெமக்கடுப்பனவாம்
புனைமொழித்திறமன்றிதுபூங்குழற்கோதாய்..............(எசு)

பெண்மைபெற்றவர்தமக்கெலாம்பெருமகிழ்வளிக்குந்
திண்மைபெற்றதோட்கணவர்தங்கலவியிற்றிளைத்த
லொண்மைமற்றஃதொழிதரவனத்திடையுணங்கி
வண்மைசிந்துறவருந்துவதோவியன்மடவாய்............(எஎ)

வாசநெய்த்தலையுரைத்துவண்சிட்பிணைவிப்
பூசுதண்கடிக்காசறைபொழிந்தலரணிந்து
தேசிருட்குழன்மகிழ்தற்குட்பாயல்செய்யாமை
யூசலஞ்செவியாய்சடையுறுத்துதலழகோ................(எஅ)

குலவுவாணுதல்குங்குமத்திலகமேற்பொறித்துங்
கலவுமாமணியிலட்டகங்கவினக்கால்யாத்தி
டலவுநாயகனங்கைநீவுதல்படுத்தாதே
யுலவுமாமதிமுகத்திரையடலையூட்டிலதோ.................(எகூ)

அரிபரந்தவாட்டடங்கணஞ்சனந்தங்கொழுகி
யுரிபரந்தநாயகனுருவுவப்புறக்காணு
தெரிபரந்தவென்றாழெழிரேறவார்புருவ
முரிபரந்துறவிடுத்துநீமுயற்றலுந்தகுமோ...... ..........(அ0)

நறுவிரைத்தகாலேகமுநனைமதுகரங்கள்
பெறுமலர்ச்செழுந்தொங்கலும்பேணியகாந்தள்
முறுகுமெய்க்கடிமோந்துமோந்தின்புறலன்றி
வறுமைநாசியினிறுவுதலாகுமோமடந்தாய்................(அக)

திருந்துவாசனைசெறித்தபாகடைநனிதின்று
முருந்துவென்றொளிர்முறுவலாய்செழுந்துவர்ச்செவ்வாய்
விருந்துண்டன்பனோர்வியப்பமிக்கமிழ்தருளாதே
வருந்தமந்திரங்கணித்துணங்குதல்வழக்காமே...........(அஉ)

மகரவாய்க்குழையணிந்தருண்மவுணர்வாய்மொழியுந்
தகரவார்குழாலவருழையார்வந்துசாற்றும்
புகரிலாதமென்றீஞ்சொலும்புகாமைவீழ்செவிகள்
பகருநீள்வனத்துழனியுங்கேட்பதுபண்போ..............(அங)

துன்பெலாந்தபத்துணைவனோர்கலவியின்சுவையு
மன்பினலவர்புரியுமாதரவுமுள்ளகங்கொண்
டின்பமார்ந்தெழின்முகமலராதிருந்தியான
வன்பினல்கியவுளத்தொடுங்குவதோவனிதாய்..........(அச)

பூகமொத்தொளிர்மிடறுமங்கலியநாண்புணர்ந்து
போகமொத்தெழப்புட்குரல்பயிற்றுபுகாம
தாகமிக்கறத்தலைவனூர்க்கமுதளியாதே
வேகமுற்றழல்வதல்செயமெலிவதோதோகாய்..........(அரு)

அங்கதங்களுமவிர்மணிக்குருகும்பொற்றொடியுங்
கங்கணங்களுங்கதிர்பொழியாழியுஞ்செறித்து
மங்கலந்திகழ்கேள்வனுருடல்வலைத்தணைத்துத்
தங்குகிற்றிலாதிருட்பதோதடங்கரந்தையால்.............(அசு)

களபமங்கையிற்கொட்டியுங்கமழ்சாறுந்தாது
வளரவட்டியும்வரித்துமாமணிவடமணிந்து
மிளிர்நலன்றனூறுகுறத்தழுவியின்புறுமே
விளர்திறந்தருமோமுலைமென்கொடிப்பாவாய்..........(அஎ)

மணிவிரிச்சிகைபருமம்வன்கலாபமேகலையு
மணிசெய்காஞ்சியும்பட்டுமிட்டழகுசெய்யாமே
பணிவிரித்தடைபாற்றியநிதம்பம்வெண்டூசிற்
பிணியடுத்தவைபிழையலாதழகுகொல்பேதாய்...,......(அஅ)

சிலம்புகிண்கிணிபரியகமலத்தகந்திருத்தி
யலம்பவன்பனூர்கலவியினடிமென்மலர்த்தாள்
புலம்புவந்துழிப்புலந்தவர்சென்னியிற்பொறியா
திலம்படத்தவிர்விட்பதோவிளிமொழிப்பாவாய்..........(அகூ)

சொன்னபல்வகையுறுப்புடைத்தொழிலெலாந்துலங்கப்
பின்னரன்பரோடாடுதுமெனப்பெரிதிருப்பிற்
கன்னியிற்றருமிளமையுங்கழிதராதிருக்கு
மென்னவெட்டெருநூல்களுமியம்பியதிலையே...,.........(கூ0)

வாய்ந்தநுண்ணறிவுடையரேயாயினும்வளர்நூ
லாய்ந்தகல்வியராயினுமறிவிலார்மடவார்
தேய்ந்தமெல்லிடையாய்திகழ்கவினலம்வாடச்
சாய்ந்துவேறுறத்தவம்விளைக்கின்றனையதனால்...........(கூக)

வனப்பிழக்கினுமிழக்குகவவாவினையுரைத்தாற்
றனைக்கொடுப்பலென்றாய்மடவாய்நினைத்தழுவ
நினைத்தடுத்தனனியஃதிசைந்திலையாயின்
மனத்துவாய்மையினிழந்தனைமாதவம்விளைத்தென்.......(கூஉ)

உறுகணத்துநின்கண்ணருளுதவுறுதொழியின்
மறுகணத்தினிவ்வடிவெமக்குதவுறுமாயுந்
தெறுகொலைப்பழிதேமொழிசிவனாநிற்சிவணிற்
பெறுதவப்பயனளித்திடுந்தேவரார்பேசாய்..............(கூங)

வேற்றுநீடுருவெடுத்துறும்விண்ணவர்பெருமான்
சாற்றும்வாய்மொழிகேட்டருட்டையல்பூசுரனிப்
போற்றுமாக்கையனாகியும்புணர்ந்தகாமத்தா
னூற்றிலானெனவசித்தெதிரறைகுவளானாள்............(கூச)

வேறு.

நரைத்துமெய்நடுக்குறநகனாம்வேதியா
வுரைத்தமைநன்றுநன்றொருத்திகானகம்
புரைத்தகன்னிகையெனப்புந்திகோடிகொற்
றரைத்தலைத்தவத்தையார்நாழ்த்துநீர்மையார்.......(கூரு)

இளமையுமிறக்குங்கொலெடுத்தமாதவந்
தளர்வறமுற்றுமேற்சார்ந்தமாணிக்கன்
றளவுசெயெண்ணிரண்டாண்டெஞ்ஞான்றுமே
வளர்தரவளித்தவன்வரத்தைத்தேர்கிலாய்..........(கூசு)

ஆக்கையும்வாக்குமென்னகமும்வார்நுத
னோக்கினார்தமக்கெனநுதலிவைத்தனன்
றீக்கெதிரவர்மணஞ்செய்வதில்லையேற்
போக்குவல்பொழுதெலாந்தவங்கள்போற்றியே......(கூஎ)

எடுத்தவிப்பவத்திடையெம்பிரான்மண
மடுத்திலதாயினுமந்தணாளகே
டொடுத்தவித்தவத்தின்மேற்றோற்றத்தாயினும்
விடுத்திடலருங்கடிமேவத்தக்கதே.....................(கூஅ)

சிலபகலாயினுந்தவஞ்செய்யாதுறு
பலபகற்சிறியவர்பாலராவதிற்
பலபகலாயினும்பரிந்துநோன்பினாற்
சிலபகன்மேலவர்ச்சேர்ச்சிசெம்மற்றே.................(கூகூ)

இளமையினழகினினெதிரில்செல்வத்து
வளமையின்மிக்கவானவருநஞ்சமார்
களனடிகருதுமென்காமர்வீழ்கலார்
விளரறிவினையெனைவீழ்திவேதியா.....................(க00)

ஈசனார்காதலியென்றும்வேதியா
வாசையைவெறுத்திலையதிகபாதகம்
பேசியநூல்வழிசிறிதும்பேணிலை
மாசுசெயுடலெனமடமுமூத்தனை. . . . . . (௧0௧)

காதலன்மிக்கடுத்துழிக்கற்றகல்வியி
னுதருபயனுமங்கடுப்பதில்லென
மூதறிவுடையவர்மொழிந்தசொற்பயன்
வேதியநின்னிடைவிளங்கக்கண்டனன் . . . . . (௧0௨)

இந்தினத்தெந்தநாழிகையின்மாயுமோ
வந்தகுநின்னுயிராரவலேலையின்
மொந்துணவிடுப்பதோமுதல்வன்றளிளை
பொந்துறவிடுப்பதுபோக்கிபூசுரா. . . . (௧0௩)

ஆடியகூத்தர்டலைகாநலர்
பீடியரவத்தினேட்டேதித்தல்லதை
நாடியதியர்பாணுட்டுவாய்மையுங்
கோடியதிலையேகுறிக்கின்விப்பிரா . (௧0௪)

பிறர்மனையார்தவப்பேணினாருமை
முறுகியகாதலின்மோகித்தார்தமை
யிறுதிசெய்திடற்பயனென்னைநின்னுயி
ரறுதியுற்றலதிவைதென்கொலாம் . . . . . (௧0௫)

டாங்கியர்திருப்பள்ளித்தாமமாதியி
னீங்கினர்வருகுவர்கிற்றியேவிவட்
டாங்கருந்தண்டங்கள்சமைபட்டர்பைப்பய
வாங்குநின்னிருக்கையையடுப்பச்செல்கென்றாள் . . (௧0௬)

பிணிமலர்க்கருங்குழற்பெரியபூண்முலைப்
பணிமொழிப்பார்ப்பதிபகர்தல்கேட்டொளிர்
மணிநிறவண்ணனும்வணங்கும்விப்பிரன்
றுணிவொடுமவளெதிர்சொல்லல்சொல்லினான் . . . . (௧0௭)

வேறு.

மழலையந்தீஞ்சொனங்காய்வடிவினைநோக்கியந்தோ
கிழவனென்றெம்மையெண்ணிக்கீழ்மைசெய்தெள்ளிநின்றாய்
பழகியகாமந்துய்ப்பப்படர்ந்துநீயிசைந்தாயாகி
லழகியகாளையாவலஃதுநீபின்புகாண்டி. . . . . . . . . . . . . . . . (௧0௮)

நிற்றொழுமேவன்மாதர்நீங்கினர்வந்துசால
முற்றினரடர்க்கத்தக்கழப்பினையுடையேமாகிற்
பற்றியமனமேகொண்டுபடர்குவமல்லேங்கண்டாய்
செற்றியமலர்மென்கூந்தற்றேமொழிப்பாவைநல்லாய்...(க0௯)

தேவர்கள்குழாமனைத்துந்திரளினுஞ்சீற்றத்துப்பிற்
காவலர்குழுக்கண்முற்றுங்களுலினுங்கண்ணின்றெம்மைப்
போவதுபுரியவல்லார்பூவைநின்வதுவைக்கோல
மாவதுபுரிந்திங்கல்லாலகல்கிலமடியொன்றுனும்.........(௧௧0)

தகவறுபயிக்கம்புக்குத்தளர்ந்தழுந்தொழிலையந்தோ
புகலுருத்திரப்பேர்பெற்றுப்புகழ்வெவ்வேறுருவுதாங்கிப்
பகுபெருவாயபூதம்பலபரிசனமாக்கொண்டு
நகுதலையிறகுநங்கைநகைமதிகபாலமங்கி.................(௧௧௧)

பன்னகமென்புகோடுபரசதளோடுதாங்கிப்
பொன்னுருச்சாம்பல்பூசிப்பொருவிடையூர்ந்துழலுஞ்சுனா
டின்னருங்கனலினுடுமுழைமழுக்கரக்கங்காளி
யென்னினுமழகனேயோவென்னவற்காசைகொண்டாய்(௧௧௨)

என்றுவேற்றுருவாய்வந்தவிறையவரிழித்துக்கூறுந்
துன்றியபொருள்கட்கெல்லாந்துகளில்காரணங்கள்காட்ட
நன்றுறவலித்தாளென்பநருகதிர்முத்தமூரல்
மன்றலங்கூந்தல்வேய்த்தோள்வளரிளங்கொங்கைமாது.(௧௧௩)

வேறு.

நரைத்தவெண்டலைவேதியநல்லவர்போல
விரைத்தவெண்பொடிசாதனமணிந்தனைவிமலர்க்
குரைத்திமாசுரையப்பொருளுற்றகாரணங்க
டெரித்துங்கேளெனச்செப்புவாள்சினமொழிவாயாள்...(௧௧௪)

கருமமாற்றுநர்க்கதன்பயன்கலந்துநின்றளிக்கும்
பொருவில்காரணன்போற்றுறுங்கருமமேபயனை
யருளுமாலெனுமுனிவரையாளுதற்பொருட்டு
மருவுதாருகவனத்திடைப்பயிக்கம்புக்கனனல்...........(௧௧௫)

பகர்ந்ததன்றியேவயிரவன்கூற்றினும்பயிக்கம்
புகுந்துளானதுதன்னையும்பூசுரகேண்மோ
முகுந்தனுன்முகனிருவருமுன்னொருநாளிற்
றிகழ்ந்தமேருவினொருமருங்கிருந்தனர்சிறப்ப...........(௧௧௬)

ஆயகாலேயினமராருமுனிவருமடுத்து
மாயைகாரணமாகியவையகந்தனக்குத்
தூயனாகியதனிமுதலியார்சொல்லுவீரென்
றேயுமாறெலாமிறைஞ்சினர்தொழுதெதிர்நின்றார்.......(௧௧௭)

செருக்குமீக்கொளுந்திசைமுகன்பிரமம்யானென்றான்
றருக்கிமாயவன்யானலாலிலேயெனத்தடுத்தா
னொருக்குறுமனத்தினனணங்கலாய்த்துழியுலக
முருக்குநாயகன்முன்னெழுந்தருளினனன்றே..........(௧௧௮)

இரியல்போயினனாரணனிருந்தயனிகழ்ந்தான்
றிரியுமூவெயில்சிந்தியசேவகன்வெகுண்டா
னுரியகாரியங்குதித்திகழ்வுரைத்திடுமைந்தாம்
பெரியநீண்முடிநகத்தினாற்கொய்துகைபிடித்தான்.......(௧௧௯)

முனிவர்வானவர்தருக்கெலாமுடித்தருள்கொடுப்ப
நனியுலாயுதிரப்பலிநனந்தலைக்கபாலத்
தினிதுவாங்கினனிவைபலிக்குழந்தவாகபாலம்
பனவவேற்றதும்பகர்ந்திடப்பட்டதாலீங்கே........... (௧உ0)

உருவெனப்படும்பாவநீள்கடலினின்றுயிரைத்
திரமெனப்படுமருட்கரைசேர்த்தலின்மறையோய்
பரனெனப்படுவாற்குருத்திரப்பெயர்பயிலு
மரனெனப்படுமவன்வடிவத்தரும்பெறுவார்...........(௧உ௧)

மருத்துநண்பினனமுதனன்மற்றவற்கதனு
லுருத்திரப்பெயருற்றதவ்வொலியமுற்கல்லாற்
றிருத்துமப்பெயர்பிறருழைச்செல்வதொன்றன்று
கருத்தழிந்தவனமுததுங்கட்டுரைத்திடுவாம்............(௧உஉ)

தேவர்தெவ்வவுணரைத்தெறச்செல்லுழியொருநாட்
பாவகன்புடைப்பொருளெலாம்பதித்துப்பின்மீண்டு
மேவிநல்கெனவிசைந்திலான்வெய்தவரலேப்ப
வாவமற்றவனமுதனனருமறைக்கிழவோய்............(௧உ௩)

வேறுவேறுருவெடுத்தனனென்றிவிப்பிரகேள்
கூறுமாருயிர்க்கறிவினைக்கொளுத்துவானவற்றி
னேறுபாகபேதங்களுக்கியைய்வெவ்வேறு
நீறுபூசியதிருமலன்றிருவுருவெடுத்தான்.................(௧உ௪)

விளங்குதாருகவனத்திடைப்பலிக்கெனமேவித்
துளங்குநூலிடைமாதரார்தொன்னிறையழிப்பக்
களங்குலாவியகண்டரைக்காதுதுமெனத்தீ
துளங்குலாவியமுனிவரரொலிதழல்வளர்த்து ..........(கஉ௫)

வேங்கைமான்மழுவியாளம்வெண்டலைதுடிசெந்தீ
தாங்குநீள்வலிமுயலகன்றமைவிடுமங்கா
ளோங்குபாரிடத்திரளையுமுகைத்தனரவற்றை
நீங்குறுதபல்பரிசனமாக்கினனிமலன்...................(கஉ௬)

உடுத்தசோறலைமான்மழுவுரகந்தீயிவையு
மெடுத்துவேதியகூறிடப்பட்டனவீங்கு
நடித்துமான்முதலோர்க்கருணனிவழங்கிறைவன்
முடித்துளானிறகென்றனையதுமொழிந்திடக்கேள்..... (கஉ௭)

அண்டயாவையுமகட்டிடத்தொடங்கியவாற்றல்
மண்டுமோர்பகாசுரனுயிர்மாட்டிவாரிறகு
கொண்டுவேணியிற்செருகினன்குறையறுவலியோர்
கண்டுதீயனகருதுறுநடங்குதற்பொருட்டே........... (கஉ௮)

எருக்குவேய்ந்தவனிரும்புனலேற்றதுகேளா
யொருக்குமாமனப்பகிரதற்குதவியஞான்று
தருகஙிஞனிலமழிதரச்சார்வதுநோக்கி
மருக்கொள்வேணியினொருமயிர்நுதியிடைமடுத்தான்...(கஉ௯)

தாரைமாதர்மூவொன்பதின்மரையுந்தந்திவர்பால்
வாரநீவலையென்றமைமறுத்துரோகிணிபாற்
சாரநோக்கியதக்கனுரிடும்பெருஞ்சாபந்
தீரவேத்தலிற்றிங்களைமுடித்தனன்செம்மல்..............(கஙo)

ஊழிவந்துழியும்பரைநுதற்கணினெரித்துப்
பாழியென்புவெண்டலைபொடிபராபரன்றனது
வாழிநித்தியத்தியல்புமற்றவரநித்தியமுங்
கேழில்வையகந்தெரிந்துய்யக்கிளர்ந்துருவணிந்தான்...(கஙக)

அரியைவேதனையொருமுறையழற்றியென்பாதி
யுரியமேனியினணிந்திடுமொருமுறைகரத்தின்
மரியசூலத்திறொருமுறைமடுத்துழியவர்தங்
கரியவார்சிகைமருமத்துக்காமர்நூலாக்கும் ..............(கஙஉ)

மாயனுதியர்தமையெரிவாயிடைமடுத்த
தூயதீவனத்தானந்தமீக்கொளத்தொண்டின்
மேயசாரதர்சூழ்தரவிளிந்தவர்க்குறுதி
யேயுமாறினிதாடினனிறையிலாவிறையோன்............(கரு௩)

என்புவெண்டலைமாலைநீறணிந்ததுமிருவர்
வன்புமல்குடலணிந்தகங்காளியாமரபுந்
துன்பமிக்குயிர்நதொகைக்கறச்சுடலையாடியது
மன்பிலந்தணவறிந்தனையேமற்றுமறிமோ...............(கரு௪)

இரணியாக்கனையிறுத்திடுமாயனும்வராக
முரணினீறுலகலைத்தலின்மோலிவானவர்க
ளரணநீயெனவடர்த்தொருகோட்டினைவாங்கிச்
சரணமேத்துறவிடுத்துரதணிந்தனன்றலைவன்........(கரு௫)

வேதனார்வரம்பெறுகயாசுரன்வியனுலக
மோதிவாரணுசியுந்தபமுன்னியங்கெதிர்ந்த
நாதனார்தமைவிழுங்கினனுதர்கீண்டதனைச்
சோதிமேனியிறபோர்வையாக்கினர்சுரர்போற்ற.......(கரு௬)

மண்டுபோரிரணியனுயிர்குடித்தமான்மடங்க
லண்டர்யாரையுமலைத்தலினதனுயிர்குடித்துத்
துண்டமாகியசிரஞ்சிரத்தணிந்துரிசுடுநஞ்
சுண்டநாயகனுக்கினனுத்தராசங்கம்......................(கரு௭)

காரிகூற்றினுங்கண்ணுதலுலகெலாமளந்த
வேரிதூங்குபைந்துளவனூர்வெரிநெலும்பெடுத்துச்
சோரிதூங்குகைத்தண்டமாச்சுடர்தரவணிந்து
வாரிநீளுரியாக்கினன்மணியுருக்கவயம்..................(கரு௮)

கடலின்வானமிழ்தெடுத்தநாட்கச்சபவுருவா
யுடலுமாயனையுலகெலாம்வியப்புறவொறுத்துப்
படலையோட்டினைப்பராபரன்பைத்தவாளரவத்
தொடலைமார்பிடையணிந்தனன்சுடர்ந்தபூணுக.........(கரு௯)

உலகம்யாவையுமொடுங்குழியிறப்பினுக்கஞ்சி
யலகிலாவறக்கடவுளானேறெனவடுப்பச்
சுலவுசோமுகாசுரனுயிர்தொலைத்தமீன்றருக்க
விலகுவாள்விழிகுன்றவனேறியூர்ந்தனனல்................(க௪0)

அடங்கலார்புரமழித்தனூன்றூழித்தேர்மூரிய
மடங்குறவிறன்மாயனுமேமெறனவணங்கத்
தொடங்குபூசையினொருமலர்சோர்தரவிழிகொண்
டிடங்கொணேமிமுன்னளித்தவனிவர்ந்தனன்மறையோய்....()

தரங்கவார்கடலமிழ்துணச்சார்ந்துமுன்கடைந்த
வரங்கொடேவர்கள்விடமெழவல்விரைந்தோடி
யிரங்குநாதவென்றிரத்தலுமினிதுகண்ணோடிப்
புரங்கொல்சேவகன்பொருக்கெனவதனைவாய்மடுத்தான்......()

வேறு.

நின்றுபல்லுயிர்க்குமின்பநிகழ்த்துதற்கிறைவன்கொண்ட
துன்றுபல்பொருள்கடம்மாற்சுந்தரனலனோவென்ன
நன்றுமையுரைத்தலோடுநரைதிரைமூப்புமாறி
வென்றிவெள்விடையினின்றார்விரிபொருளனைத்துநின்றார்....(கசந)

அச்சமும்வியப்புந்தோன்றவசலமீன்றெடுத்தநங்கை
நச்சியவுளத்தினோடுநாண்மலர்ப்பாதம்போற்றிக்
கச்சிளமுலையிற்கண்கள்கதுவுறச்சென்னிகோட்டிப்
பச்சிளங்கொடியினெல்கிப்பண்பொடுமெதிரேநின்றாள்......(கசச)

வானவர்மலர்பூமாரிபொழிந்தனர்வணங்கிநின்ற
தேனலர்கோதையாளைச்சேவுகைத்தருகுசென்று
கானமர்கூந்தனல்லாய்கலங்கலையென்றுகையா
லேனவெண்கொம்புபூண்டாரெழீஇயுடறைவந்திட்டார்......(கசரு)

முருகுயிர்கமலம்வென்றமுழுமதிமுகத்தினுடை
னொருகரங்கரத்தாற்பற்றியுவளகமருங்குபோதக்
திருவியங்கவளைவையமிணையடியிறைஞ்சநின்றார்
பொருவறுபோதிநீழற்பூரணப்பொருளாயுள்ளார்............(கசசு)

வரையினுக்கரையனீன்றமாதுமைதவங்களாற்றி
விரையநாயகனைப்பெற்றவிழுத்தகுகாதைசொற்றும்
புரையிலீரனையாண்மன்றல்புகலுதுங்கேண்மினென்னத்
தரைவளம்பெருகச்சூதமாதவன்சாற்றலுற்றான்..............(கசஎ)

கௌரிதவம்புரிபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - கஎசந.

# கௌரி திருமணப்படலம்.

சுணங்குபூத்ததுணைமுலைப்பார்ப்பதி
யணங்குக்கார்வமளித்தருள்வள்ளலார்
கணங்கொண்டாருங்களிப்பொடுங்காணிய
மணஞ்செய்காதல்வைத்தார்திருவுள்ளமே......(௧)

ஆரணங்களளந்தறியாதவ
ரேரணிந்தவிசைமணியாழொடூஉ
நாரதப்பெயர்மாதவனன்னுமா
சீரணிந்ததிருவுளஞ்செய்தனர்........ ............(௨)

கட்டுவார்சடையுங்கமழ்பூதியு
மிட்டவக்கவடமுமிலங்குறச்
சட்டநாரதமாமுனிசார்ந்தெதிர்
முட்டிலாவழிபாடுமுடித்தனன்............. ......(௩)

நகுமுகத்தினராயருணாதனார்
மகதிவீணையினாய்மணநந்தமக்
ககிலலோகத்தினாருமிங்கண்முறப்
பகர்திபோதியெனப்பணிந்தாரரோ............ (௪)

தொழுத்தையேனுய்ந்தனேனெனத்தொன்முனி
வழுத்தியேகினனமற்றெம்வதுவைக்கு
முழுத்தநாமேமுழுக்கவின்செய்துமென்
றழுத்தினார்திருவுள்ளத்தினண்ணலார்............(௫)

புதுவதாகநகர்கவின்பூப்பவும
வதுவைமண்டபமாதிவயங்கவும்
விதுவணிந்தவர்வீழ்ந்தனர்வீழ்தலு
மெதிரிலாதவையெண்ணியாவுமெய்தின..........(௬)

வேறு.

உருத்திரர்பலருமுவகையின்வதியவுயர்சிவலோகமுஞ்சமழ்ப்பத்
திருத்தகவிளங்கிற்றொருபுறமொருபாற்றிருமறுமார்பனுமயனுங்
கருத்தமர்ந்திருப்பவைகுந்தவுலகுங்காமருசத்தியவுலகும்
வருத்துவதிதுவென்றுள்ளுடைந்தழியவயங்கியதாதிமாநகரம்.. .........(௭)

இந்திரனங்கியமனேநிருதியீர்ம்புனற்கடவுள்காற்றிறைவ
னந்தியநிதிக்கோனலங்கொளீசானனென்றிவர்நண்ணினர்வதியச்
சுந்தரவிருக்கைகிழக்கினைத்தொடங்கிச்சொல்லியவடகிழக்கீறு
வந்தரத்தவர்களிருக்கைகளணவமைந்ததாலாதிமாநகரம்.............(௮)

ஏனையவுலகின் விண்ணவராதியெனைவருமிருந்தனர்மகிழ
வேனையவுலகமனைத்துமுட்கோட்டத்தினையவெவ்வேறிருக்கைகளாப்
பானவொண்குவளைபங்கயமாம்பல்பலமலர்பொய்கையுட்டழுவித்
தேனகுமலர்ப்பூஞ்சோலையும்பிறவுஞ்செறிந்ததாலாதிமாநகரம்........(௯)

நனையவிழ்தருவோரைந்துமற்றிரண்டுநிதிகளுநளிர்ச்சிந்தாமணியும்
புனைபுகழ்க்காமதேனுவும்வரங்கள்புக்குநின்றேற்பவேருக
வனைவரும்வியப்பவைந்தருவாதியொரோவொருபொருளளவிலவாய்
மனைதொறும்வதிந்துவேட்டவேட்டாங்குவழங்குவதாதிமாநகரம்......(௧0)

அன்றெழுகங்கையனைத்துமீப்போர்ப்பவகல்கெனவிலக்குவபோன்று
நின்றெழுகொடிகளுடங்கினநுடங்குநெடுங்கொடிக்காற்றிலதாகி
யொன்றுமங்கங்கைவீற்றுவீற்ருகியொருமணவிழைவினின்ருங்குத்
துன்றியதரளக்கோவைகடூக்குந்தோரணநிரைதுவன்றினவால்.........(௧௧)

புழுதிமிக்கவியவிரைப்பனிநீரும்புழுகுஞ்செங்குங்குமச்சேறும்
விழுதுசெய்கலவைச்சாந்துமோராங்குவெற்றிடமறவெங்குமெத்திப்
பழுதறுசெம்பொற்சுண்ணமுமலரிற்பம்பியநறும்பசுந்தாது
முழுதுமுள்ளீரந்துவரமேலட்டிமூதெழில்வாய்ந்தனவீதி...............(௧௨)

கழிவளம்படைத்தவெமக்குமேலாகக்கடந்தபொன்னுலகுவாழ்ந்திருக்கை
யழகியதாமென்றெழுந்துவிண்முழுதுமடாதமைந்திருப்பவீதிகளின்
விழிகளைமறைத்துநின்றனபோலவிரைநடைக்காவணமோங்கி
யொழுகினநிரைநீர்க்கும்பமும்புகையுமொளியுமற்றனைத்துமுட்டழுவி...()

தமனியப்பொடியுநறுவிரைத்தாதுஞ்சாந்தமுநிறைபுனற்றசும்பு
நிமிர்பொரிக்கலனும்பாலிகைத்திரளுநீளொளிவிளக்கமும்புகையு
முமிழ்சுவைக்கனியும்பாகடைபிறவுமோங்குகாவணத்துள்வேதிகையி
னமர்வனநெடுமால்வயிற்றடக்கியஞான்றகிலமுமடங்கினபோன்றே..(௧௪)

உலகெலாந்தன்னையன்றிவேறிலையென்றுறழ்தரக்காட்டுமாமாயை
நிலையினுட்புகுந்துபார்க்குநர்க்காங்குநெடும்பயன்கிடைக்குமாபோல
வலர்பொழிற்பரப்புட்புகுநருக்கெல்லாமளவிலாவரும்பெரும்போக
மலர்தருதடமும்புளினமேடையுஞ்செய்வரைகளும்பிறவுமல்கினவே(௧௫)

இழுக்குவபுழுகுஞ்சந்தனச்சேறுமெரிமணிச்சிவிறியின்வாங்கி
யொழுக்கியபனிநீர்விரவுகுங்குமமுமூட்டினளூகுத்தவஞ்சனமுங்
குழுக்கொடுபதங்களிடறுவமணிச்செய்கோவைகள்சிதர்ந்தவுங்கலனுஞ்
செழுக்கடிமலரின்றொங்கலுமல்லாற்சேதகமுலமுமாங்கிலையே......(௧௬)

மணிகளுந்துகிலும்வாசமென்றொடையும்வாழையுங்கமுகும்வார்கொடியு
மணிநிலைநெடுந்தேர்நிரைநிரையாகவகன்மனைவாயில்கடோறுந்
துணிகதிரெறிப்பநின்றனவிண்ணுந்தொழுமெழவாவயின்வதியும்
பிணிமலர்க்கூந்தன்மாதராரல்குற்பெற்றிகற்றிடவடுத்தனபோல்......(கஎ)

சந்தனச்செச்சையெறிவனபனிநீர்தடங்கையிற்றூவுவமேலாற்
கொந்தொளிச்சுண்ணம்வீசுவமணியின்கோவைசுற்றமுத்துசாந்தாற்றி
பந்தியினேந்தியசைப்பனகவரிபாங்குறவிரட்டுவகவிகை
யந்தில்வந்தணைவோர்தமக்குறக்கவிப்பவனைத்தும்பாவைகளிடந்தோறும்.

சூணிலெடுத்தொருவரெறிதராதியல்பிற்குளிறுவமுரசங்களெங்கும்
பிணிதரம்புளராதிசையெழீஇயின்பம்பெருக்குநல்யாழினமெங்கு
மணிகயிறசையாதவிர்மணிப்பாவையாடல்செயரங்குகளெங்குந்
துணியுமைம்பொறியும்புலனுகராதுசுவையெழக்களிப்பனவெங்கும்(கக)

குழைகளும்பூணும்பருமமுந்துகிலுங்கோதையுந்தொடிகளுமற்றை
யிழைகளுமணியவெடுத்திகுளையர்பாலெய்தியமாதரார்க்காங்குப்
பழையனவணிமெய்கரந்திடப்புதியபடரொளியணிகண்மெய்யினவாய்த்
தழையழுகெறிப்பநோக்கினர்மகிழ்ந்துதமதணியெறிவதெவ்விடனும்.(௨௦)

பயிக்கமுற்றுழல்வோர் வறுமையிற்கவல்வோர் பருவரற்பிணியினுற் றழி
வயக்கமிலுருவோர்மகவிளம்பருவமன்னினர்மூப்பினரெல்லாந் [வோர்
தயக்கமுற்றமைந்ததருணராய்வெறுக்கைதழைத்தவராய்ப்பிணியிலராய்
நயக்குமுத்தியினர்போலவோரியல்புதண்ணினரிடந்தொறுமாதோ....(௨க)

வேறு.

இன்னனவெழினகரிண்டிமாக்கவின்
முன்னவன்போலிவைமொழிங்கடங்குரு
மன்னியவதுவைசெய்மண்டபத்தெழி
றன்னமிங்கெடுத்தியாஞ்சாற்றற்பாலதே.......(௨௨)

பரவுமுக்குணமும்பான்மையினின்றுலென
மரகதமடித்தலம்வயங்கச்சேயொளி
யரதனமிடையுறவவற்றின்மேக்குவச்
சிரமொளிர்குறடுபஃறிசையும்வென்றதே......(௨௩)

பாயதண்பாற்கடற்பரப்பினின்றிடு
மாயவரெண்ணிலரென்னவச்சிரத்
தூயவண்டலமெலாநீலத்தூணங்கண்
மீயுயர்விசும்பினூடெழுந்துநின்றவே...........(௨௪)

தேவர்களொடுமெகத்தீட்டுஞ்சீர்த்தியை
யாவதென்றுரியான்கவர்ந்துசென்னிமேன்
மேவவைத்ததுபொருஉம்விளங்குதூண்டலைப்
பாவியபளிக்குப்போதிகையின்வண்ணமே.....(உரு)

கீர்த்தியைக்கவர்ந்தரிகெழுமநிற்றலு
மார்த்தபல்லமரருமமர்ப்பச்சூழ்ந்தென
வார்த்தபித்திகைதொறும்வயங்குசித்திரம்
பார்த்தகணிமைப்புருப்பண்பிற்றோன்றுமே...(உசா)

நந்தமைநாடொறுமிருக்கையாக்குவ
தெந்நிவன்சிரமிதிந்திருந்துநாமெனச்
சந்திரன்மான்முடிந்தவிர்ந்ததும்பொருஉங்
கொந்நொளிப்பளிக்குப்போதிகையின்கொள்கையே ()

புவனமுண்டவன்றலைமிதித்தபுன்மையி
னவிர்மதிச்சிரமிதித்தலரிநின்றெனந்
தவளவொண்போதிகைத்தலையினொன்றுறப்
பவளவானுந்திரம்பபின்றபல்லவும்..........(உஅ)

செக்கர்வானிறங்கெடத்திகழுங்கேதுவிவ்
லுக்கசீதளமதியுண்ணவோருழித்
தொக்குவாய்வைத்தவத்தோற்றமும்பொரூஉந்
தக்கசெமமணியினுத்திரத்தயக்கமே..........(உக)

வெய்யவனிளங்கதிர்வெயிற்பிழம்புலா
யையெனவிசும்பெலாமலங்கிற்றுமென
மையறவொளிர்வயிரேரியத்திறும்
மையவிர்பலகைமீப்பரவிநின்றவே.............(௩௦)

உள்ளொழின்மேக்கிருந்துடல்வளைத்துறீஇந்
தள்ளருமதுகையிற்காணுந்தன்மையிற்
கொள்ளவெண்கொடுங்கைகோமேதகத்தின்மே
னள்ளினபுட்பராகத்தினுசியே..................(௩க)

வாளுமிழ்மண்டபக்குறட்டின்மாடெலாங்
கோளறுகொழும்பொனிற்குயின்றவார்படி
மூளுறவொன்றன்மேலொன்றுமுற்றியங்
கியாளிகணிந்திலத்தருகியைந்தவே...........(௩உ)

பச்சைமால்காஞ்சியிற்பவளவானிற
மெச்சுநற்றவத்திஞன்மேவிநின்றெனப்
பொச்சமினீனிறம்பொலிந்ததூணெலாஞ்
செச்சையின்வாருறைசேர்க்கப்பட்டன.........(௩௩)

விண்ணெழுஞ்சூரியன்வெயில்கரப்பமிக்
கொண்ணிறமுகில்பலவுராய்ப்பரந்தென
வண்ணம்வெவ்வேறுவாய்ந்தொளிர்விதானங்கள்
கண்ணொளிகவர்வதோர்காட்சிமிக்கவே.......(௩௪)

பொன்மழைநவமணிமழைதண்பூமழை
பன்னுமப்புயல்பஃறுரைகான்றென
மின்னவமணித்தொடைவிளங்குபொற்றுடை
யென்னவும்விதானக்கீழிலங்கிநான்றவே......(௩௫)

ஊற்றுபஃறுரைநின்றொளிரவீழ்ந்துமண்
டோற்றியெங்கணுமவைதுவன்றிறுலென
மாற்றரும்பலநிறம்வயங்குகம்பலம்
வேற்றிடமிலையெனவிரிந்ததெங்கணும்........(௩௬)

உமையுருக்கவின்கவர்ந்தோடமுன்னியாங்
கமையம்பார்ப்பனவெனவறிந்தங்கார்த்தெனக்
கமுகுதண்கரும்புநீள்கதலிபாங்கெலா
மிமையவர்வியப்புறயாக்கப்பட்டன............(௩௭)

பூரணியல்குலொப்பாகப்புற்றினூ
டாருவகாலெனவராவினங்களே
நேரறவீக்கியநீர்மையாமெனத்
தோரணமணிநிரைசுற்றுமார்ந்தன.............(௩௮)

பல்கனிக்கோவையும்பசும்பொற்றூர்களும்
புல்கொளிமணிகளும்பூவின்றொங்கலு
நல்கெழிலாடியும்பிறவுநான்றன
வல்கெழிற்கொடுங்கையினவனிதைவர........(௩௯)

சிவபுரவரைப்புமித்திவளுமண்டபக்
குவமைகொலோவெனவுற்றங்கின்மையிற்
றவவெழுமகிழ்விஞற்றலைதுளக்கியாங்
கவிர்மணிக்கொடிபலநிவந்தங்காடுவ........ (௪௦)

மரகதவல்லியின்வயங்குமாணுருப்
பரவொளிபெறத்தவம்பயிறல்போன்றன
வரதனவிளக்கமுமானநெய்பொழி
விரைகமழ்விளக்கமும்விராயுண்ணின்றன.....(சக)

தம்பிரானிருந்தருடவிசுநள்ளுற
வும்பரார்விழையநன்றேங்கத்திங்களிற்
பம்புதாரகையெனப்பாங்கரெங்கணு
மெம்பிரானருளினர்க்கிருக்கைவாய்ந்தவே....(சஉ)

வயங்குபொற்குண்டமுமணிச்செய்வேதியுந்
தயங்கொளிக்கரகமொண்டசும்புபாலிகை
யயங்கொளியகலுமற்றனைத்துமாவயிற்
பயங்கொளவெழுந்தனபதம்வைப்பின்றியே....()

கவரிகண்ணடிகுடைகால்செய்வட்டமு
மவிர்கலப்பேழையுமமுதம்பல்வகை
தவமலிசெப்புஞ்சாந்தமைந்ததட்டமு
மிவர்தரப்பாவைகளிடந்தொறேந்தின.........(சச)

வண்ணவொண்மணியொடுதகர்த்தமாசையஞ்
சுண்ணமுநறுவிரைத்துகளும்வண்டுணக்
கண்ணகுமலரும்வெண்கடுகுஞ்சாலியுந்
தண்ணியவறுகுமுட்டதைந்தவென்பவே.......(சரு)

மண்டபமருங்கெலாமலர்ப்பொற்காவண
மண்டரும்வியத்தகவமைந்தமற்றயற்
புண்டரிகத்தடம்பொலிந்தவாங்கயற்
கொண்டனகுளிர்பொழில்கோலமல்கவே....(சசு)

இறையவனுக்கியவெழில்கொண்மண்டப
நிறைவினையாவரேநிகழ்த்துவாரினி
யுறைபயில்வீணைகையுறுவரன்புகுந்
தறையமற்றவரவரடுத்ததோதுவாம்.............(சஎ)

## வேறு.

ஏகியநாரதமுனிவனெம்பிரான்போதிவனத்திமையமீன்ற
பாகியல்சொன்மரகதவல்லியைமணப்பத்திருவுள்ளம்பற்றினாராற் [ர்
போகுகவங்கெவருமெனப்புகன்றுபுகன்றனன் மீண்டான்புகலக்கேட்டோ
தேகமுறுபயன்படைத்தாமெனமகிழ்ச்சிதலைசிறப்பச்சேறலுற்றார்...(சஅ)

பிரமனொருசிரமரிந்தவயிரவர்பேணியதக்கன்யாகத்தையர்
வரனழித்தவயவீரனரிகரபுத்திரன்வளர்கூர்மாண்டர்கால
வெரியடுத்தவுருத்திரனுமாடகேசனுமெண்மர்மூவரென்னு
முரன்மிகுத்தவுருத்திரருமளப்பில்கணம்புடைசூழவுவந்துசென்றார்.(௪௯)

மருக்கிளர்தண்டுளவணிந்தமணிமார்பன்மலரவன்மாதிரத்தோரெண்ம
ரருக்கருருத்திரர்வசுக்கண்மருத்துவரென்றறைதருமுப்பத்துமூவ
ருருக்கிளர்விஞ்சையர்கருடர்கந்தருவருரகர்முதலும்பர்யாருந்
தருக்கறுமாறாயிரத்தெண்மருமனைவிமாருடங்குசாரச்சென்றார்........(௫௰)

பரிசனமும்வரிசைகளுமுடன்கொண்டுவரைபலவும்பாங்கர்ச்சூழ
வுரியமனைமாதெனுமேனையுந்தானும்வரையரையனுவந்துபுக்கான்
றிரைதவழேழ்கடல்கங்கையாதிமணித்தீர்த்தமெலாந்திரண்டுசேர்ந்த
வரைசெய்பலகாலங்கண்மாதிரமெண்கயம்பிறவுமருவிப்போந்த.....(௫௧)

கடகரியும்வயப்பரியுங்கதிர்மணிக்கூவிரக்கொடிஞ்சிக்காமர்தேரு
மிடல்படைத்ததானைகளும்பரிசனமும்புடைநெருங்கவேந்தர்போந்தா
ரடல்படைத்தநெடுஞ்சூலத்தடிகளைப்போந்தவர்யாருமண்மித்தாழ்ந்தார்
நடலையறுத்திடுங்கருணைநறைமிதப்பவாய்மடுத்துநலமேதக்கார்......(௫௨)

வேறு.

உருத்திரர்முன்னாகவுறுமானுடர்பின்னாகத்
தருக்கொடுசூழீஇயினர்கடம்முளுயர்வுற்றுத்
திருக்குலவினார்களிருசேவடிகள்சேப்ப
வுருக்கிளர்முடித்தலைகடட்டினருவந்தார்................(௫௩)

வண்டொடுநறைத்தமலர்மாலைகடொடுப்பார்
பண்டிகழவீசர்புகழ்பாடினர்களிப்பார்
கண்டுளிதுளிப்பவுளநெக்கருள்கலப்பார்
புண்டரநுதற்குலவுதொண்டரிவரோர்சார்...............(௫௪)

ஐவகைநறும்புகைகளாலயநிறைத்துச்
செய்வகையதொண்டுகடிருத்தகவியற்றிக்
கைவகையினஞ்சலிமுன்காட்டிமுடிகோட்டிப்
பொய்வகைகடிந்துவருபுண்ணியர்களோர்சார்.........(௫௫)

எந்தையடியார்களினிதேபுகுகவீங்கு
மைந்தரொடுமங்கையர்கண்மற்றுமுறவாமோ
நுந்திருவடித்துணையலாலெனநொடித்துச்
சிந்தைமகிழப்பணிகள்செய்குநர்களோர்சார்..........(௫௬)

ஏதலறவன்பினிருபோதுமிசைமல்க
வேதநனியோதியழல்வேட்டெளிதிலங்குப்
போதுமிமையார்க்கவிகள்பொற்பவினிதூட்டிக்
காதரமிரித்திடுகருத்தினர்களோர்சார்.................. (௫௭)

கன்னிமணிபொன்னறுவைகம்பலம்விழுப்பூ
ணன்னர்நிலமோடிரதநாகநடைவாமான்
றுன்னுசுரையான்களிவைதோயமொடுநல்கி
முன்னவனடிக்கணுளமுற்றுநர்களோர்சார்.............(௫௮)

பூவிணர்நறும்பொழில்புகுந்துவளநோக்கி
யாவணமனைத்தினுமமன்றபொருணோக்கிக்
காவணநிரந்தகடிவீதிபலநோக்கித்
தூவணவுளத்துவகைதுள்ளுநர்களோர்சார்.... ....... .(௫௯)

வாவிகளினோடைகளின்வார்நதியினொண்மை
மேவுமதலைக்குலம்விடுத்தெதிர்கடாவிப்
பூவினொடுசாந்துபொலந்தார்முதலவீசி
யாவியனையாரொடுமமர்க்குநர்களோர்சார்...............(௬0)

புறநகரடுத்துமலர்போதுபலகொய்து
பறவைகளெழுப்புமிசைபண்பொடுநுகர்ந்து
நறவினைவடித்தனநரப்பிசையெழுப்பி
யுறவினொடுமாடுமொளிர்மங்கையர்களோர்சார்........(௬௧)

மும்மையுலகத்தவருமுந்தையறியாத
செம்மையபுலன்கள்செறியைம்பொறியினார்ந்து
விம்மிதம்விளக்குமொருவேறுலகிதென்னத்
தம்மையறியாதனமகிழ்ச்சிகடழைந்தார்................(௬௨)

வேறுமுளதோவிதனின்வீட்டினையடைந்து
பேறுபெறுமின்பநலமென்றுபெரிதோர்ந்தோர்
கூறவரைவின்புதுமைகும்பிடவணைந்தோர்க்
கூறுசுவையின்பெருமையாவருரைசெய்வார்............(௬௩)

வரம்பினுறவின்றிவளரின்பமலிவெய்த
வரம்புபடுதீவினையனுக்கியனைவோரும்
பரம்பொருளைநோற்றவொருபார்ப்பதியைமாண
நிரம்பவணியக்கருதிநேர்தொழுதுநின்றார்...............(௬௪)

நின்றமையறிந்திவரினீடணியெமக்கிங்
கொன்றுவனவல்லவெனவும்பர்தொழுபெம்மான்
றன்றுணைவியோடுமெழில்சார்தரநினைந்தான்
மன்றலழகெய்தியனமன்னிருவர்மாட்டும்...... .........(சுரு)

ஆரணனுநாரணனுமாய்ந்துமறியாத
பூரணர்தம்மாதொடணிபொற்பளவினில்லாச்
சீரணிவதேனுமவர்சேவடிகள்போற்றித்
தாரணியினேன்றவைகைசாற்றுதல்செய்வாமால்.........(சுசு)

வேறு.

மரகதவல்லிதன்னைவதுவைசெய்கோலநோக்கிப்
பரவுளப்பொருமைபொங்கப்பாய்புனற்கங்கைமாது
விரசினருளையமண்மேன்மேவலுஞ்செய்புமென்னுப்
புரவுறமறைந்தாலென்னப்பொலிந்ததுமகுடஞ்சென்னி.....(சுஎ)

வெண்மதியணிந்துகாத்தவித்தகன்கருணைநோக்கி
மண்மதித்திறைஞ்சவேனக்கோள்களும்வழிபாடாற்றி
யொண்மையினுருவம்வெவ்வேறுற்றிவர்ந்துடங்குவைகும்
வண்மையேநிகர்கருமொன்பான்மணிகளுமிமைக்குமோலி.(சுஅ)

வழங்குபல்கோளுநாளுமாய்தொறுமுலகினுய்ப்ப
வொழுங்கியகோளுநாளுமொரோவொன்றற்கனந்தமாகச்
செழுங்கதிரெறிப்பச்சேமஞ்செறித்துவைத்ததும்போன்றன்றே
தழுங்கிசைமௌலிமாட்டுத்தயங்குபன்மணியினீட்டம்........(சுகூ)

சேணுறக்கதிர்கால்வீசுஞ்செம்பொனின்மோலிசென்னி
மாணுறக்கவிப்பதோர்ந்துவதுவைநற்கோலங்காண்பான்
வேணியின்மிளிர்ந்ததிங்கள்வெய்தெனப்பெயர்ந்ததென்ன
நீணுதல்செய்தநெற்றியொளிர்ந்ததுநீற்றுக்கோலம் ..........(எ0)

பாற்கடற்பரப்பிற்செங்கேழ்ப்பரிதிவந்தெழுந்ததென்ன
நூற்கடற்புலவர்போற்றுநுண்பொடிதிமிர்ந்தநெற்றி
யேற்குமொள்ளொளியினேக்கமிடைமறைத்திட்டதேபோன்
மேற்கிளர்கிரணப்பட்டம்விளங்கியதிருள்கால்சீத்து..........(எக)

மாரனைப்பொடித்ததீங்குமறைவதேகருமமென்ன
வாரமுன்மறைக்கப்பட்டவழல்விழியடங்காதாங்கு
நேருறப்பாங்கர்த்தோன்றிநிறைகுளிருமிழ்வதொக்குஞ்
சீரியபட்டப்பாங்கர்த்திருத்தியதிலகமாட்கி.....................(எஉ)

முரிதிரைக்கங்கைமாதுமுடிகொடுமறைப்பப்பொங்கி
யுரிமையிநெழியேன்யானென்ரெண்களம்வளைத்தாலொப்பத்
தரளவண்டெரியல்பம்புந்தடம்புயங்குழைகடோய்ந்த
வுரவுமக்கங்கைவெள்ளத்துழக்குமொண்மகரம்போன்றே...(எங)

தொள்ளையோர்குணமேயென்னவடக்கியுந்தோற்றநிற்குந்
தள்ளருமதுகைசான்றதழல்விடந்தம்பிரானர்க்
குள்ளுறப்படராவண்ணமுறுதடையியக்கிற்றேபோல்
வள்ளொளிகளுற்றுங்கட்டுவடங்களஞ்சூழ்ந்ததன்றே.........(எச)

மனையவளென்னுஞ்செங்கண்மால்கிடந்துறங்கும்பள்ளி
யினைபசிமாணிக்கிதலாதியினெழுந்தகீர்த்தி
யனையெனவீன்றதிண்டோளகடுறத்தழுவியாங்குப்
புனைநலம்வேறின்றுகப்பொலிந்தனமணிக்கேயூரம் .........(எரு)

சிலைசிலையாகக்கோலித்தெவ்வரைமுருக்குந்தேசு
நிலைபெறவீன்றதாயைநீக்கறக்காட்டல்போன்று
மலிகதிர்ப்பதுமராகவலயமுன்கைக்கணின்ற
வலரிசெங்கமலஞ்சேர்ந்தவமைதியுநிகர்த்தமாதோ...........(எசு)

பெருவிலைச்சிறியவாழிபெருகொளிவிரல்கண்மாட்டு
மருவினமுன்புமாய்ந்தமாயவராழியென்கோ
பொருவிலன்புனுற்றிமேலேபுரப்பதற்கடுப்போர்வேண்ட
வருளியவைத்தவென்கோயாதெனவறைவதம்மா.............(எஎ)

களத்திடையுருத்துநின்றகாளகூடத்தின்வேக
முளத்திடைத்தழற்றுவண்ணமுறுகுளிருறுத்ததேய்ப்ப
வளச்செழுஞ்சாந்துகொட்டிமான்மதம்பனிநீர்வாக்கித்
திளைத்தெழுமணப்பூந்தாதுசெறித்துரம்விளங்கிற்றன்றே...(எஅ)

காதலின்மருமமூட்டுங்கமழ்நறுங்கலவைச்சேறு
சீதளம்வறலாவண்ணஞ்செறியமேற்பொதிவித்தாங்குப்
போதுசெய்தொடையல்பூண்கள்பொழிகதிர்மணியின்கோதை
மாதர்கண்மணியின்கோவைமாசையந்தாரும்வார்ந்த.......(எகூ)

பிரணவப்பொருள்யான்சேர்ந்தபிஞ்ஞகனெவருமல்லர்
கரியெனதகத்துள்ளீடும்பிரணவங்காண்மினென்ன
விரிபொழிலனைத்துந்தேறமெய்ம்மையின்விளக்குந்தெய்வத்
தெரியலங்கொன்றைசாலத்திகழ்ந்ததவ்வணியின்மேலால்...(அ0)

ஊர்தொறுமிரப்பவுள்ளேயுருத்தெழுபசிவெந்தீயும்
வார்தருகுழன்மென்சாயன்மரகதவல்லிமன்ற
லார்தருவிழைவிற்காணவையெனவெளிக்கொண்டாங்குச்
சிர்தருபதுமராகவுதரபந்தனஞ்சிர்த்தன்றே ....................(அக)

எட்டுத்தோல்பிணித்தவாடையெரிவிழிபுழுவைதந்த
கட்டுத்தோலாடைமற்றுங்காணிகைக்கொண்டவல்குற்
பட்டுச்சூழ்ந்தரவேயென்னப்பன்மணிபிமைக்கும்பொன்னா
ணிட்டுச்சூழ்கதிர்ப்பொன்னுடையிறுக்கப்பட்டிலங்கிற்றாலோ...()

வலப்புறக்கணைக்காண்மீதுவரிகழல்வில்லுங்கால
நலத்தகுவிழிமேல்கொண்டுநாரணன்றனக்குத்தோற்றுப்
புலத்தகுசெய்யபாதம்பொன்னரிச்சிலம்புதாங்கிக்
குலத்தகுமடியார்கண்கள்குழுமுவண்டெரியல்சூழ்ந்த........(அங)

பிப்பிலவனத்தூர்வைகுமபிஞ்ஞகன்வநவைக்கோலஞ்
செப்பினன்சிறிதுசெம்பொற்சிலம்புபிர்தெய்வக்கற்பின்
மைப்படிகரியவாட்கண்மரகதவல்லிகொண்ட
வொப்பனைசிறிதுசொல்வேனுனற்றமுன்வினையைவெல்வேன்..()

வேறு.

கருமுகில்விளர்ப்பவென்றுமோரியல்பாய்க்காசறையாவியுமளைந்து
மருமலர்க்குவளைத்துவிதழ்மடுத்துவலம்புரிதெய்வவுத்தியும்வைத்
துருகெழுபகுவாய்மகரம்வாணுதலிற்றாழ்தரவுறுத்துறமுடித்த
பெருகெழின்முச்சிமணிவடநான்றுபிணையல்செய்முல்லைசூழ்ந்ததுவே...()

கற்பினுக்குரியமுல்லையந்தெரியல்கமழ்தரக்காட்டுதலானுஞ்
சிற்பமிக்குடையவலம்புரியோடொருவுருத்திகழ்ந்திடலானும்
பொற்புமிக்குடையபூங்குழனெடுமால்புல்லியபுறவமேபோலும்
விற்பயில்பகுவாய்மகரமவ்வுருவாம்விண்டுவேபோலுமால்விளங்கி....(அசு)

மதுகரமெறிந்துதாதளைந்துழக்கிமதுநுகர்ந்தின்னிசைமுரலும்
புதுமலர்த்தளவத்தொங்கல்சூழ்ந்திருண்டபூங்குழன்முச்சியின்றோற்றம்
பதுமம்வென்றலர்ந்ததிருமுகத்திங்கள்பரந்ததன்கற்றைவெண்கதிராற்
கதுமெனப்பிடித்துக்கழுமயாத்திருக்குங்காரிருட்பிழம்புபோன்றதுவே ...()

ஒழுகொளிக்கிரணவெண்ணிறப்பாசமோச்சியேதன்னெதிர்கரவா
தெழுமிகற்கருமென்கூந்தல்வல்லிருளையிறுகுறப்பிணித்தலினெழுந்த
முழுதுலகிறைஞ்சித்தொழும்பிரதாபமொய்யொளியிரவியைவதன
விழுமியதிங்களணிந்ததுபோலவிளக்கம்வாய்ந்ததுநுதற்றிலகம் .....(அஅ)

அடுக்கிதழ்க்கமலஞ்சூதமேயசோகமயி னுதிமுல்லைதண்ணீல [ங்கி
மெடுக்குமைங்கணையுங்கழைநெடுந்தனிவி லெரிமணித்தொடிக்கையின்வா
விடுக்குமத்தொழிற்கங்கியைதரமகரமிளிர் கொடியுயர்த்ததுபோல [ல்.
வொடுக்கிவல்விருளை வெயிலுமிழ்மகரவொண்குழையொளிர்ந்தனசெவியி

புருவம்வார்சிலையென்றெண்ணினர்தமக்குப்பொருகணையெனமிகக்கூர்த்
மருள்பொழிவதனமலர்ந்தவம்புயமென்றகத்துறநினைந்தவர்தமக்குக் ' [து
கருநிறச்சுரும்பரெனநனிகளித்துங்கலைமதிமுகமென நினைவோர்க்
குருவளர்சகோரமெனத்தவநீண்டுமொளிர்விழிதிகழ்ந்ததஞ்சனமே...(கூ0)

வெண்ணிறம்படைத்தபுள்ளைமயெண்மலரைவீழ்த்துநன்மணமுயிராத
வெண்மையின்குமிழையிழித்துவண்டணுகாவிழிவுடைச்சண்பகங்கழிந்த
வொண்ணிறங்கமழுமுயிர்ப்பிருவிழிவண்டொடும்பயிலுசிசேர்தரளந் [வே.
திண்ணிய முறுவன்மணியடியிறைஞ்சச்செவ்வி பார்த்திருத்தல்போன்றது

சங்கமென்றுரைப்போர்க்கதற்றகுசான்றுதரளமாலிகைபுடைவளைத்தும்
பைங்கமுகென்போர்க்கதற்றகுசான்றுபரிமளப்புதுநறுங்கலவை [த்து
பொங்கிளங்கொங்கைத்துணைச்செழும்பாக்குப்பொருவிறனடித்தலந்தெரி
மொங்கியமிடற்றின்மணிவடம்பொன்ஞாணுறுவிரைபலததைந்தனவே..()

கரும்பெனத்திரண்டுநுதல்விழிப்பெருமான்கருத்திலுங்காமமிக்கூறக்
கரும்பனைவிளைக்கும்பெருந்திறனோக்கிக்கலைமதிக்கவிகையங்கடவுட்
கரும்படுத்திறைஞ்சவிருஞ்சமர்பயிற்றக்காதலிற்றழுவியதேய்ப்பக்
கரும்பினிதெழுதுந்தோளினங்கதமுங்கதிர்மணிவடங்களும்பொலிந்த.(கூ௩)

அரிபரந்தகன்றவிழ்மலர்நீலமவிரொளிமுறுவலந்தளவம்
பெரியதண்வடிவின்முலைச்செழுங்கமலமாதிகள்பிறைமுடிச்சடிலத்
துரியவற்கேவநிறுத்தவார்கழைவிலொத்தகைத்துணையினத்தனுவின்
வரிகுணமொருகாற்சூழ்ந்துவைத்தனையவளைதொடரணைத்துஞ்சீர்த்தனவே

பொன்னரிமாலைநவமணித்தொடலைபொழிமதுநறுமலர்த்தெரியன்
மின்னுவிட்டெறிக்குமிலைமுகப்பைம்பூண்வீற்றுவீற்றெழுகினவவைதா
நன்னறுங்களபநகிற்றுணைச்செப்பினலத்தகவெடுத்துமேல்விரித்தா
லென்னமிக்கழகுவிரிந்தொளியசும்பியெம்பிரான்மனமும்வாங்கினவே..()

கடிதடக்கடலின்வாங்குசைவலந்தண்கயறுகிர்தரளமும்பிறவும் [கைத்
தொடலைமென்குழல்கண்ணிதழ்நகைபிறவுந்தோற்றவண்ணுந்தெழுகொங்
தடவரைமருங்குவாங்கியமடங்கறனைப்பொருமிடுகிடையிறுகப்
படரொளிகளுற்றும்பல்வகைக்காசின்சில்வடம்பான்மையிற்சூழ்ந்த..(கூகூ)

மருவுபன்மணிக்கும்பிறப்பிடமாந்தன்வண்மையைப்பருமத்தின்விளக்கும்
பெருமெகழிலல்குல்வாரிதியெழுந்தபேதுசெய்நஞ்சமேவிழியா
வெருவரவஃதூர்நெறிமயிரொழுக்காவீங்குமத்தொழுகியதோளா
வுருவளர்கூர்மமெனப்படும்புறந்தாளொளிர்ந்தனநூபுரம்பிறவும்....(௯௭)

வேறு.

திருமகடனக்குநற்றிருவளித்திடு
மொருமகள்வனப்பினையுரைக்கலாகுமே
யிருமுதுகுரவர்தம்மெழிலுநோக்குபு
மருவினவுலகெலாமல்குமின்பமே..............(௯௮)

ஈங்கிவராகினுக்கிவர்களேக்குறுந்
தாங்கியவாடியிற்சாயையனறியே
யாங்கணுமுவமைவேறில்லையென்றுவிண்
ணோங்கியவமரர்களுவந்துதாழ்ந்தனர்..........(௯௯)

எழுந்தனமதுரமங்கலங்களெங்கணு
மெழுந்தனதுவசங்களியம்பிற்றினணியங்
கொழுந்தெழுகதிர்மணிக்குடைகவித்தன
செழுந்திருக்கவரிகடிரண்டுதுள்ளின..........(௧௦௦)

அவிர்மணியழுத்தியவாலவட்டமுந்
தவவளியெழுப்புசாந்தாற்றியிட்டமுங்
கவர்நிழற்றெங்கலுங்கதிர்த்தநித்திலத்
திவர்புதுப்பந்தருமெழுந்தியங்கின............(௧௦௧)

அரம்பையர்நிரைநிரையடுத்தங்காடினர்
வரம்பெறுகின்னரர்மகிழ்ந்துபாடினர்
நரம்பிசையெழுப்பினர்நாரதாதியர்
பரம்பினபனிவிசும்பமரர்பூமழை............ ..(௧௦௨)

மாயவன்பாதுகைவணங்கியிட்டனன்
றூயவன்றிருவடிதொட்டக்கிப்பாங்கரின்
வேயனதோளிணைமேவமென்மலர்ப்
பாயினவாடைமேற்படர்தன்மேயினன்........(௧௦௩)

விற்பொருநுதலியர்மேனைதன்னெடுங்
கற்புயருமைபுடைகளித்துச்சென்றன
ரற்பொடிமவரையரையனுதியோர்
தற்பரனுழையராத்ததைந்துசென்றனர்.......(௧௦௪)

தூயதன்னருள்கொடுதொல்லைநான்முகன்
பாயபல்பாவிகைபிறவுமுன்னரே
யாயுநன்முறைபுளியமைத்தமண்டபந்
தாயினுமினியவன்சாரச்சென்றனன்.........(௧௦௫)

அரத்தகவடியினரட்டமங்கலங்
கரத்தினிதேந்தினர்கண்டுவாழ்த்தினர்
புரத்தெரியூட்டியபுனிதனேக்குபு
வரத்தினையளித்துமண்டபத்துளெய்தினன்..(௧௦௬)

பானலங்கருவிழிப்பாவைதன்னெடும்
வானமராதனம்வயங்கவைகுபு
தேனகுதொங்கலந்தேவர்யாவரு
மானமர்தவிசுறவருளிச்செய்தனன்...........(௧௦௭)

மங்கலத்துழனியுமதுரகீதமும்
பங்கயவதனியர்பணிசெயூக்கமுந்
தங்கியவமரர்கடதைபுமண்டபத்
தெங்கணுமாயினவின்பமல்கவே...............(௧௦௮)

வேறு.

அடுக்கலுக்கிறைவனண்மியவிரிமைசுமக்கலாற்று
நடுக்குமெல்லிடையின்மேனைவணங்கினணறும்பால்வாக்க
மடிக்குமெய்யன்பிற்செம்மன்மலரடிவிளக்கிநீர்பெய்
திடுக்கணெவ்வுலகுநீங்கவீத்தனன்புதல்விதன்னை...........(௧௦௯)

விண்ணவர்மலர்கள்சிந்தவிடையவனங்கையேற்றுந்
தண்ணியமலர்மேலண்ணறமுன்முறைவளர்ப்பத்தாலி
புண்ணியமலர்ந்தாலன்னபூங்கொடிமிடற்றிற்சேர்த்து
மண்ணவருய்யச்செய்யுமரபெலாமியற்றினனே.............(௧௧௦)

இளமதிமுடித்தவேணியெம்பிரான்றேமுனை
வளகையர்பெருமானேடுமடுக்கலுக்கிறைவனேகை
யுளனுறச்சாந்தமாலைபாகடைபிறவுமுற்ற
வளமையோடியையயார்க்கும்வழங்கினன்றழங்கமன்றம்....(௧௧௧)

அளித்திடும்பரிசிலானுமணிந்தமெய்க்கோலத்தானுங்
களித்ததம்மனையின்மாதர்கண்ணுற்றுநிற்றலானுந்
தெளித்தெழுமன்றல்காணத்திரண்டவர்தாமுமந்நாட்
டளித்தெழுமின்பமன்றல்சார்ந்தவரொத்துளாரால்.........(௧௧௨)

கடியயர்வரைப்பினின்றுங்கண்ணுதல்வெளிக்கொண்டும்பர்
முடியொடுமுடிகடாக்கமூரிமால்விடையினேறிப்
பிடிநடையுமைதன்னோடும்பேரெழினகர்சூழ்போந்து
கொடிபலநுடங்குஞ்செம்பொற்கோயில்புக்கணையினுற்றான்...()

திருமணவாளக்கோலஞ்சென்றுசென்றிறைஞ்சப்பெற்றோர்க்
கருள்வளம்பழுப்பவேட்டவரமெலாமளித்துப்போக்கிப்
பெருகியமகிழ்ச்சிதுள்ளப்பெய்வளையோடுமங்கண்
மருவுமெவ்வுயிரும்வாழவாழ்க்கைமேல்கொண்டிருந்தான்......()

விதுவணிசடிலமோலிவித்தகன்வெற்பின்மாதைப்
புதுவதினியன்றுசேர்த்தபொலங்கலமணிந்தெல்லோருங்
கதுவினர்போற்றவாற்றுங்கடித்திறங்கேட்டோரீண்டை
வதுவைமிக்கயர்ந்துமுத்திமன்றலுமயர்வரீற்றின்..............(கக௫)

உரககங்கணங்கைபூண்டவொருவரங்கினிதுவேட்ட
மரகதவல்லிமன்றல்வழுத்தினமுனிவிர்வைவேல்
விரகினன்றெய்வயானையென்னுமெனகொடியைவேட்ட
பரகதியருளுமன்றல்கேட்கெனப்பகருஞ்சூதன்..............(கக௬)

கௌரிதிருமணப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - க௮௫௬.

உ

# தெய்வயானை திருமணப்படலம்.

நமஞ்சூற்கொண்டடல்வயிறுளைந்துகான்றபுதுநீரருவிகொளு
மிமஞ்சூழ்விலங்கற்றடஞ்சாரலிமையோர்க்கிடுக்கண்டவப்புரியு
நிமஞ்சூழொருவனுயிர்குடிப்பநினைந்துநரநாராயணர்தாந்
தமஞ்சூழ்வகன்றவுளத்தினெடுந்தவஞ்செய்நமராச்சிரமத்து..................(க)

தரங்கக்கடலின்வரைநிறுவிந்தறுகணரவமிடைச்சுற்றி
யிரங்கக்கடைந்துசுதையெடுத்தவெறுழ்த்தோண்மாயன்மீளிமையு
மரங்கப்பொருதாயிரத்திருநான்கண்டமரசாண்டவற்செகுத்தோன்
கரங்கைப்பிடிப்பவளர்கடவுள்யானைகருதித்தவம்புரிந்தாள்..................(உ)

வெண்கேசுடுத்துப்பட்டொருவிவெண்ணீறணிந்துவிரைச்சாந்தம்
வண்டேலர்மென்மாலிகையுமாற்றியொளிர்கண்மணிதழுவிக்
கொண்டேதியமின்றெனமணியின்கோவையகற்றித்தவம்புரிதல்
கண்டேகடுத்தவீணைமுனிகருத்துள்வணங்கியிதுசொன்னான்..................(௩)

அயிராவதக்கோன்வளர்த்தெடுத்தவமுதேயயிராணியினுயிருக்
குயிராய்விளங்குமணிவிளக்கேயுவணமுயர்த்தோன்றிருமகளே
செயிரானவைதீர்த்தருள்பேரூர்த்தேத்துத்தவங்கள்புரிகிற்பின்
வயிராங்கிசைப்பமணம்விரைவின்வடிவேலவன்செய்திடுமென்றான்........(ச)

நாகமணர்ந்தகருங்கோட்டுநல்யாழ்முனிவன்மொழிகேளா
மாகரரையன்மகடெய்வயானைமகிழ்ந்துவிரைவினெழா
பூகமுகளமலர்ச்சோலையுகுதேன்விரவிக்குளிர்காஞ்சி
வேகநதியூராதிநகர்மேவிப்பணிந்துதவமுயன்றாள்..........................(ரு)

உள்ளமுருகன்றிருமேனியொற்றித்திடக்கண்முகிளிப்பத்
தெள்ளுமதிவாண்முகங்குவியத்திகழ்பொன்மாமையுருச்சாம்பக்
கள்ளம்பயிலைம்பொறிகரப்பக்காயமணியோவியத்தசையா
விள்ளற்கரியபெருந்தவங்கள்விண்ணோர்யானைநிரப்புதலும்..................(சு)

வேறு.

இடுகிடைமிடைந்தெழுசொலோடிருமறுன்னப்
படுகிழவனாகியயில்பாணிவளர்செம்ம
னெடுவழிநடந்தவணிகர்ப்பவெயராடக்
கடுகிடுமுயிர்ப்பிறெடுகன்னியெதிர்நின்றான்................(எ)

உயிர்ப்பவெழுதன்னுலவையோதையுடல்காதி
னயிர்ப்பவினிதேறவனமன்னநடைநங்கை
பயிற்சியுறும்யோகொடுபடர்ந்தவுளமீட்டுக்
கயற்கண்மலரக்கிழவனின்றபடிகண்டாள்..................(அ)

கைதவமளைந்தகருமூப்புடைமையானைச்
செய்தவமடந்தையிருசெங்கையெதிர்கூப்பி
யுய்தவமுளுற்றலுறுவேனையொருநீதான்
வெய்தெனவடுத்தமைவிளம்பெனவுரைத்தாள்..............(கூ)

மருதவரையேபெரிதும்வாழெமதுவைப்பிங்
கொருவனடிபோற்றவுறுகின்றனமிடைக்கட்
பொருவிறவமாற்றுமொருபூவைநினைநோக்கிப்
பெருகுவிழைவாலுரிமைபேணியருகுற்றும்...............(க0)

யாதனைவிழைந்ததனைத்தோதுதல்செய்கென்றான்
வேதனரிகாணரியவித்தகவிசாகன்
மாதடிகள்சூரனுயிர்மாய்த்தவனெனைத்தன்
காதலியெனக்கொளவிழைந்ததுகணென்றாள்..............(கக)

### வேறு.

என்னைநினைதெண்ணமிருந்தபடி
யன்னோனினைமன்றலயர்ந்திடுமே
கொன்னேகவினைக்குலைவித்தனையே
மின்னேயெனவிண்டனன்வீழ்கிழவன்..........(௧௨)

சிவத்தான்முருகன்சிவணுதொழிக
தவத்தார்க்கவினல்லதுசாருயிரு
மவத்தானழிவெய்துகவஞ்சிலன்மேற்
பவத்தாற்பயனெய்துமென்றுளனையாள்.......(௧௩)

நெஞ்சத்துறுதித்திறநேரிழைபால்
விஞ்சத்தவநோக்கியவேள்முருகன்
வஞ்சக்கிழவுக்கிடமாமயின்மேற்
றுஞ்சப்பரிவாங்கெதிர்தோன்றினனே...........(௧௪)

உயிர்காவலனேயுருமாறியெதிர்
பயில்வானெனில்யான்செய்தபாக்கியமென்
றயில்வாள்விழியாளகனேகையுற
மயிலூர்தியினானைவணங்கினளே................(௧௫)

விழியோடுவிழித்துணைநோக்கியையக்
கழிகாதலராயினர்காளைமதுப்
பொழிபூங்குழற்பூவையுமென்றிவரென்
றழியாவருளீசனகஞ்செய்தரோ.................(௧௬)

### வேறு.

எரிமணியிமைக்குமோலியிந்திரன்றன்னைக்கூவித்
தெரியிழைசுமக்குங்கோலத்தெய்வயானைக்குமங்கை
யுரிமைசெய்வேலினாற்குமுறுமுறைமன்றலீங்குப்
புரிவதற்கியைவவெல்லாம்புரிகெனவருளிச்செய்தான்.....(௧௭)

அடியனேனுய்ந்தேனென்னுவடியிணைபணிந்துவிண்ணங்
கொடிதுழாம்புரிசைக்கோயிற்கோபுரவாய்தன்முன்போ
யிடிவளர்கொடியோன்பேரூரெய்ப்பிரானருளீதென்ன
முடிவிலின்பருளுமன்றன்முடங்கலைத்திசையுமுய்த்தான்....()

வினைத்திறமினிதுவல்லவிச்சுவகன்மற்கூவிக்
கனைத்துவண்டுளருந்தெய்வக்கடம்பணிதாரான்மன்றற்
கனைத்துலகத்துமில்லாவழகின்மண்டபமொன்றீண்டை
யெனைத்துளவுறுப்புமுற்றவியற்றுதிகடிதினென்றான்....(௧௯)

கற்பகநிதிகள்சிந்தாமணிகாமதேனுவென்னு
நற்பொருளனைத்துங்கூவிநகருளாரடுத்தார்க்கெல்லாம்
பொற்பமரிழைகளாதிபுரிந்தனபுரிந்தவாறே
யற்பொடும்வழங்குகென்னவியங்கொண்டானூர்வந்தோன்ற.()

வியவரினியவர்க்கூவிவியத்தகுவதுவைச்செய்தி
புயல்வளர்மாடமூதூர்ப்பொருந்தினூரறிந்துசால
நயவருநகர்கோடிப்பநளியிமிலேற்றின்வாங்கும்
வயவுரிப்போர்வைவள்வார்வண்முரசெருக்குகென்றான்...(உக)

இளையமுதிரங்கக்காராகிருகத்துக்குரங்கிநையும்
விளைபகையவுணராதிமேவலர்தம்மையெல்லா
முளைவறவிடுத்துப்போக்கியுறுதிறைகறையுஞ்சின்னாட்
டிளைமகிழரசரேனோர்தாங்களேதெவ்வவிட்டான்.........(உஉ)

இன்னணம்பணிகளேவியெம்பிரான்கழல்கள்போற்றி
மின்னவிர்குலிசவேலான்விழைதகவிருந்தானாகத்
துன்னியவியவர்தம்மாற்சொன்னதன்னரசனேவன்
மன்னியவியவன்கேளாமகிழ்வொடுமிதனைச்செய்தான்...(உங)

பழையனகலனுந்தூசும்பாற்றிமற்றினியதுய்த்துந்
தழைமணச்சாந்துபூசித்தகர்விரைச்சுண்ணமட்டி
மழைமதக்களிறுபண்ணிவார்வெரிந்முரசமேற்றிக்
குழவிவெண்டிங்களன்னகுணில்கரத்தெடுத்துக்கொண்டான்.()

வாழியபட்டிநாதர்மரகதவல்லிவாழி
யூழியுமுலவாப்பேரூரொலிவளத்தோடும்வாழி
யாழியன்மொழியர்டெய்வயானைதன்வதுவைநோக்கி
யேழியனுலகினுள்ளார்யாவரும்வாழியென்றான்........(உரு)

வேறு.

அறங்கள்யாவரும்பேணுகவறன்கடையொழிக
மறங்குலாவியசெற்றங்கண்மனத்திடைவரைக
திறங்குலாவியவவரவர்செய்தொழில்விடுக
கறங்குபோன்மெனச்சுலாவுறுங்கவலைநெஞ்சிறுக........(உசு)

வறுமையாளர்கள்வளநிதிவேண்டினமடுக்க
வுறுபொனாளர்களுவப்பனவுடன்செயத்தொடுக்க
முறுகுகாதலினினியவூண்முறையினுண்டடுக்க
கறுமொறுப்பவானவர்கணல்லணிகண்மெய்ப்படுக்க.....(உஎ)

கந்தடர்த்தெழுங்கடகரிக்கணம்புறநகரி
னுந்தியாத்துறுகாவலிரேம்புதல்புரிக
வெந்தவையடத்துமில்லையென்றியாவரும்வியப்பச்
சுந்தரந்திருநகரெலாநதுறுக்கவென்றறைந்தான்..(உஅ)

தாமரைச்செழும்பூவினைத்தண்மதிக்குழுவி
காமமுற்றிடவணைதலுங்கனன்றலைந்தைமே
லேமமல்குறவெறிந்தெனவெறிருணின்முரசி
னுமனைத்தையும்புரிந்தகநகரணிதுறுப்பார்... .....(உகூ)

வேறு.

சிகரமாளிகைசேணுயர்விசிகண்
மகரதோரணம்வார்கொடிபூசுத
நெருமலர்த்தொடைநன்மணிமாலையுந்
சகைசெயுந்தடங்காவணமிட்டனர்... . ....(௩௦)

வேதிதோறும்விரைப்பனிநீர்களுங
கோதையுங்குளிர்பூரணகும்பமு
மாதர்பாலிகையிட்டமும்வாசமுந்
தீதிலாப்பொரியுஞ்செறிவித்தனர்.,......... ..(௩௧)

அரம்பையாத்தணிசெய்மனைவாய்தம
னிரம்புதித்திலக்கோவைநிரைத்தனர்
சுரும்புணக்கடிமாலைகடேக்கினர்
விரும்புகண்ணடிமீமிசைவைத்தனர்......... (௩௨)

கரைத்தசெம்மணிநீர்கடிக்குங்குமம்
விரைத்தநீரின்விராய்மடமங்கையர்
சுரைத்தநாளத்துருத்தியிற்சிந்திமே
னிரைத்துளார்நெடுவீதிபொற்சுண்ணமே.....(௩௩)

மணியும்பொன்னுமலருந்தண்சாந்தமும்
பிணிசெய்பட்டும்பெருகொளிச்சுண்ணமுந்
தணிவின்மாடமுந்தையலர்போன்மென
வணியமின்றனவந்நகரெங்கணும்..............(௩௪)

பூவணத்தொடையும்பொலந்தார்களுந்
தாவணப்பொடியுந்துகிலீட்டமுங்
காவணத்திரளும்பலகாட்டலா
னுவணத்தையடுத்தபல்வீதியும...,...........(௩௫)

## வேறு.

கன்னிமாநகரமெல்லாங்கவின்கொளக்கோடித்தங்குத்
துன்னியமாந்தரின்பத்துறைதுறைமுழுகாநிற்ப
முன்னியமுடங்கலேற்றுமுதிர்சுவைமன்றல்காண்பா
னென்னருமகிழ்ச்சிதுள்ளவெழுந்தனர்பேரூர்நோக்கி...............(௫௬)

மருங்குபல்கணங்கள்சூழவயிரவன்வீரன்சாத்த
னொருங்கியகாலவங்கியுருத்திரனுடகேச
னெருங்குகூர்மாண்டரின்பநிகழ்பதினொருவரென்னு
மிருங்கதியருளவல்லாரிவர்மகிழ்துளும்பப்புக்கார்...............(௫௭)

திருத்துழாயலங்கன்மார்பன்றிசைமுகனருக்கர்பல்வே
றுருத்திரர்வசுக்கண்மற்றைமருத்துவரொன்பானெண்ணைக்
கருத்துறவிரட்டிசெய்தகணத்தவர்நதிகளோங்கல்
பொருத்துகாலங்கள்வேலைபுங்கமாதவருந்தொக்கார்...............(௫௮)

உரைத்திடப்பட்டோர்தங்களொண்டொடிமனைவியாரு
மிரைத்தெழுகடல்போலீண்டியெய்தினர்நகரிற்சிந்து
மரைத்தசெஞ்சாந்துங்கோதையலருமிழ்மதுவுமல்கித்
தரைத்தலையிழுக்கப்பாதந்தளரிடைக்கின்னல்செய்தார்...............(௫௯)

அரிமதர்மழைக்கணல்லாராயமுமமரர்தாமும்
விரிகடலுலகின்வாழுமேதகுமாந்தரோடுந்
தெரியிழைதருக்கணல்கத்தேனுவின்னடிசிலுய்ப்ப
வுரியனநிதியுஞ்சிந்தாமணியுமிக்குதவப்பெற்றார்...............(௬௦)

விழுத்தகுமுண்டியானும்விலகிவில்லுமிழுந்தெய்வக்
குழுத்தகுக்கலனுந்தூசுந்துறைவறவணிதலானும்
பழுத்தமெய்யன்பிற்றுன்னும்பாரினர்தம்மைவிண்ணின்
வழுத்தபவதிகின்றாரைவரைவுசெய்தறியலாகா...............(௬௧)

உம்பர்கண்மிடைதலானுமொளிர்ந்தபொன்னிறத்தினாலும்
வம்பவிழ்தருக்களாதிவயின்வயினிற்றலானும்
பம்பிருளிரவுமாறப்பன்மணிகதிர்த்தலானு
நம்பனூர்பேரூர்நாகநகரொடுமலைத்ததன்றே...............(௬௨)

கண்டுகண்ணடியிற்பண்டைக்கலனெலாநீத்துத்தாரு
மண்டொளியிழைகள்வாங்கிவனப்புறவணிகின்றாரு
முண்டியினுவக்கின்றாருமொலிபுனற்றுளைகின்றாரும்
வண்டலாட்டயர்கின்றாருமங்கையராயினாரே...............(௬௩)

வாம்பரியுகைக்கின்றுருமதகரிதுரக்கின்றுரு
மேம்பியவிமானம்பொற்றேருழியுழியூர்கின்றுரு
மாம்புறநகரினேகியரிவையையணிகின்றுருந்
தாம்பலராயினுர்கடவுத்தோண்மருமப்பூணுர்....................(சச)

பூவையிற்கிளியின்வென்றும்பூங்கழற்பந்தின்வென்று
மேவருபிடியாட்டத்தின்மெல்லியர்தம்முள்வெல்ல
வோவறுதகர்கள்கோழியொண்சிவலாதிவிட்டுத்
தாவின்மைந்துடையோரெல்லாந்தம்முளேவெல்லாநின்றுர்........(சரு)

துறக்கநாட்டவர்கட்கெல்லாந்துறக்கமன்னுலகாவேறு
துறக்கமொன்றெய்திற்றென்னச்சுவைப்பயன்பலவுநல்கிச்
சிறக்குமப்பேரூர்மாட்டுச்செறிந்தவர்க்கொழிவிலுள்ளம்
பிறக்குமோசுவைத்தவுள்ளம்பெயரினுமிறக்குமோதான்...........(சசு)

நகரினையடுத்தோர்சாலநல்லபேரின்பந்துய்ப்பப்
புகரிலாத்தேவதச்சன்புயன்மணியூர்திமன்னன்
புகலருடலைமேற்கொண்டுபுவனங்களனைத்திலுள்ளு
நிகரிலதாகநீண்டமண்டபநிருமித்தானுல்..........................(சஎ)

வேறு.

திண்ணெனவடித்தலஞ்செம்பொனேடவிட்
டொண்ணிறவச்சிரமுறுத்தியும்பரி
னண்ணொளிச்செம்மணிநலக்கவிட்டனன்
மண்ணறநீமுறைவயங்கிறலென...........................(சஅ)

ஒளிக்குமேல்வளியெனவுறுகுறட்டின்மேற்
றுளிக்குநீனிறக்கதிர்த்தூணநாட்டிமேற்
பளிக்கினிற்போதிகைபயிற்றியிட்டனன்
வளிக்குமேல்வெளியெனமருட்கைகொள்ளவே.........(சக)

வேறு.

தொத்தொளிகஞற்றிவருசூரியரைவார்த்து
வைத்தனையவிதத்துருமவுத்திரம்வயக்கிப்
பொத்துகுளிர்வெண்மதிபுணர்த்ததெனமேலா
னித்திலமழுத்தியநெடும்பலகையிட்டான்.................(ருo)

வெய்யவனெழுக்கியவிழுக்கிரணமென்ன
வையவொளியுத்திரமமைத்தபுடையெல்லாஞ்
செய்யமணிசெந்துகிர்செழும்பொனிவைசெய்த
பெய்யுமொளிமாலைபிறவுந்துவளவார்த்தான்............(ருக)

சீதளநறுங்கிரணந்திங்களுமிழ்கின்றுங்
கோதமலிநித்திலவொலித்தொடையல்வேய்ந்த
மாதரளவொண்பலகைவகுவயின்முற்றுஞ்
சோதிமலியப்பெரிதுந்தூக்கியொளிர்வித்தான்..........(௫௨)

வண்டுபடராதமலர்வண்டொடலையானு
முண்டளிசுலாவுமலரொண்டொரியலானுங்
கொண்டநவமாமணியின்கோதைகளினானு
மெண்டவிர்வரைப்புமிலதாகவணிசெயதான்...........(௫௩)

பளிக்கினுயர்பித்திகைபயிற்றியதன்மாடே
வெளிக்கணிமையார்கண்மிடையுற்றநிரையென்னத்
துளிக்குமொளியோவியவொழுங்குகடொகுத்தான்
களிப்பவெதிர்நோக்குநர்கள்கண்மலர்கள்வாங்க.........(௫௪)

வாய்ந்தபலதூண்கடொறும்வாருறைகள்சேர்த்தா
ஞய்ந்துநிலனெங்குமவிர்கம்பலம்விரித்தான்
வேய்ந்துமணியும்பரின்விதானமுமுறுத்தான்
பாய்ந்தவெழினித்திரள்கள்பாங்குறவமைத்தான்.......(௫௫)

மாமணிவிளக்குமலர்மாலையொடுசாந்துங்
காமர்கலனுங்கவரியாடிகுடைமற்றுந்
தூமணியியன்றசுடர்ப்பாவையினிதேந்தி
யேமுறவிடந்தொறுமியங்கவிசைவித்தான்...............(௫௬)

குண்டமொடுவேதிமுதலானகுறைதீர்த்திட்
டொண்டவிசுமன்றலுறுவார்க்கிடையுளுற்றிக்
கண்டவிர்நுதற்கடவுளார்முதலினோர்க்கு
மண்டுமெரியாதனம்வயின்முறைமுறுத்தான்...........(௫௭)

கதலிவளருங்கமுககன்னனெடுவானிற்
பொதுளியதருக்களிவைபோதுகனிமற்று
முதவவொளிர்தூண்டொறுமுறுத்துநனியாத்தங்
கெதிரில்பலதோரணமிடந்தொறும்விசித்தான்..........(௫௮)

மிகக்கவின்விளைத்தவியன்மண்டபமருங்கு
புகப்படிபொலிந்தவயிரேரியமதாக்கி
நகைக்கதிர்செய்வச்சிரநல்யாளியதன்மாடே
முகக்கவிணைவித்தனன்முதிர்ந்தழகெறிப்ப...............(௫௯)

## வேறு.

கோமேதகத்தின்யாளிவரிகொளுத்திக்கொடுங்கைமரகதத்தி
னுமாறியற்றியதினெங்குமவிர்பொன்னரிமாலிகைவாசப்
பூமாலிகைபன்மணிமாலைபுகரில்கவரியாடிகனி
தூமாணழகுபெறத்தூக்கித்துவண்டுநிலந்தோய்ந்தனநான்றே...........(௬௦)

மருங்குபயின்றவயின்றோறுமலர்ப்பூம்பந்தரமைத்துள்ளா
லிருங்குங்குமச்சேறிழுத்தநிலத்திலகுமணிநித்திலம்பரப்பி
யொருங்குகமழுநறும்பனிநீருரைத்துத்தவழவிளந்தென்ற
னெருங்குபலவிம்மிதப்பொருள்கணிரப்பிக்கொடியுமிசையுயர்த்தான்.....(௬௧)

வள்ளமருட்டும்வாய்க்கமலமலர்மென்குமுதநறுங்குவளை
வெள்ளைநிறத்தோதிமத்திரள்கள்விரிபூஞ்சிறைச்சக்கரவாகப்
புள்ளும்பிறவும்பயின்றுமணிப்புனன்மிக்குடையதடம்பொய்கை
நள்ளுமலர்ப்பூம்பந்தரயனனுகவமைத்தானலங்கொழிப்ப...............(௬௨)

சுரும்புமிழற்றத்தேன்றுளிப்பத்தோகைநடிப்பக்கிளிபூவை
விரும்பிக்கிளவியெதிர்பயிற்றவிழைந்துகுயில்கணணிகூவ
வரும்புமொளிமேடைகள்புளினமமைத்தவரையென்றிவைபயில
விரும்பொனுலகும்புறங்கொடுப்பவெடுத்தான்மருங்காங்குய்யானம்.....(௬௩)

இன்னபடிமங்கலவதுவைக்கியையமணிமண்டபமாதி
மன்னவியற்றிமகிழ்கூர்ந்துவானோர்தச்சனடிபணியக்
கொன்னும்வயிரப்படைவேந்தன்குறுகியுமைபாகரைப்பணிந்து
நன்னர்வதுவைச்சிறப்பனைத்துநம்பவியன்றவெனக்கிளந்தான்..........(௬௪)

கருணையரும்புந்திருவுளத்துக்கடவுள்பெருமான்முகமலரா
வருகுவணங்கித்தொழுதேத்துமரவப்பள்ளிவானவனைப்
பெருகுமகிழ்வின்முகநோக்கிப்பேணுவவுணர்குலஞ்சாய்த்த
முருகனுருவமணிசெய்திமுகுந்தவெனச்செவ்வாய்மலர்ந்தார்............(௬௫)

குமிழ்மென்மலரைப்புறவகற்றுங்கொடிநாசியினித்திலமணிந்த
வமிழ்தநிகர்த்தமொழிக்கமலையடிகளிறைஞ்சவடுத்தாளை
யிமிழ்தண்கருணையானோக்கியிமையார்பழிச்சும்யானைதனைத்
தமிழினினிப்பவணிகென்னச்சயிலமுயிர்த்தாள்வாய்மலர்ந்தாள்.........(௬௬)

## வேறு.

அருள்செயப்பணிசெயவரியமாதவ
மருவினமுன்னர்மண்ணிலத்துமாமெனத்
திருமறுமார்பனுங்கமலச்செல்வியு
முருகியவன்புகொண்டுஞற்றப்புக்கனர்......... (௬௭)

பெருங்கடற்பாயலான்பெட்டபல்பொரு
டருங்கடன்பூண்டனன்சதமகத்தினு
ளொருங்கயிராணியொண்கமலைவேட்டன
வருங்கலனுதிகளளிக்கநின்றனள்...............(௬௮)

மங்கலமணிமுரசியம்பவானமர்
கங்கைவெண்களிற்றின்மேற்கடத்திற்போதரா
வங்கலுழ்மேனியினுட்டவைத்தனர்
புங்கவர்முருகனைப்போற்றிமாயவன்............(௬௯)

உவளகவரைப்பினுண்டவிசின்மேலிரீஇத்
தவளவெள்வளையினந்தழங்கத்தன்கடற
பவளமொத்தவிர்நிறத்துருவிற்பல்கிய
திவளொளியணிதிகழன்பிற்போக்கினன்.........(௭௦)

அருக்கியமுதலியவமைத்துவாசநெய்
மருக்கிளர்சிகழிகைமலியவைத்துரை
யிருக்குரைத்தாட்டுவேவேணுபாவையு
மொருக்கியசிந்தைகொண்டுழினுட்டினன்......(௭௧)

நுழைபிழைக்கலிங்கநோன்கரத்தினேந்துபு
தழைமணச்குஞ்சியந்தலையினார்புனல்
விழைதகப்புலர்த்திமெய்யீரமொற்றினன்
மழையுறழ்திருவுருவனப்பின்மாயனே..........(௭௨)

மட்டுமிழ்நறும்புகைமடுத்துக்குஞ்சியி
னட்டிவண்புழுகலர்த்தார்கொண்டியாத்துமேற்
கட்டுபுகாஞ்சனக்கயிற்றிற்சென்னியி
னிட்டனன்மணிமுடியிமைப்பவாட்கதிர்.........(௭௩)

திங்கள்சென்னியின்வழுக்குற்றுத்தேசுறத்
தங்கியதிதுபொடிதானன்றுலயற்
செங்கனல்விழியிதுதிலகமன்றிவன்
சங்கரனெனநுதற்கழகுசார்த்தினன்............(௭௪)

வழுக்கறும்யோகினர்மதிச்சூந்திங்களி
னுழுக்கொளிமண்டலத்தொளியிதாமென
விழுக்குருநீற்றொளிவிளங்குநெற்றியின்
முழுக்கவினுடையுமுறையின்யாத்தனன்......(௭௫)

கண்ணுதல்பொடித்ததன்கான்முளைக்கொடி
நண்ணுமதனைவேளென்னுநாமத்திவ்
வண்ணலுக்காமெனவமைத்தசீர்பொரத்
திண்மகரக்குழைசெவியிலேற்றினான்.........(௭௬)

செம்பொறிவாங்கியதிணிந்ததோளொடு
வம்பவிழ்மருமமுமறைப்பினல்லது
கொம்பனாருயிர்க்கொருகொளுகொம்பின்றெனப்
பம்பியமணிக்கலன்பலவுஞ்சாத்தினான்.......(௭௭)

மாதராருள்ளகமறுகும்வார்புயச்
கோதையார்மத்துமேற்கொளுவநின்றதோர்
சீதவான்மதியெனத்தெளிந்தவச்சிரக்
காதலாரங்கதங்கதிர்ப்பப்பூட்டினான்.........(௭௮)

பொழிகதிர்ச்செழும்பொனிற்பொதிந்தகண்மணி
யழகியமுழங்கைமேலமையக்கட்டினா
னொழுகியபுயமெனுமோங்குமத்திடைத்
தழுவியவாசுகித்தாம்புமானவே.-.............(௭௯)

செங்களத்தெதிர்ந்துநின்றிறலிற்றானவர்
மங்கினரகழ்ந்தவென்வடிவுநல்கெனத்
தங்கியபரிதியைத்தாங்கினாலென
வங்கைமேற்செம்மணிக்கடகமாக்கினான்......(௮0)

ஒருதலைச்செம்மணிக்கடகமொன்றமற்
றொருதலைவயிரவங்கதநின்றோங்கலாற்
பெருகெழிற்கரம்புரம்பேதுசெய்தவ
னுருண்மணித்தேரினுளச்சும்போன்றதே........(௮௧)

வாழியவருந்தவம்வயக்கிப்பல்பக
லாழியொன்றணிந்ததனங்கையாற்பல
வாழிகளெடுத்தெடுத்தமலன்வார்விர
லூழுறச்செறித்தனனுவணவூர்தியே.........(௮௨)

தந்தைபோற்றிக்குடைதழுவமுன்னினு
மந்தின்மற்றஃதுருதமைத்தல்செய்தெனச்
செந்துகிற்பட்டின்மேற்சிக்கயாத்தனன்
கொந்தொளிநாணுறீஇக்கொழும்பொனாடையே...()

கயில்படுகாஞ்சனக்கழலொன்ருர்த்தபின்
வெயில்விரிபன்மணிவிளக்கமாண்டெழில்
பயில்பரிபுரமொடுபாதசாலமுஞ்
செயிர்தபுசேவடிசேர்த்தித்தாழ்ந்தனன்......(அச)

அழகினிற்சிறந்திடுமரங்கன்ருதையா
யழகினிற்சிறந்தவனுனசெங்கண்மா
லழகினுக்காகரமானவேட்கணி
யழகினையளவையினறையலாங்கொலோ.....(அரு)

திருமகளென்பவடெய்வயானையை
மருவளருவளகவரைப்பிற்கொண்டுபோய்க்
குருமணியாதனத்திருத்திக்கோமள
வுருவொசிதரவுரைத்தாணெய்யோதியின்....(அசு)

வேறு.

முளிந்தவொண்ணெல்லிச்சாந்துமொய்யொளிமஞ்சட்சாந்துந்
தெளிந்தபஃறுவருந்தெய்வவிரைகளும்பிறவுஞ்சேர்த்திக்
குளிர்ந்தவான்கங்கைநன்னீர்கொண்டனடிமிர்ந்துசால
வொளிர்ந்திடப்பூங்கொம்பன்னுளுருவினைமண்ணுச்செய்தாள்......(அஎ)

மெய்வளரீரமாற்றிவிளங்கிழைப்பட்டுச்சாத்திக்
கைவளர்வினைஞரிட்டகமழ்மலர்ப்பந்தருள்ளா
லைவளர்மணிப்பொற்பீடத்தணங்கினையிருத்திவாச
நெய்வளரோதிவாங்கிச்சீப்பிஞனீவிவிட்டாள்........................(அஅ)

காசறைகமழவூட்டிக்காரகிலாவியேற்றி
வீசொளிப்பட்டுநாணின்வீக்கியேற்றியிலிற்கொண்டை
வாசமென்மலருட்பெய்துவயக்கிமேற்காரைத்தென்னன்
றேசவிர்தலையிட்டென்னத்தெரியல்கள்வளாவினுளே...............(அகூ)

தடித்திடைவிளங்கியாங்குத்தயங்குபொன்னெஃகுதொட்டுக்
கடித்திரளாலியென்னக்கதிர்மணித்தொங்கன்முச்சி
தொடுத்திருண்மேகம்விண்டுதுலங்குசீர்த்தாரைகான்றுங்
கெடுத்தொளிகொழுந்தப்பாங்கரிலம்பகஞ்சூட்டினுளே..............(கூo)

கொழுந்தெழுபவளக்காடுகூர்கருங்கடலின்மாட்டுஞ்
செழுந்திருக்குழவித்திங்கடிகழ்ந்தென்மணிக்காழ்வீக்கி
யழுந்தியவளகப்பாங்கரவிர்மணித்தெய்வவுத்தி
தொழுந்தனிக்குழவித்திங்களிரண்டையுஞ்சுடரவைத்தாள்.........(கூக)

கருங்கடலுப்பணிட்டகண்ணகனானையேயென்ன
வொருங்கியவோதிநாப்பணெழுக்கியகீற்றின்மேலாற்
றருங்கதிர்ச்சுட்டியென்னுஞ்சருப்பம்வாய்திறந்துகான்ற
பெருங்கவின்மணியேயென்னப்பிறக்கினடிலகநெற்றி..............(௧௨)

வேறு.

முலையதுதாமரைமுகிழன்றம்பல
வலர்விழியன்னவையாதலான்மதி
சிலையுமன்றிஃதொளிதிவளுநெற்றியென்
றலர்கதிர்ப்பட்டமாங்கமையயாத்தனள்...........(௧௩)

வேறு.

சேந்தரிபரந்துதேசுதிகழ்ந்துசெஞ்செவியின்காறும்
போந்தகன்றிருண்டுவெண்மைபுணர்ந்துகொட்புற்றுநீண்டு
நாந்தகந்தடற்றுண்மூழ்கநாமவேலம்பைச்சீறி
வாய்ந்தகண்மலர்க்குமாதோவஞ்சனம்வயக்கினாளே................(௧௪)

மகரவல்லேறுதூங்கும்வண்மையான்வள்ளையேயென்
றகிலமுந்தெளியக்காதினவிர்குழைமகரமிட்டு
நகுகதிர்முத்தநாசிநாற்றினளிவற்றைநாடின்
முகநிதிக்கமலங்கான்றமொய்யொளிப்பொருள்கள்போன்ற........(௧௫)

உளைவறவடைந்தோர்க்கெல்லாமுவப்பினைச்செய்யாநிற்கும்
வளைநிதிவெறுக்கைபாங்கர்மாண்டகப்பொழிந்தாலென்ன
விளைவிரைநானஞ்சாத்திவிளங்கியகண்டஞ்சீர்ப்பத்
திளைகதிர்மணிக்காழ்கட்டுவடத்தொடுஞ்செறியச்சூழ்ந்தாள்........(௧௬)

பாசிளவேயிற்றோன்றும்பருவரைக்குலங்களென்ன
வீசொளிமணிக்கேயூரம்விளங்குசூடகமும்வண்டு
மூசுமென்மாலைத்தோளுமுன்கையுங்கவினச்சேர்த்திக்
காசவிர்வளையுமற்றுமாழியுங்கதிர்ப்பக்கோத்தாள்....................(௧௭)

பொற்பொடிசிதர்ந்தாலன்னபொறிசுணங்கலர்ந்தகொங்கை
விற்பொலிமணிச்செய்சேற்றின்வியத்தகுதொய்யிறீட்டிப்
பற்பலமணியின்கோவைபன்மலர்த்தொடைலமற்று
மற்பொலிவேழப்பாங்கர்வார்த்தபஃறொடரினிட்டாள்..............(௧௮)

ஒல்கியமருங்குற்கொம்பருறுதிகொண்டிருப்பநாடி
நல்கெழிற்சலாகையொன்றுநாட்டியொன்றுறயாத்தென்னப்
புல்லியமயிரின்வல்லிபுடைவனப்புமிழக்காசு
பல்கியபருமக்கோவைபயிற்றினளல்குன்மாட்டு.................(௧௯)

பாடகமணிந்துசெம்பொற்கிண்கிணிபாதசாலஞ்
சேடுயர்மணிச்செய்பொன்னூபுரம்புறவடியிற்சேர்த்துத்
தோடவிழ்கமலம்வென்றதூயவுள்ளடியிற்சீர்ப்பப்
பீடுயர்பஞ்சியூட்டிப்பெரிதுவந்திறைஞ்சிநின்றாள்..................(க௦௦)

## வேறு.

இன்னவாறெலாந்தெய்வயானையையிலக்குமிதான்
றுன்னிவானணியணிந்துழித்தோகைமாமயிலோன்
மன்னுமாநகர்வலம்வரவலித்தனனறிந்து
பன்னுவானவராதியோர்படர்ந்துமுன்னின்றார் .........(க௦க)

எட்டுமாதிரக்கயங்களுமெழிலியும்பனிப்பக்
கட்டுவார்முரசாதிகளியம்பினகதிர்கள்
விட்டுவார்கொடிவிசும்புடையகடெலாந்தூர்த்த
முட்டிலாநிழல்பரப்பினமுழுமதிக்கவிகை...............(க௦௨)

கவரிதுள்ளினவசைந்தனகால்செய்வட்டங்க
டுவளமின்னிடைமாதரார்தொடங்கினராட
லுவரியின்னமிழ்தெனப்பரந்தனவுயர்பாட
லிவர்பெருஞ்சனம்விலக்கினரேந்துவேத்திரத்தோர்....(க௦௩)

ஒழுகுமும்மதத்தாரையினுறுபிரமரங்கண்
முழுகுவெண்கயம்பண்ணிமுனிறுவினர்பாகர்
தொழுகுலத்தவர்க்கமுதமாய்ச்சுவைக்கும்வேல்வலத்தோன்
குழுமுவையகங்குதுகலமடையமேல்கொண்டான்......(க௦௪)

இவனைநேர்பவரிலையெனமறுப்பதுபோலக்
கவரிதூக்கியமுறச்செவிகாலெழமறியப்
புவனமேலிதுபோலிலையெனப்புரத்துடல
மவவிமோத்தல்போன்மோந்துமோர்துலாவியதத்தி....(க௦௫)

பொரியும்பாகடைத்திரளும்பொற்சுண்ணமுமலருஞ்
சொரியுந்தோயமுந்தூவிமுன்றொழுதனர்சில்லோ
ரெரியுந்தீபமாங்காங்குநீரொடுமெதிர்சுழற்றிக்
கரியின்பாலுறக்கவிழ்த்துளங்களித்தனர்சில்லோர்......(க௦௬)

கரும்பின்வார்கழைதடிந்தயல்கடிகையுங்கனியுஞ்
சுரும்புண்கோதையுந்தும்பிமுன்னிறைத்தனர்சில்லோர்
விரும்புமோகையின்விழுக்கலன்கன்னிகைபிறவு
மரும்புமார்வலர்க்களித்தனராடவர்சில்லோர்...........(க௦௭)

வளிமறைப்பிடைமறைந்துசற்றேயுடல்வயங்கி
வெளிதெரிந்துறநோக்கினர்பின்னனோர்சில்லோர்
வெளியின்வந்துதம்பாங்கியர்வியோகத்தின்மறைந்து
களிறடுத்தலுங்கதுமெனத்தாழ்ந்தனர்சில்லோர்.........(க0அ)

வணங்குநுண்ணிடைப்பாரமோர்ந்தொழிப்பவர்மான
விணங்குமண்மிசையெரிகதிர்மேகலையிரங்கக்
கணங்கொள்வண்டினங்கூட்டுணுங்கருங்குழனெகிழ்ந்து
மணங்கொண்மாலைகள்பொழிதரவணங்கினர்சில்லோர்.(க0௯)

பணிந்துநின்றவர்பணிந்திலேம்யாமெனமீட்டுந்
தணிந்தசிந்தையிற்றரையிசைத்தாழ்ந்தனர்சில்லோ
ரணிந்தவஞ்சலிமுடியினரதுமறந்தெங்கை
துணிந்தவோவெனச்சுற்றினுநோக்கினர்சில்லோர்.....(கக0)

கொழுகொம்பில்லதோர்கொடியெனத்திருமுன்னர்த்தாழ்ந்து
பழுதில்பன்மணிமேகலைகாத்தனர்சில்லோர்
முழுதுமன்புளமுகிழ்த்தெழவிழியெழின்முழுகத்
தொழுதுசெங்கையிற்காத்தனர்தொடிவளைசில்லோர்....(ககக)

இன்னவாறுமூன்றுலகமுமின்புறப்பலவாய்த்
துன்னுவீதிகள்சூழ்ந்துபோய்த்தும்பியினிழிந்தங்
கென்னையாளுடைமுருகவேளிருங்கதிரெறிக்குங்
கன்னிமாமணிமண்டபங்காதலிற்புகுந்தான்............(கக௨)

ஆங்குமுன்னரேயரியணைவீற்றிருந்தருளுந்
தேங்குதண்புனற்சென்னியார்திருவருள்பரிய
வீங்கிருங்கதிர்மணிப்பொலந்தவிசின்மேலிருந்தான்
பாங்குருத்திரராதியோர்பான்மையின்வதிந்தார்........(கக௩)

அமரர்தம்பெருமானருள்கொண்டயிராணி
விமலமல்கியதெய்வயானையைவெறிநறுந்தார்
கமழுமண்டபத்தினிதுபோதரக்கருதலு
மிமிழுமன்புடைப்பரிசனமறிந்தெழுந்தனரால்..:.......(கக௪)

### வேறு.

கடகமுங்குழையுந்தோடுங்கதிருமிழ்மணிப்பொற்பூணும்
வடகமுந்துகிலுமேனையணிகளுமலர்ப்பூந்தாருங்
கடல்வருமமுதுந்தெய்வக்கனிகளும்வேறுவேறு
படலிகையமைத்துமூடிப்பற்பலாயிரர்கைக்கொண்டார்.....(கக௫)

பேடியராண்மைக்கோலம்பெரிதுமெய்த்தாங்கிக்கொண்டு
நீடியவாள்கையேந்திநிரைந்துபற்பலர்கள்சூழ்ந்தார்
கோடியபுருவங்காட்டிக்கொம்மெனச்சினந்துசெங்கை
யாடியபிரம்பினேடுமொள்கடிக்கொண்டார்சில்லோர்.........(ககசு)

மறுவறுகவிகைபிச்சம்வார்கொடிகவரிக்காடு
முறைமுறையசையுங்கால்செய்வட்டமுமொய்ப்பவீசு
மறுவையும்பார்ப்போர்ச்கெல்லாமணங்குசெய்தருகுசூழ்ந்த
நறளொடுசிந்துமுன்னேகுறுகுறுநடந்துசென்ற............(ககஎ)

மங்கலம்பாடுவாரும்வளரிசைபாடுவாரு
மங்கெதிராடுவாருமலர்புனல்வீசுவாருஞ்
சிங்குதலறியாக்கோலச்சிவிகைதோட்காவுவாருந்
தங்கியதுறக்கவாழ்க்கைத்தையலராயினேரே..................(ககஅ)

என்னிவனேற்றவாறென்றியாவருமிறும்பூதெய்தக்
கன்னியர்குழாத்தினூடுகாமருசிவிகையூர்ந்து
மன்னியவதுவைக்கானமண்டபமருங்குசார்ந்து
மின்னுகுகுலிசவைவேற்றுதைபான்மேவினின்றாள்...........(ககக)

அருட்தவப்பேறுவாய்ந்தவமரர்கோன்றுணைவியென்னத்
திருந்தியசசிமானன்பிற்றீம்பயம்வணங்கிவாக்க
விருந்தருள்குமரன்பாதமெழில்பெறவிளக்கியநீர்
மருந்தினும்பருகிச்சென்னிமருங்கினுந்துளித்துக்கொண்டான்....()

முரன்றனசங்கம்பேரிமுழங்கினமுரசமார்த்த
நரன்றனவங்கியங்கணரம்பொடுமகிழ்ச்சிவெள்ளம்
வரன்றினதிரண்டோருள்ளமடுத்தொருமகளோனீரோ
டரன்றனிக்குமரற்கீந்தானருமறைமுறைகள்கூறி............(கஉக)

இந்திரன்வளர்த்ததெய்வயானையையேற்றுப்பின்னர்ச்
சுந்தரமுருகன்வானோர்தொழுதகுசூரவன்வேதச்
செந்தழல்வளர்ந்நின்றுதிகழ்மதுபருக்கஞ்சொன்றி
முந்துறமுறையினீட்டமுகமலர்ந்தருளினனல்.............(கஉஉ)

கன்றெடுகாமதேனுக்கலந்துடன்போதநோக்கி
மென்றுணர்க்கரியகூந்தன்மெல்லியல்வலக்கைபற்றி
யொன்றவேமுடியிட்டேகியொளிர்மணியம்மியண்மி
யன்றதன்முடியிற்சாலவச்சுதந்தெளித்தபின்றை...........(கஉங)

சந்திரன்சடையில்வேய்ந்ததம்பிரான்றானுமந்நா
ளிந்தநல்வினையைநாணாதியற்றினானென்னிலன்னோன்
மைந்தனுநாணுமாறிங்கென்னெனமதித்துநக்கா
னந்தின்மற்றதனைநோக்கியனைவருமுறுவல்பூத்தார்.........(கஉச)

மகளிர்பால்வணக்கமோம்பிமைந்தர்களின்பந்துய்க்குந்
தகுதியுமுடன்மாட்டுச்சாருதற்கங்கிசான்றா
வகிலமுந்தெரிக்குநீதியாதரித்தணங்குபாத
நகுமுகத்திளையோன்பறிநகைமணியம்மியிட்டான்........(கஉரு)

பங்கினண்மாட்டுச்சென்னிப்படர்புனன்மாதைவைத்த
வங்கணன்வணக்கநிற்கவவனையும்வணக்குஞ்சேயோ
னங்கையின்வணக்கமன்றநமக்கெலாமேற்றமென்னா
மங்கையர்பலருநோக்கிமகிழ்தலைசிறந்துநின்றார்.............(கஉசு)

தந்தைதனுருவமானதழல்வலம்வந்துநின்று
கொந்தலர்க்குழலிநல்கக்குரூஉப்பொரியேற்றங்கட்டிச்
சுந்தரவணையின்வைகிச்சுடர்ந்தமங்கிலியநன்னாண்
கந்தரங்கவினயாத்தான்களித்தனவுலகமெல்லாம்............(கஉஎ)

வானவர்வளர்பூமாரிசொரிந்தனர்மகவானோடுந்
தேனலர்கொன்றையார்தந்திருவருள்வழங்கப்பெற்றங்
கூனமில்லளகைக்கோமானொண்ணிதிமணிப்பூணாடை
போனகம்பிறவுநல்கயாவருமகிழ்ச்சிபூத்தார்...............(கஉஅ)

பல்வகைச்சிறப்புந்தோன்றப்பம்பினோர்மகிழ்ச்சிதூங்க
வெல்வளர்நகரவீதியேகிலைவேற்கைநம்பி
யல்வளர்கூந்தற்செவ்வாயணங்கொடுமுலாப்போந்தண்மி
வில்வளர்கோயிலுள்ளால்விளங்கொளித்தவிசினுற்றான்......(கஉகூ)

மற்றையநாளுமாற்றும்வதுவையின்சடங்குசால
முற்றியபின்றைமுக்கண்முதல்வனார்மகிழ்ச்சிகூர்ந்து
பற்றியவன்பினீங்குப்படர்ந்துளீர்யாரும்வேட்ட
தெற்றதுதருதும்வல்லேயெழில்வரங்கொள்கவென்றார்......(கங0)

அவரவர்வேட்டவேட்டவரும்பெரும்வரங்கள்பெற்றுத்
துவரிதழுமையாளோடுந்துணைவனார்பாதம்போற்றித்
தவலருங்களிப்புத்துள்ளச்சார்ந்தனர்விடைபெற்றேகி
யிவர்தருதத்தம்வைப்பினினிதுவாழ்ந்திருந்தாரன்றே........(கஙக)

குருதிகொப்பளிக்கும்வைவேற்குமரவேள்கொழுந்தண்டேற
லருவிசெய்மலர்மென்கூந்தலணங்கொடுபேரூர்வைப்பி
னிருமுதுகுரவர்தம்பாலிருந்தனனுலகமெல்லா
மருமலர்ப்பாதம்போற்றிவைகலும்வாழமாதோ..............(௧௬௨)

தேன்வழிந்தொழுகுங்கோதைதேவர்களரையனீன்ற
கான்வழிந்தொழுகுங்கூந்தற்கன்னியைச்சூட்டியார்க்கும்
வான்வழிந்தொழுகுமின்பம்வழங்கியகாதைகேட்டோ
ரூன்வழிந்தொழுகும்வேலானுலகினிலின்பந்துய்ப்பார்......(௧௬௩)

குறைவறுதவத்திற்சான்றகொள்கையீர்தேவர்தங்கள்
சிறையினைவிடுத்துக்காத்தசெம்மலார்மன்றல்சொற்று
மறைவழியொழுகுஞ்செங்கோல்வளர்குசத்துவசனென்பான்
பெறுவரங்கேண்மினென்னப்பேசுவன்சூதமேலோன்......(௧௬௪)

தெய்வயானைதிருமணப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ௧௧௬௩.

௨

# குசத்துவசன் வரம்பெறுபடலம்.

உவவுமதிக்குடைநிழற்றவுலகமொருதாட்படுத்திக்
குவவுநிதிமுடிமன்னர்குரைகழற்ருள்பணிந்தேத்தக்
கவவுமறைநெறியொழுகுங்கலைமதியின்வழிவந்தா
னவவுமனத்திரவலருக்கடர்பருவமழையனையான்.........(௧)

கோடாதகோலினன்குசத்துவசனெனும்பெயரான்
வாடாதசீர்த்தியான்மல்குபெருஞ்செல்வத்தா
னோடாததானையானொளிவளர்வைவேலினான்
வீடாதபெரும்போகமிசைந்துலகம்புரக்குநாள்............(௨)

மக்கட்பேறில்லாமைமனைவியொடுமெவ்வரையன்
றுக்குப்பாரிடையெல்லாஞ்சுவைத்தாலுமென்னையுடல்
பக்குத்தூதர்கள்வழியிற்படருயிரைக்கதியேற்று
மிக்குத்தாம்புரிகடன்மைவிளைவின்றேலெனக்கவல்வான்..(௩)

உலகாட்சியமைச்சர்பாலுறுத்தெழுந்துபலவரையு
மலரார்ந்தபலவனமும்வளர்சுரமும்பலகடந்து
புலவோர்கள்பலகாலும்போற்றிசைத்துப்பெருவரங்கள்
விலகாதுபெறும்பேரூர்வியனெல்லைமருங்கடுத்தான்........(௪)

தூரத்தேயெதிர்தோன்றுஞ்சுடர்வெள்ளிவரைவணங்கி
யாரத்தாழ்விழிவெள்ளமகன்மருமத்திடையொழுக
வாரத்தானெழுமன்புமனங்கொண்டுமுன்னடப்பச்
சாரத்தானடந்தெய்தித்தவழ்காஞ்சிநதிபணிந்தான்........(௫)

கரைசாரமணியெறிந்துகளைத்தோடுங்காஞ்சிநதி
விரைசாருங்குளிர்புனலின்விதியுளிதோய்ந்தெழுந்தன்பா
லுரைசார்ந்தமறையவருக்கொண்பொருள்கண்மிகவார்த்தி
நிரைசார்ந்தமணிவீதிநேர்தொழுதாலயம்புக்கான்..........(௬)

சுடர்மணிக்கோபுரமிறைஞ்சித்தூவெள்ளைவிடைகிடந்த
கொடிமருங்குப்பணிந்தெழுந்துகுழைந்துருகிவலம்வந்து
கடிகமழ்பன்னீர்நிழலிற்கதித்தபெருஞ்சுவையமிழ்தை
முடிவுமுதலில்லாதமுதிர்கனியைக்கண்ணுற்றான்...........(௭)

ஆடிஞறுராதவானந்தத்துள்ளழுந்திப்
யாடினன்பலவேதம்படர்மனத்தினெழும்பரிவு
வீடினன்போலானன்விமலனுரடித்தொண்டு
கூடினன்பிரியாதகுணங்கொண்டங்கரிதகன்றான்..........(௮)

கார்கொண்டகருங்கூந்தற்கடிகொண்டதிலகநுதல்
வார்கொண்டகுவவுமுலைமரகதவல்லியையிறைஞ்சி
யார்கொண்டசடைதாழவனவரதடம்புரியுஞ்
சீர்கொண்டதம்பிரான்றிகழொளிமன்றமும்பணிந்தான்...(௯)

அற்றைநாளுணவின்றியடர்கங்குற்றுயினீத்து
மற்றைநாள்வருவிடியல்வைகறைச்செய்கடனாற்றிக்
கற்றைவார்சடைப்பெருமான்கழலிணையுள்ளகத்திருத்தி
முற்றமாதவம்புரிந்தான்முழங்குபுகழ்க்குசத்துவசன்.....(௧0)

வேறு.

அற்றமிலமரர்களாண்டோராயிர
மிற்றிடுமெல்லையிலிலைகொள்சூற்படைக்
கொற்றவன்குவிமுலைக்குமரிதன்னொடும்
பெற்றமேல்கொண்டெதிர்பிறங்கத்தோன்றினான்...(௧௧)

எழுந்தனனிருந்தவத்திருந்தமன்னவன்
விழுந்தனனடித்தலமீதுசென்னிமேற்
றெழுந்தடங்கரத்தொடுந்துதிகளார்த்தினு
னழுந்தினனானந்தமென்னுமாழியுள்................(௧௨)

வழிபடுவேந்தனைநோக்கிவார்சடைப்
பொழிகதிர்நிலவணிபுனிதவேதியர்
கழிபெருந்தவம்புரிகடனிற்சேர்த்தனை
பழிதபுவரமெதுபடர்ந்ததோதென்றார்..............(கங)

இறைவரங்கருளலுமிறைஞ்சிக்காவலன்
பொறைகொளும்புதல்வரைப்பூப்பவேட்டனன்
குறைவறுவரமிதுகொடுக்கவென்றன
னறைமறைத்தலைவர்கேட்டருளிச்செய்வரால்......(கச)

மருதமர்வரையிடைவதியும்வேற்படை
முருகனைவழிபடின்முடிகொண்மன்னவ
பெருவிறன்மைந்தனைப்பெறுவையவ்வயி
னொருவியகவலையினுவந்துசெல்கவே...............(கரு)

எந்தமைக்குறித்துநீயீங்குநோற்றலிற்
சுந்தரமகளிர்களிருவர்தோற்றுவார்
மைந்துடைப்பார்த்திவவென்றுமால்விடக்
கந்தரக்கடவுளார்கரந்துபோயினார்..................(கசு)

அருடலைக்கொண்டுசென்றரையனேங்கிய
மருதமர்சாரல்வண்மலையைச்சார்ந்தனன்
குருபரனாகியகுமரற்கன்புசெய்
திருநிலம்வியப்புறவரமங்கெய்தினன்...............(கஎ)

புதல்வனைப்பெறும்பரிசெய்தும்பூபதி
யிதமுறுபூசையும்விழாவுமேனவுஞ்
சதமகன்மருகனார்தமக்கும்பட்டியின்
வதிதருமிறைவற்குமலிவித்தானரோ...............(கஅ)

ஆதியம்புரிவளரமலநாயகர்
போதியென்றருளலும்போதிக்கானந
னீதிசெய்மன்னவனீங்கிச்சென்றுதன்
சோதிசெய்மணிநகர்துன்னிவைகினன்..............(கக)

ஒக்கலுமுலகமுமுவகைகூர்தரத்
தொக்கதெவ்வரையர்கடொளங்கித்தேசற
மக்களையுயிர்த்தனன்மகிழ்ச்சிமீக்கொளத்
தக்கபல்லறங்களுந்தழையவாக்கினன்...............(உ0)

குழவிகண்மணியுருக்கோலநோக்கியு
மழலைகள்கேட்டுங்கைமலரளாவிய
விழுமியவடிசில்கண்மிசைந்துமார்புறத்
தழுவியுமோர்ந்துந்தன்றளர்வுநீங்கினான்..............(உக)

சுரந்தவன்புடைக்குசத்துவசன்சந்ததி
வரம்பெறலிஃதொருமன்னன்குட்டநோய்
பிரிந்தமைகூறுதும்பேணிக்கேண்மினென்
றுரம்பெறுசூதனங்குறுவர்க்கோதுமால்............(உஉ)

குசத்துவசன்வரம்பெறுபடல முற்றியது.
ஆகத்திருவிருத்தம் - உ௦க௫.

௳

# குலசேகரன் குட்டநோய்தீர்ந்தபடலம்.

கருவிமாமழைமதிதொறுங்கவிந்துநீர்பொழிய
வருவிதாழ்மலைநாடுகாத்தரசினிதளிக்குஞ்
செருவில்வார்கொடிச்சேரர்தங்குலத்தில்வந்துதித்தான்
பொருவில்சீர்க்குலசேகரனெனும்பெயர்பூண்டான்..........(க)

மறங்கிடந்தொளிரொன்னலர்மணிமுடிவணக்கி
யறங்கிடந்தொளிர்மனத்தினனரசுசெய்திடுநா
ணிறங்கிடந்தொளிராக்கையினிறையெழிலழிக்குந்
திறங்கிடந்தொளிர்குட்டநோய்சிவணியதவற்கே..........(உ)

உருக்குநோயினைநோக்கினனேங்கியவரசி
னிருக்குநீரினுக்கியைவதன்றேயிஃதினை
முருக்குவாமெனமுன்னினன்மருத்துவர்க்கூவி
நெருக்குநோயினைநெருக்குவீரெனநிகழ்த்தினனால்........ (௩)

தேறுநோய்ப்பகையாளர்கடெரிந்தநூல்வழிவெவ்
வேறுலோகங்கணீற்றியும்வெய்துநெய்வடித்து
நூறுதேம்பொடியமைத்துநோன்குளிகைகள்சமைத்து
நாறுதேங்களியாக்கியுநாடொறுங்கொடுத்தார்..............(௪)

கொடுப்பதேகடன்மருந்துநோய்குமைக்குநர்க்கதுவாய்
மடுப்பதேகடன்மன்னனுக்குவன்றனக்கின்னல்
படுப்பதேகடனேய்க்கதன்பரிசினைப்பாரா
விடுப்பதேகடன்மருந்தினையென்றனர்மேலோர்...........(௫)

ஆயவேலையிலய ற்புலத்தரையர்கள்விடுத்த
நோயினுண்மைதேர் மருத்துவர் நுனித்தறிந்தியற்றுந்
தூயவான்மருந்தினத்தையுந்துகளுறப்புறங்கண்
டேயுநோய்நனிவீறியதியாவருமினைய.........................(சு)

என்னைகூறுமாறிருநிலமருந்தெனவெடுத்துச்
சொன்னயாவையுந்தொகுத்தநூன்முறையின்வாய்மடுத்தான்
கொன்னும்வான்மருந்தானும்வெவ்வேறுநோய்குனிப்ப
மன்னும்வாடினன்மருந்துவேண்டாவெனவிடுத்தான்.......(எ)

கருகிமெய்யெலாங்கறைபொழிபுண்பலவாகி
யுருகிவெண்ணிணமுகககமறவிரன்மடங்கி
யிருகைகான்முகமிருசெவிநாசியும்வீங்கி
வெருவநோக்குவார்வேற்றுருவாயினன்வேந்தன்........... (அ)

மருந்தினுலிதுமடங்குறாதாயினுமறைக
டிருந்தவோதியவறங்களாற்றீருமென்றெண்ணிப்
பொருந்துகாதலினறமெலாம்விதியுளிபுரிந்தா
னருந்தியாக்கையையழிக்குநோய்க்கழிவினைக்காணான்......(கூ)

வேறு.

அரத்தச்சடிலத்தெம்பெருமானமருந்தலங்கள்பலபோற்றி
யிரத்தச்செழும்புண்ணுடற்கீட்டியின்னல்பெருக்கும்பெருநோயைத்
துரத்திக்களிப்பாமெனக்கருதித்தொக்கபொருள்கண்மிகத்தழுவி
வரத்திற்சிறந்ததலந்தோறுமாறுவன்பிற்போய்ப்பணிந்தான்.....(க0)

பிள்ளைக்கலைவெண்மதிமுடித்தபெருமான்சரணந்தலந்தோறு
முள்ளத்தெழுந்தபேரன்பினுற்றுவணங்கிவழிபடலுந்
தள்ளற்கரியபெரும்பிணிதான்றணியாதுயராதொருநிலைமை
கொள்ளக்களித்தாண்டுகடோறுங்குழகன்றலங்கும்பிடலுற்றான்(கக)

அவ்வாறொழுகிவருநாளோராண்டுதனதுபதிதணந்து
கைவாரணத்தினுரியார்தங்காமர்தலங்கள்பலவிறைஞ்சி
யொவ்வாவரக்கனுயிர்பருகியொளிர்வாணுதலைச்சிறைமீட்ட
செவ்வாய்மையினுன்வழிபட்டசேதுவணங்கித்திரும்பினுன்....(கஉ)

செல்லுநெறியின்மகதியாழ்த்தெய்வமுனிவனெதிர்ப்படலும்
வல்லைவணங்கியெனையாளும்வரதாவடியேனுடற்கிளைத்த
வல்லற்பிணிவிட்டகலுமாறருளாயென்றானம்முனிவ
னெல்லையிரங்கிவிறல்வேந்தனுவகைகிளைப்பவுரைக்குமால்......(கங)

பண்டுபுரிந்ததீவினையாற்படர்வதாகும்பலநோயு
மண்டுமவற்றுண்மணிமனுநன் மருந்தாற்றீராப்பிணியேனு
மண்டர்பெருமானமர்தலத்தினகலுமனையதலந்தம்முட்
கண்டவுடனேபயனளிக்குங்காமர்தலமொன்றுளதாமால்........(௧௪)

அனையதலம்வண்டிசைமுரலவடர்மெல்லிதழின்முறுக்கவிழு
நனைமென்பொகுட்டம்போருகத்தினனுகோதிமத்தினிளம்பிள்ளை
கனைவெண்டரங்கந்தவழ்ந்தசைப்பக்களித்துத்துயில்கூர்தடம்பொய்கை
முனைவனருள்போற்குளிர்பெருக்குமூதூர்க்காஞ்சிப்பேரூரே....(௧௫)

வேறு.

காப்பினாலுலகத்துக்கரிசெலா
மோப்பிநேமியுருட்டுஞ்செங்கோலினா
யாப்பியிற்புழுவர்க்கமுறாதுகாண்
மாப்பெருந்தலமாமவ்வரைப்பிடை.............(௧௬)

அன்னமாநகர்மேன்மையனைத்தையு
மென்னைகூறுதலேந்தயின்மன்னவ
துன்னிநீயந்தச்சூழலுறாமுனங்
கன்னிநோய்கழிந்தோடுதல்காண்டியால்.......(௧௭)

கருத்தின்வேறுகருதலையின்னினித்
திருத்தனாதிபுரத்தினைச்சேறியென்
றருத்தியோடுமறைந்துமறைந்தன
னிருத்தன்சீர்த்திநிகழ்த்திடும்வீணையான்......(௧௮)

அற்றைநான்றடர்நோய்கழிந்தானெனப்
பெற்றவோகைபிறங்கவைவேலினா
னுற்றநாட்டையொழிந்துயர்கொங்குசேர்ந்
தெற்றுநீர்நதிக்காஞ்சியையெய்தினான்..........(௧௯)

வணங்கிக்காஞ்சிவருபுனலாடினா
னுணங்கிக்கன்மமுலக்கும்பேரூர்வயி
னணங்கினோடமரண்ணலைத்தாழ்ந்தனன்
பிணங்குநோய்பிரிந்தோடியதென்பவே........(௨௦)

தேசுமிக்கதிருவுருவாயினா
னீசன்மிக்கருளென்றாத்துஞ்செல
நேசமிக்கநெறியிலனம்மவென்
றாசைமிக்கவகத்தொடுமாடினான்...............(௨௧)

பட்டிநாயகற்கானபணிபல
முட்டிலாதமுறையினியற்றினன்
விட்டுநீங்கற்கருமைவிரவலிற்
சட்டவவ்வயிற்றங்கிவதிந்தனன் ..............(உஉ)

பத்திசெய்துபணிசெயுநாளையிற்
றொத்துடற்பொறைநீங்கத்தொன்மாமலக்
கொத்துநீங்கிக்குழகன்பதமெனு
முத்தியெய்திமுடிவிலின்பாயினன்...........(உ௩)

வேறு.

பிரியாதபிணிகெழுவிப்பேரன்பிற்சேரலன்றன்
முரியாதவீடெய்துமுறைமையினைவகுத்துரைத்தாந்
திரிலோகசோழனுறுசெயிர்தீர்ந்தபடிமொழிது
முரிதாகக்கேண்மினெனவுறுவரர்க்கோதுவன்சூதன்......(உ௪)

குலசேகரன்குட்டநோய்தீர்ந்தபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - உ0௩௧.

# திரிலோகசோழன் செயிர்தீர்ந்தபடலம்.

இருணெடும்பிழம்பெடுத்துவாய்ப்பெயவருங்காலம்
பரிதிதப்பினும்பருவந்தப்பாதுநீர்வழங்கி
முருகுவிம்மலர்ப்பண்ணைகண்முறைமுறைவிளைக்கும்
பெருகுகாவிரிநாட்டினைப்பேணுமோர்சோழன்.............(க)

மும்மைவையகத்திடரெலாமுதலொடுமுருக்கி
யம்மவிண்ணகத்தரையனும்வரிசைகளாற்றச்
செம்மைசெய்தலிற்றிரிலோகசோழனென்றொருபேர்
விம்முகாதலின்யாவரும்விளம்புவரவற்கே.................(உ)

ஒளிறுவேலவன்முறைசெயவோங்குசோணாட்டி
னளகையாளிபோலனைவரும்வெறுக்கையராகி
வளமையீட்டுவெண்பூதிசாதனநனிமருவி
வெளிறில்கேள்வியராய்ப்பெருவாழ்க்கைமேவினரால்......(௩)

சைவரேயலாற்பரமதத்தவர்தமைக்காணத்
தெய்வமேகமழ்திருத்தகுகாவிரிநாட்டின்
மெய்விராவியகல்வியர்தம்மொடுமேவி
செய்விராவியவேலினன்முறைநிகழ்த்திடுநாள்...............(௪)

செல்வமிக்கநேவாளதேயத்திடையிருந்து
கல்விகற்றகாபாலர்கள்சிலர்சென்றுகலந்தார்
வில்வமிக்கணிவிமலனூர்தலம்பலவிராவிச்
சொல்விளைத்திடுஞ்சோழநாட்டெல்லையின்மாதோ.........(ரு)

அனையசெவ்வியிற்சிவநிசியடுத்ததந்நாளின்
வினையிகந்தநல்வேதியரடியவர்பலருந்
தனைநிகர்த்திடுந்திருவிடைமருதெனுந்தலத்தின்
முனைவனின்னருட்சேவடிவணங்கமுன்னினரால்..........(சு)

ஆற்றன்மிக்கவச்சோழனுமன்புளமீர்ப்பக்
கூற்றைவென்றருள்குழகனூர்குரைகழற்பாதம்
போற்றவவ்வயிற்புக்கனனன்னதுதெரிந்து
மாற்றமிக்ககாபாலரும்வல்விரைந்தடுத்தார்.................(எ)

திருந்தினர்ச்செழுங்கொன்றையார்சேவடிவணங்கப்
பொருந்துசெவ்விபார்த்திருந்தனன்பூபதியொருபா
லிருந்தவெல்லையிலெய்துகாபாலவிப்பிரர்கள்
வருந்தலின்றியேகண்டனர்வழங்கினராசி..................(அ)

கொண்டவேடமுமன்னவர்குரூஉமணியுருவின்
மண்டுகாந்தியுமதித்தவர்மனமதித்திலனாய்க்
கண்டகாவலன்விருப்பொடுங்கையிணைகூப்பி
மிண்டுதீவினையாரையாரெனவினவினனால்.................(கூ)

கடாவுமன்னவன்கருத்தினைக்கதுமெனநோக்கி
விடாதுநம்வழிமேவுவனிவனெனவிழைந்து
தடாததீவினைபோல்பவர்தம்முளேயொருவன்
கெடாதமூப்புடையானெதிர்கிளக்குவனானான்...............(க0)

நமதுவாழ்க்கையினிருக்கைநேவாளநற்றேய
நுமதுநாட்டிடைவளமையுநுமதிரும்புகழு
மெமதுவார்செவியேறலினினிதுகாண்விருப்பிற்
சமரவேற்றடங்கையினாய்சார்ந்தனமீங்கு..................(கக)

பண்டுமாதவம்புரிந்தனைபார்த்திவவதனால்
விண்டதீவினையாளரேமேவவிவ்விடத்துக்
கண்டுகாதலையாயினைகரையுமந்தணமொன்
றுண்டுசூழ்ந்தவரொழிதரவிருந்துகேளென்றான்..........(கஉ)

அரையனேக்கமுமதற்குடன்பட்டமைநோக்கி
விரையவாங்குளாரெழுந்துவேறிடத்தொதுங்கினராற்
புரையிலீரினிப்புகல்கெனப்பூபதியணிந்தான்
வரைசெய்துன்மதத்தலைவனும்வழங்குதல்வலித்தான்.....(கங)

உலகமின்புறத்தக்ககாரியகணியோரி
னிலகுமைவிழியாரினுமிணைவிழைச்சன்றே
கலவுமற்றதுகாரியத்தன்றுகொலுயிர்கள்
பலவுமல்குதலாயினபார்த்திவபாராய்.....................(கச)

உலகமாக்குதற்கீசனென்றொருவனுண்டென்பர்
புலனிலாதவரவர்திறம்போகவையகத்துக்
கலவுமீசனைக்கண்டவர்யார்கண்ணிற்காண
நிலவுநீரதேமெய்நிலவாததுபொய்யே....................(கரு)

ஆதலாலகிலத்தினுக்கமரன்வேறில்லை
யோதுநீண்மரமரத்துடனுரிஞியபொழுதுஞ்
சோதிவான்சிலைசுடரவன்கதிர்தொடும்பொழுதுங்
காதுதீயெழுங்கலவியிற்றோன்றுவதுலகே.................(கசு)

அனையதாதலினரும்பொருளிணைவிழைச்சன்றி
வினையில்காவலவேறிலையிணைவிழைச்சினுக்குப்
புனையுமாட்சிமைதருவதுபுகல்சுராபான
மினையபானமும்பொருளெனவினிதுகைக்கோடி.........(கஎ)

தெய்வநல்லவர்பெரியவரெனச்சிலர்பேசி
யுய்யலாமெனவுரைப்பர்களவையெலாமொழிக
வையமீக்கொளுமன்னவவெனமதிமருளப்
பொய்யைமெய்யெனப்புகன்றனன்புன்மதத்தலைவன்.....(கஅ)

வேறு.

காபாலமதத்தலைவன்கடனிதுவென்றெடுத்துரைத்த
வாபாசநெறிவிரும்பியறிவழிந்துதிறல்வேந்தன்
மாபாசவலைவளைப்பமறைநெறியின்முறைநதிறம்பிச்
சீபாவியெனவறிஞர்சிந்தைசெயவொழுகினன்.................(கக)

மதுநுகர்ந்துவருணநிலைவழுக்கிமடமாதரார்
புதுநலனுண்டுயரொழுக்கம்பூண்டவரைநணியலைத்துக்
கதுவலுறுங்காபாலமதத்தவரேகனிதூங்க
விதும்கன்றகொடுங்கோன்மையியற்றினன்வையகத்தரசன்.....(உ0)

மன்னவனே முறைநிறம்பின் மன்னவனாணையினடக்குந்
துன்னியவையகமுறைமைதொடங்கிடாந்திடுமேகொல்
பொன்னிவளந்தருநாட்டுப்பொருந்தியமாந்தர்களெல்லா
மின்னவிலக்கிவைவிதியென்றிரண்டின்றியொழுகினர்..........(உக)

முட்டாதசோணாடுமுறைநிறம்புஞ்செயனோக்கி
மட்டார்ந்தமலர்க்குரிசின் மனம்வருந்தித்தீவினையி
னெட்டாதநாரதனையுறவழைத்துக்கொடுங்கோன்மை
தொட்டானைத்திரிலோகசோழனைநீதிருத்தென்றான்............(உஉ)

வீணைமுனியடிவணங்கிவிரைந்துபோய்ச்சபையடுத்துப்
பேணுபரமதத்தழுந்தும்பெருமிதமன்னவன்வணங்கா
மாணுமடத்தினைநோக்கிமணிக்கரகத்தறலள்ளிப்
பூணுறுமஞ்செழுத்தோதிப்பொருக்கெனவானனத்தெறிந்தான் (உ௩)

அஞ்செழுத்துநவின்றெறிந்தவறன்முகத்திற்படிதலொடும்
விஞ்சியதன்மதமோகம்விளிந்ததுமன்னவனெழுந்து
கஞ்சமலர்ப்பதம்பணிந்தான்கருணைவிழிநோக்கருளி
யெஞ்சலுறுத்தவமுனிவனெடுத்தளித்தான்றிருநீறு.............(உ௪)

வாழ்ந்தனனென்றங்கைகொடுவயங்குதிருவெண்ணீறு
வீழ்ந்தணிந்துவிறல்வேந்தன்விழைந்திருப்பமுனிநோக்கிச்
சூழ்ந்துமுனநீயளித்தசோணாடிப்பொழுதென்னாய்த்
தாழ்ந்ததுபார்முறைதவிர்ந்ததன்மையாலெனாவன்றான்......(உரு)

வேறு.

பார்த்துமன்னவன்பதைபதைத்துள்ளகமழிந்து
வேர்த்துமெய்யெலாமுனிவனைமீட்டெதிர்வணங்கி
யார்த்ததீவினையாளனேனடியிழையொருவிச்
சேர்த்திநன்மையென்றிரந்தனன்றுதிபலசெப்பி.........(உ௬)

திருந்துமன்னனைமுனிவரன்றிருமுகநோக்கி
வருந்தன்மேலைநற்சிதம்பரவரைப்பினையடுத்துப்
பொருந்தலார்புரம்பொடித்தவர்பூங்கழல்பணிதி
மருந்துதீவினைக்கதுவலாலிலையென்றுமறைந்தான்........(உஎ)

மகதியாழினன்மன்னனைத்திருத்தியதறிந்து
தகுதியல்லனசார்த்துந்தாபதனமக்கென்று
வுகுமனத்தொடேந்தன்மதத்தினர்களோட்டந்தார்
புகழ்செய்மன்னனுமடுத்தனன்புகாறுபேரூர்..............(உஅ)

தத்துவார்திரைக்காஞ்சியிற்றண்புனலாடிப்
பத்தியோடுயர்கோயிலிற்படர்ந்தெதிர்பணிந்து
வைத்தவேல்விழிமரகதவல்லியோடமர்ந்த
வத்தனார்தமைப்போற்றினனகன்றனபிழைகள்...........(௨௯)

சில்லநாளவணிருந்துநற்பலபணிசெய்திட்
டல்லைநேர்களத்தமலனாரருள்விடைபெற்று
நல்லகாவிரிநாட்டினைநணுகிமுன்போலச்
சொல்லுநூல்வழிநடவினன்றுகளறுசெங்கோல்.........(௩0)

ஆளுமண்ணலார்தலங்களினாற்றுதீவினையுங்
காளகண்டமாபுரமெனக்கரையிடைமருதின்
மாளுமந்நகர்வரைப்பிடையாற்றுவல்வினைதா
னீள்வதன்றியேயாங்கணுநிலையழிந்திடாதால்............(௩௧)

அன்னதாகியவிடைமருதிடையிருந்தாற்றுந்
துன்னுதீவினைத்தொடர்திரிலோகநற்சோழன்
முன்னிநீங்கினனென்றிடின்மொழிந்தபேரூரின்
மன்னுமேன்மையையாவரேவகுத்திடவல்லார்..........(௩௨)

சோழன்வல்வினைதொலைத்தமைகூறியசூதன்
வாழியண்ணலார்பார்ப்பதிதனக்குமுன்வகுத்த
தாழ்ந்துஞ்சடைபூதிகண்மணிதளிர்வில்வங்
கேழினல்லுபசாரமுங்கிளக்குவனானன்..................(௩௩)

திரிலோகசோழன்செயிர்தீர்ந்தபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ௨0௭௨.

# உபதேசப்படலம்.

வெள்ளியம்பலத்துமுன்விமலர்காட்டிய
வொள்ளியதிருநடமுளத்துநாடொறு
நள்ளுறநினைத்திடுநங்கைபார்ப்பதிக்
கெள்ளலிலையமொன்றெழுந்ததென்பவே .......(௧)

அவ்வியமுயிர்க்கறவாடல்கண்டிடுங்
கொவ்வையங்கனிநிகர்கோலவாயிதழ்
நவ்வியின்விழியுமைநங்கைநாதரைச்
செவ்வியின்வினவுமாசிந்தைசெய்தனள்........(௨)

பண்ணவர்தொழுதெழும்பட்டிநாயக
ருண்ணெகிழ்கருணையினொருதினந்தனி
லெண்ணருமகிழ்ச்சியினிருந்தசெவ்வியைத்
தண்ணியவிமவரைத்தையனோக்கினாள்..........(ந)

எழுந்தனள்வணங்கினளிறைவயாவர்க்குந்
தொழுந்தரமன்றியத்தொடர்புந்தீர்சுகத்
தழுந்துநர்க்கருளுமானந்தநாண்டவஞ்
செழுந்திருமுனிவர்க்குத்தெரித்ததென்னென்றாள்.()

குங்குமக்குவிமுலைக்குடங்கைவென்றகட்
பங்கயமலர்முகப்பாவைக்கீர்ம்புனற்
றிங்களஞ்சடைமுடித்தெய்வக்கொன்றையி
னங்கணனுத்தரமருளிச்செய்யுமால்............(ரு)

வேறு.

பத்திபெருகக்கோமுனியும்பட்டிமுனியும்படர்செந்தீ
யொத்தசடையும்வெண்ணீறுமுயர்கண்மணியுமிவைதரித்துக்
கொத்துவளர்கூவிளத்தளிர்கள்கொண்டிங்குபசாரத்தெம்மைச்
சுத்தமளிக்குமிலிங்கத்துந்தொடுத்துநெடுநாட்பூசித்தார்..........(சா)

மன்றினடிக்குமெமதுதிருவடிவினிடத்தும்பூசித்துத்
துன்றுசிறப்பின்விழாவெடுத்துத்தொழுதுவணங்கிமலமைந்தும்
வென்றுவிளங்குமுளத்தினராய்விழைந்தாரதனால்வியப்பெய்த
வன்றுநடனமவர்காணவளித்தர்மணங்கேயெனமொழிந்தான்....(எ)

பொறிவாளரவப்பூணணிந்தபுனிதர்புகன்றமொழிகேளா
மறிமானோக்கினுமைமாதுமகிழ்ந்துதலைவாவிருவோருஞ்
செறிவார்சடையாதிகடரித்துத்திகழ்கூவிளங்கொண்டுபசார
நெறியாற்பூசித்தாரென்றீரவற்றின்றிறமுநிகழ்த்துமென.........(அ)

ஆடுமரவிற்புடைபரந்தவல்குலுமையாட்குலகுய்ய
நீடுசடிலத்துயர்வுமொளிர்நீற்றினுயர்வுங்கண்மணியின்
பீடும்வளர்கூவிளத்துயர்வும்பிறங்குமுபசாரமுமுடியிற்
கோடுமதிவெண்கலைவேய்ந்தகுழகர்தெரியவுரைப்பாரால்.........(கூ)

விம்மியெழுந்துபுடைபரந்துவெண்ணித்திலமாலிகைதரித்த
கொம்மைமுலையாய்நம்முடையகோலமார்ந்தபலவுறுப்புந்
தம்முளுயர்ந்தவுறுப்பாகுந்தயங்குந்தழலொத்தொளிர்சடில
மும்மையுலகும்வியப்பெய்தமுடிமேல்விளங்குங்காட்சியான்...(க0)

அரையற்குரியவடையாளமணிந்தோர்தம்மையரையனென
விரையமதித்திட்டுபெசாரம்விளைப்பாரெவருமதுபோலப்
புரையிலெமதுசடைதரித்தபுனிதர்தம்மையாமெனவே
யுரையின்மனத்திற்காயத்தினும்பர்முதலோர்வழிபடுவார்........(கக)

வார்ந்தசடிலமொரோவொன்றுவயங்குமிலிங்கமொரோவொன்று
மார்ந்தசடிலம்யாரொருவனணிந்தானவற்காயிரமுறைமுன்
சார்ந்தபவத்தினுள்ளாருந்தனக்காயிரமாமுறைபின்னர்
நேர்ந்தபவத்தினுள்ளாருநீங்கிவினையெம்முலகடைவார்..........(கஉ)

கதிருஞ்சடிலந்தரித்தானைக்கண்டுவணங்கான்றவமெல்லா
முதிரும்பரிந்துவணங்கிறுனலப்பில்பாவியாயிடினு
முதிருந்தவத்தோடுயர்செல்வமொய்க்குமவற்கேசெழுங்கனகப்
பிதிருங்கணியினறுந்தாதும்பேதுற்றிரியுஞ்சுணங்கிறுய்........(கஙு)

சுடருஞ்சடிலந்தோய்ந்தபுனற்றுளியொன்றொருவன்மேற்றெறிப்பி
னடரும்பெரும்பேய்பூதங்களலைக்குந்துட்டதெய்வதத்தி
னிடரும்பிணியும்பாதகமுமெனைத்துமிரியுமாதலிறுற்
படருஞ்சடிலத்தவன்பச்சைப்பாவாய்நம்மின்வேறல்லன்........(கச)

புரிபொற்சடிலமுடிதரித்தபுனிதர்குலத்திற்பிறந்தோரும்
பிரமனுறுகற்பங்கள்சதம்பேணிநமதுசிவலோகம்
விரவியினிதுவாழ்வரெனின்வேணியணிந்தார்தம்பெருமை
யரவினகன்றகடிதடத்தாயளக்குந்தரமோவமரருக்கும்.........(கரு)

வேறு.

இயம்புவைதிகநீறென்றுலெளகிகபூதியென்றுப்
பயந்தருநீறிரண்டாம்பகர்ந்தவைதிகவெண்பூதி
யுயர்ந்திடுமோமகுண்டத்தொளிர்வதாமற்றைப்பூதி
வயந்தருபுனிதநல்லான்மயத்திறுறுவதாகும்..............(கசு)

தகுபுராதனியேயென்றுஞ்சத்தியோசாதையென்று
மிகலில்வைதிகவெண்பூதியிருதிறனுகுநேரே
புகழ்தகுவேதனேமகுண்டத்திற்பூப்பதொன்று
பகர்தருமறையோரோம்புமங்கியிற்படுவதொன்றும்.......(கஎ)

இலௌகிகபூதிதானுமிருதிறனுகும்பாவ
முலைவுறவாற்றுந்தீக்கையுற்றவர்க்குரியதாக
நிலைபெறநிறுவுஞ்சைவநீறென்றுந்தீக்கையின்றி
யலைவுறுமாந்தர்தங்கட்கடுத்திடுமசைவமென்றும்.........(கஅ)

### வேறு.

கற்பமனுகற்பமுபகற்பமெனமூன்று
மற்பிஞெடுசைவரணியுந்தவளநீறு
பொற்பவவைமூன்றுதிறனும்புகறல்கேளாய்
விற்புருவவேற்கண்விதுவாணுதன்மடந்தாய்........(கக)

கன்றுபயவாதகளிநாகுபுனிற்றுக்கோ
கன்றிறுதியுற்றகபிலைக்குலமலட்டான்
கன்றுதுணையின்றகறவைத்திரண்முதிர்ந்த
கன்றுறுபசுக்கருவயிற்றுவளர்பெற்றம்..............(உ0)

வார்ந்தசெவிகோடுநெடுவாலிவைகடம்மிற்
றீர்ந்தசுரபித்தொகுதிதீதுவளர்பவ்வீ
யார்ந்துவருகாலிபிணியான்றகுடஞ்சுட்டென்
றோர்ந்தவிவைநீங்கவெழிலோங்கிவளர்கற்றுன்...... (உக)

பங்குனியினெல்லரிபணைக்கணுறுதாண்மேய்ந்
தங்கவைவிடுத்தமயமட்டமியிரேழிற்
றங்குபதினைந்தின்வளர்சாதமனுவோதி
மண்டனில்விழாமுன்மரைமெல்லிலையினேற்று......(உஉ)

வழும்பொருவிவாமமனுவோதிவளர்கவ்யம்
பொழிந்ததிலகோரமதுபோற்றுபுபிசைந்து
செழும்புருடம்விண்டுதிரள்செய்துதிகழோமத்
தெழுந்தழன்மடுத்தபினெடுத்திடலீசானம்..........(உ௩)

### வேறு.

புதியவறுவைகொடுவடித்துப்புதியகடத்திற்கொளவமைத்துக்
கதிசெய்மனுக்காயத்திரியைக்கழறிப்புனிதநிலத்திருத்தி
மதுவிண்டொழுகுமலர்சாத்திமறுவிறுகிலால்வாய்ப்பெய்தல்
விதியின்றழலினிடாதுணக்கிவிளைவித்திடலுமுறையாமால்....(உச)

கனத்திற்கரியபூங்குழலாய்கற்பமுரைத்தாமனுகற்பம்
வனத்திலுணங்குமயமேடமதியிற்கொணர்ந்துபொடித்ததன்க
ணினத்திற்சிறந்தகோசலம்வார்த்தெடுத்துநவின்றமுறையானே
யனற்றிவிளைத்துக்கொளலாகுமறைதுமுபகற்பமுங்கேளாய்...(உ௫)

வளர்தீயியல்பிற்கவர்ந்துண்டவனத்துப்பொடியிலானைந்துந்
தளராதொழுக்கிமொழிந்தபடிதழல்வைத்தெடுத்துக்கொளலாகு
மளவாப்பிணியைத்தருநீலமாயுணீக்குந்தாமிரஞ்சேர்
பிளவாவிசையைத்தபுஞ்செம்மைபீதமளிக்குநல்குரவே........(உசு)

வெண்மையளவில்புண்ணியத்தைவிளைக்குமதனலதுதரிக்கும்
வண்மையுடையததுதன்னைமான்றேல்புலித்தோல்வத்திரத்தா
லொண்மைவிரல்பன்னிரண்டளவினுயரமிருநான்களவகலந்
திண்மைகொளும்வாய்வட்டமுறச்செயுமாலயத்துச்செறித்தணிவார்()

தரிக்கும்விரறர்ச்சனிகனிட்டைதணந்தமூன்றுமாமவற்றால்
வரிக்குமுறைகேளனுமிகைமத்திமையால்வாமந்தொடுத்தீர்த்துத்
தெரிக்கும்வலப்பாற்றெடுத்திடையேதிகழுங்குட்டத்தெதிரீர்த்தல்
பரிக்கும்வலத்தோட்கெதிர்முறையிற்பரிந்துதரித்தன்மரபாமால்...()

இடைமூவிரலினெருங்குறநேரிடலுமுறையாஞ்சிரநுதன்மார்
புடைசேருந்திக்கீசானமுயர்தற்புருடமகோரமனு
நடைசேர்வாமம்புகன்றணிவர்நவில்சாதத்தின்முழந்தாடோள்
படிசேர்முழங்கைமுன்கைகளம்பரந்தவெரிந்வார்செவிக்கணிவர்.(உ௯)

அறவொன்றுடனென்றணுகனனியகறல்வளைதலிடையறுதல்
பிறவுமொழியவணிநீற்றிற்பேணுமளவுநுதலுரந்தோட்
குறுமங்குலமூவிரண்டாகுமொழிந்தவுறுப்புக்கொன்றேயா
மிறுமெல்லிடையாய்திரிசூலத்தெழிலார்பூதியிடலுமாம்........(௩0)

திகழுத்தூளஞ்செய்தன்றித்திரிபுண்டரஞ்சாத்தாரெவருந்
தகுசந்திகள்செய்யாக்காலந்தன்னிற்புனனீத்தினிதணிவர்
முகிழ்மென்முலையாய்சைவர்புரிமுறைமைதெரித்தாமறைவழியிற்
பகர்வைதிகர்நீறணிகின்றபரிசுமுரைப்பாமினிக்கேண்மோ......(௩௧)

மறையோர்சிரம்வானுதன்மருமம்வாகுவிரண்டுமெவற்றெடுமண்
ணிறையோர்செகில்வார்துடைநான்குமிவற்றேடேனையோர்முழங்கை
செறிசீர்முன்கைமுழந்தாள்வெங்செவிகண்பதினென்றினுநீறு
குறையாதணிவர்செகிற்றுடையுங்கூட்டிமறையோரணிதலுமாம்..()

தக்கவகரமிருக்குவிராசதவொண்குணமான்மாவென்னத்
தொக்கபொறியாதிகள்கிரியாசத்திதுகடீர்மாதேவர்
பக்கவழல்சேர்காருகபத்தியமென்றிவற்றின்மயமாகு
மிக்கவெழிலார்புண்டரத்துள்விளங்குமுதற்புண்டரமாதோ...(௩௩)

வழங்குமுகரமெசுர்வேதம்வளர்சாத்துவிகமகமென்ன
முழங்கியிடுமான்மாவிச்சாசத்திமுடிவின்மகேசர்மிகத்
தழங்கியெழுந்தக்கிணச்செந்தீசாற்றுமிவற்றின்மயமாகும்
பழங்கணறுத்துவான்கதியிற்படுக்குமிரண்டாம்புண்டரமே.....(௩௪)

போற்றுமகரமுயர்சாமம்புகுமதமாங்குணமலநோய்
தீற்றும்பரமானமாநன்மைநிகழ்த்துஞானசத்திதகத்
தேற்றுஞ்சிவனுகவநீயஞ்செப்புமிவற்றின்மயமாகுங்
கீற்றுமதிவாணுதற்பாவாய்இளந்தமூன்றும்புண்டரமே.........(௩௫)

மறையின்வழிச்செந்தீவேட்குமறைஞர்முதலோர்மூவர்க்கு
மறைவைதிகவெண்பொடியாகுமசைவமெனமுன்மொழிந்தபொடி
பறையுமெழிலாலயத்துமடைப்பள்ளிப்பொடியுமடியர்மடத்
துறையுமடைப்பள்ளிப்பொடியுமுயர்கான்வெந்தபொடியுமாம்.(௩௬)

தீக்கைபுரியாச்சூத்திரர்க்குச்சிறப்பதாகுமடைப்பள்ளி
யாக்கும்பொடிகான்வெந்தபொடியடுப்பதாகுஞ்சாங்கரர்க்குத்
தீக்குச்சுரர்க்குக்குரவருக்குத்திருமுன்வழியிற்சுத்தியில்லாப்
பார்க்குளிழிஞரெதிரிடத்தும்பாவாய்தரித்தலிழுக்காகும்.......(௩௭)

ஒருகையேற்றபொடிவிதியினுஞற்றுநீறுவிலைப்பூதி
யருள்செய்தீக்கையிலர்போதந்தளித்தபூதியிவையாகா
தரையின்விழுத்நலங்காத்தறலைகம்பித்தல்கவிழ்தன்முதல்
வரைசெய்பலவுமொழித்திடுவர்மாதேபூதிதரித்திடுங்கால்......(௩௮)

பரவுமறையோருத்தூளம்படிவமுழுதுநாபியின்மே
லரசர்வணிகர்பட்டம்போலணிவர்சதுர்த்தரெழுத்தாக
விரல்களொருமூன்றுறவணிவர்விபூதியணியாதறமாதி
புரவுவளர்நல்வினையொன்றும்போற்றார்பனுவல்போற்றுவார்.(௩௯)

ஏதமகற்றுந்திருநீற்றினியற்கையறிந்துதரியாதார்
வேதநவின்றநெறிநின்றும்விலகும்பதிதராய்விடுவர்
பூதியணியார்முகம்புறங்காடதனைநோக்கிற்புரைதீர்ந்தோர்
தீதுகழியவொருநூறுதிகழஞ்செழுத்தைக்கணித்திடுவார்.......(௪0)

நீறுதரியார்தவமாதிநிரம்பச்செயினுமுவர்வித்திற்
கூறுபயனின்றும்பூதிகொண்டோர்வாளாங்கிருந்திடினும்
வீறுதவமாதிகணிரம்பவிளைத்தோராவர்தென்புலத்தார்க்
கேறுதினத்தினீறிடுவார்க்கியற்றிற்பூசைப்பயனனந்தம் ........(௪௧)

நீடலுறுந்தீவினையனைத்துநீற்றிவிடலானீறென்றும்
வீடில்வெறுக்கைதருதலினால்விபூதியென்றுமுயிர்தோறுங்
கூடுமலமாசினைக்கழுவுங்குணத்தாற்சாரமென்றுமட
மோடவளர்சோதியைத்தரலாற்பசிதமென்றுமுரைப்பாரால்...(௪௨)

அலகைபூதம்வேதாளமடர்மந்திரத்தானலைப்புறுத்தும்
பலதெய்வதங்களிடரச்சம்பழிபாவங்கண்மடமென்னுங்
கலதிமுழுதுமெளிதகற்றிக்காப்புக்கொளலாற்காப்புமா
நிலைவைப்பிடத்தினதன்பெருமைநிகழ்த்தலரிதாமடமாதே......(சங)

வேறு.

முப்புரத்தவர்முருக்கலின்முரிந்திரிந்தமரர்
செப்புதற்கரிதாகியதவஞ்செயச்சென்றங்
கப்பதத்திமையாதுநாநோக்கினமாக
மைப்பெருங்கணும்முக்கணும்வார்புனறுளித்த.......(சச)

வலக்கணீரிடைப்பன்னிருமரமிடப்பாற்கட்
சலத்தினேழிருமரந்தழல்விழியினீர்தோய்ந்த
நிலத்தினையிருமரமுமாயினநிகழ்த்தியவிக்
குலத்துக்கியாவருங்கூறுபேருருத்திரவக்கம்.......(சரு)

வெண்மையுந்திகழ்பொன்மையும்வெண்மைபொன்மையுஞ்சேர்
வண்மையுங்கருமையுமெனவகுத்தநானிறத்து
முண்மையக்கமாமணிகளவ்வுரைத்தனமுறையே
தண்மையந்தணர்முதலியநால்வர்க்குஞ்சாரும்......(சசா)

ஒருமுகஞ்சிவன்வடிவுவேதியர்கொலையொழிக்கு
மிருமுக்ஞ்சிவன்சத்தியென்றிருவர்தம்வடிவாம்
பெருகரும்பசுக்கொலையினைப்பெயர்க்குமும்முகஞ்சீர்
மருவுமங்கியின்வடிவுமாதர்கள்கொலைமாற்றும்......(சஎ)

நான்முகத்ததுநான்முகனரர்கொலைதொலைக்கும்
தேன்முகத்தலர்பனிமலர்க்கூந்தலாய்திகழை
வான்முகத்ததுகாலவங்கிப்பெயர்வரதன்
கான்முகத்ததீங்குணவிஞங்கரிசெலாங்கழிக்கும்....(சஅ)

மூன்றிரட்டியமுகமறுமுகனுருவலக்கை
யென்றணிந்திடின்மறைஞரையிறுத்திடவெதிரே
தோன்றுருத்தனைத்துமிக்குமேழ்முகஞ்சுடர்சேட
னுன்றபல்பசுக்கொலைதபநியக்களவகற்றும்..........(சகூ)

எட்டுமாமுகமேரம்பனுருக்குருதாரந்
தொட்டபாதகந்தொகுபலதானங்களேற்று
முட்டுபாதகம்பிறர்தமோதனமுகந்துண்டு
விட்டபாதகமனைத்தையுங்கதுமெனவீழ்த்தும்........(ரு0)

ஒன்பதாகியமுகம்வயிரவனுருக்கணதி
வன்பதாகியவாளராத்தீங்குகண்மாற்றித்
துன்பதாகியதொடரறுவெறுக்கைகடுறுத்திட்
டின்பதாகியமுத்தியுமெண்மையினளிக்கும்.........(ருக)

ஒருபதாகியமுகம்புவியுண்டவனுருவ
மருவுநாளொடுகோள்பலமண்ணைபூதங்கள்
பிரமராக்கதமுதலியபேதுறப்புரியும்
விரவுதீங்கெலாம்வெயில்படுபனியெனவிளிக்கும்...(ருஉ)

ஐந்தனோடிருமூன்றனைத்தலைப்பெயானனந்தான்
பந்தநீங்குருத்திரர்பதினொருவர்தம்படிவ
முந்துமாயிரமேதமொண்பசுக்களோரிலக்க
முந்துவானிதியுடனளித்திடும்பயன்முகிழ்க்கும்....(ருந)

ஆறிரட்டியதிருமுகமாறிருவெய்யோர்
வீறுமெய்யுருவாம்பரிமேதத்தின்பயனு
மேறுமிக்கொளிமேருதானத்தெழுபயனு
மூறுமஞ்சனந்தீட்டியவோடரிக்கண்ணாய்............(ருச)

கந்தன்மெய்பதின்மூன்றுவான்முகங்கலந்ததுதான்
சிந்தைவேட்டவுஞ்செம்பொனும்வீரமுஞ்செறிக்குந்
தந்தைதாய்மனைதனயரைத்துணைவரைக்கருவை
யந்தமெய்துறவடர்த்தவெங்கொலைகளுமனுக்கும்...(ருரு)

ஏழிரட்டியமுகமெமதுருவுநின்னுருவுந்
தாழிருங்குழலாய்சுரர்தாபதர்முதலோர்
சூழநல்வசியந்தனைத்துகளறத்துறுத்து
வாழிநம்பெருஞ்சிவபுரவரைப்பிடையுறுத்தும்......(ருசா)

அன்னவேழிருமுகமரிதாமதுகிடைத்தான்
மன்னவார்களத்தணிவதுமந்திரமுழுது
நன்னர்வாய்மையிற்பலிக்குநானிலநெளிபடையிற்
றுன்னுமேவலர்புறந்தரும்விறன்மிகத்தோன்றும்... (ருஎ)

சந்திசெய்யினுமந்திரங்கணிப்பினுந்தவங்க
ளைந்தநல்வினையியற்றினுங்கண்மணியணிந்தோர்க்
கந்தநல்வினைப்பயன்களொன்றனந்தமாய்விளையும்
வந்திடும்பயனில்லையம்மணிதரியார்க்கே...........(ருஅ)

இழிஞராகமற்றவர்களேத்திழைநலாராகக்
கழிகளுஞன்முதல்கழிந்துணுமாந்தர்களாக
மொழியும்வான்மணிமுடிமிசைதரித்தனராயி
னழியுநீள்வினையந்தியினமதுருப்பெறுவார்........(௫௯)

வேறு.

சிகையிலொருபாணிமுடியிலிருபதுசெழுங்களமெண்ணான்குமார்பிற்
றகைபெறவைம்பதுகரத்தினீரெட்டுமணிபந்தந்தனிலீராறு
முகமுகமுஞ்செறியவிடைமுடிந்துமேருவுமமைத்துமுறையிற்கொள்வார்
புகலமனுவடநூற்றெட்டதிற்பாதிபாதமுமாம்பூங்கொம்பன்னாய்......(௬௦)

வடநடக்கிலனுமிசையின்மந்திமையிற்றர்ச்சனியின்மலிநோய்பாறும், படர்சினத்தெவ்வர்களிறப்பர்பரபோகவீடெய்தும்பசும்பொற்பாவா, யுடல்வெறுத்தார்மேன்மறிப்பர்கீழ்மறிப்பர் நெடும்போகமுறுதல்வேட்டோர், கடவுண்மணியொலியாமற்பிறர்விழிக்குப்படாமன்மனுக்கணிப்பதாகும்..()

மேருவினைத்தொடுத்துமனுக்கணித்திடுவர்வடமறிந்துவிரன்மேன்மீட்டு
மேருவுறுங்காலதனைக்கடவாதுவடந்திருப்பல்விதியாநன்மை
கூருமணிவடந்தவறிநிலம்வீழ்தன்முதலானகுற்றங்கட்குச்
சேருநமதுருவினுக்குச்செயுங்கழுவாயதற்பாதிசெய்வர்தங்கோர்......(௬௨)

விரலிறைபுத்திரசீவஞ்சங்குமணிபடிகமணிவிளங்குமுத்து, மரைமணி பொன்மணிகுசையின்வண்முடிகண்மணியென்னவகுத்தவெல்லாம், பரவுமனுக்கணிப்பதற்காமுறையேயொன் றனுக்கொன்றுபயன்மிக்காகுங், குரவமலிநறுங்குழலாயாதலினற்கண்மணியேகொள்வர்சான்றோர்.......(௬௩)

மனையினுறும்பயன்டசுக்கோட்டத்தொருபதாநதியின்மருங்குநூறாந், தனைநிகராலயத்தொராயிரம்வனத்திலிலக்கம்வரைதன்னிற்கோடி, நனையொழுகுமலர்த்தொடையாய் நமதுதிருமுன்னிடத்தினவிலவொண்ணா, தனையமணிவடமெடுத்துமுறையுளிமந்திரங்கணிப்போர்க்ககிலத்தம்மா....()

முத்திநெறிக்கையைந்துமணிமூவொன்பான்மணிசோபனத்துக்கின்ப
மெத்துநிதிக்கொருமுப்பான்மணியபிசாரந்தனக்குவிளம்புமைவைந்
தித்திறத்தின்வெவ்வேறுவடமியற்றுவாரறிந்தோரிலங்குவேற்கட்
பைத்தமணியரவல்குற்பைந்தொடிக்கைத்தரளநகைப்பவளவாயாய்..(௬௫)

கண்மணியைக்கண்டவர்க்குப்பயனிலக்கந்தொட்டவர்க்குக்கருதிற்கோடி, யுண்மையின்மெய்யணிந்தவருக்கொராயிரமாங்கோடியுறுசெபத்தனந்த, மெண்மையினெய்துறும்பின்னரெமதுருவம்பெறுவர்பகைக்கென்றுந் தாழார், வண்மையுறு மதன்பெருமை யளப்பரிதாங்குழைகிழிக்குமழைக்கண்மாதே..............(௬௬)

## வேறு.

திரைதவழ்பாற்கடறேவர்யாவரு
நுரையெழுக்கடைந்தநாணுவனறவில்வமும்
விரைகமழ்துளவமுமவிளங்கத்தோனறலி
ணுரைசெயுமவைநமக்குவப்புச்செய்வன.. . (சுஎ)

துளவினிற்சிறந்ததுதூயகூவிளந்
தளிரறமுதிர்ந்ததுசருகதாயினும்
வளரிலையிரண்டொனறுமரீஇயதாயினும்
விளரியங்கிளவியாய்விலக்குறுததே..... ...... (சுஅ)

வையகத்துயிர்க்கெலாம்வளமைநல்குறுஞ்
செய்யவட்கவ்வதிகாரஞ்சேர்த்தலி
னெய்யணிகருங்குழனிமலையனனதிற்
பொய்யறுபூமகள்பொருந்திவாழுமே..... ......(சுகூ)

நோயறவேண்டினுநோன்மைவேண்டினு
மாயிரும்புவியடிவணங்கவேண்டினுந்
தூயவிண்வேண்டினுந்துறுத்துமுமமல
மோயநன்முத்தியையுதவுமவில்வமே .. . (எ0)

எட்டனைத்தலைப்பெயிரைமபதோதியு
மொட்டியவாயிரம்பெயர்களோதியு
பெட்டெமதடிமலர்ப்பெய்புநற்பயன்
மட்டவிழ்தொங்கலாய்வகுக்கொணுததே (எக)

## வேறு.

எவ்வளவுநமைப்பூசையியற்றிடினுமிருநிலத்தி
னவ்வளவுமுபசாரமாமதற்கோரளவில்லை
கொவ்வைநறுங்கனியிதழாய்கூறியவவ்வுபசாரஞ்
செவ்விபெறவடியார்கள்செயுமுறையிற்சிறிதுரைப்பாம். ... (எ௨)

காலையுறுங்கடன்முடித்துக்கமழ்மலராதிகள்கொணர்ந்து
சீலமுறப்புனறோய்ந்துதிகழ்சந்தியினிதியற்றிக்
கோலமுறுமிடஞ்சுத்திகொளச்செய்துபரிதியினுஞ்
சாலவெமைப்பேரன்புதழைதரப்பூசனைசெய்து ... ............(எ௩)

ஐவகைச்சுத்தியுமுறையாலமைத்திலிங்கத்தாசனமு
மொய்வளர்மூர்த்தியுமூர்த்திமானுமெம்மையுநினைந்து
கைவளர்பூவானிறைத்துக்கமழ்ந்தவருக்கியநல்கி
யுய்வகையிங்கிருவென்னவுளநெகிழவெமைவேண்டி.........(எச)

மஞ்சனசாலையினேகமணிவளர்பாதுகையாக
வஞ்சிறைவண்டினமுசாவலரிருகாலருச்சித்துத்
துஞ்சுவிரைப்புகையொளிபுஞ்சுழற்றிநறும்பாத்தியமுந்
தஞ்சமறுமாசமனவருக்கியமுந்தகக்கொடுத்து...............(எரு)

வேறு.

வரைத்துரையெண்ணெய்நெல்லிமாமஞ்சள்பஞ்சகவ்யம்
விரைத்தபாறயிர்நெய்செந்தேனவேழமைந்தமிழ்தம்வேறே
யுரைத்தவைந்தமிர்தம்வாழையாதியொண்கனிநீர்தாழை
யரைத்திடும்வில்லமாரமருக்கியமனைத்துமாட்டி ...............(எசு)

புலர்த்திமெய்யீரநாண்கோவணம்பொழிகதிர்ப்பட்டார
நலத்தகவுரிஞுதேய்வைநகைமணிக்கலனகள்வாச
மலர்த்தொடைபலவுஞ்சாத்திவளரறுசுவைநாலுண்டி
முலைத்தலைப்பூணுயுட்டிமுதிர்சுவைநறுநீர்நல்கி....... .......(எஎ)

பாத்தியமாதியீந்துபக்ர்பஞ்சவாசமுய்த்துத்
தூத்தகுவதனநீவச்சுடரிழைத்தூசுநீட்டி
வாய்த்தொளிர்திபபேதமனைததும்வட்டித்துநீறு
சரத்திமுனனுடிகாட்டித்தண்குடைகவிததுமேலால். .........(எஅ)

வார்தருகவரிகொண்டுமருங்குறவலைத்துமெல்ல
வேர்தருகால்செய்வட்டத்தினிதுறவீசிமேலாஞ்
சீர்தருமெழுத்தைந்தெண்ணிச்செறிபொருளுடலோடாகி
கார்தருகுழலாய்நந்தங்கையிடைக்கொடுத்துப்போற்றல்.. ..(எகூ)

மொழிந்தவீதுபசாரத்தினமுறையிதுவன்றியானெய்
பொழிந்தொளிர்தீபமேற்றல்புகழுமைம்புகையுமார்த்த
வழிந்திடுபணியுமற்றுமவிர்தரப்புதுக்கல்பாவ
மொழிந்திடுமவிழாவெடுத்தலாதியுபசாரந்தான்............(அ0)

இத்தகுமுபசாரத்தையியற்றினோர்க்கிடர்களில்லை
யுத்தமரவர்கட்கெய்தாப்பொருள்களுமுலகத்தில்லை
சுத்தவொண்புவனத்தெய்திச்சுகப்பெருங்கடலிற்ருழ்ந்து
முத்தியுமெளிதிற்சேர்வர்முகிழ்ந்தபூண்முலைப்பொற்பாவாய்...()

ஈண்டுநாமுரைத்தவெல்லாமெழில்வளர்தீக்கையில்லார்
வேண்டினுமவர்கட்கோதார்விழுத்தகுநெறியினின்ருர்
காண்டியாலென்ருர்சூலகைகையினர்கெளரிவல்லே
நீண்டமெய்மகிழ்ச்சிதுள்ளநிமலரைவணங்கிவாழ்ந்தாள்... (அஉ)

என்றருள்கொழிக்குமபட்டியிறைவனுருமையாட்கனறு
நனறுறமொழிந்தவேணியாதியினனமைகூறித்
துனறியவேணிமோலித்துறவாக்குநீற்றுமேட்டி
ஞெனறுறுநீறறினமேனமையுரைக்குவனுயர்ந்தசூதன் (௮௩)

உபதேசப்படல முற்றியது

ஆகத்திருவிருத்தம் - உ௧௫௫.

௨

# திருநீற்றுமேட்டுப்படலம்.

செந்தமிழ்விளங்கியதெய்வநாட்டிடைச்
சநதனமால்வரைத்தங்குமாதவன
சுந்தரககமண்டலஞ்சுரககுநதாமிர
வுந்தியினமருஙகொருநகரமுணடரோ (௧)

தேக்கியமதுபபொழில்செறிகசேந்திர
மோக்கமெனறியாவருமொழியுமந்நகர்
காககுநறபாண்டியனகருதலாாதமைத்
தாககியதானமிகனெனனுநாமததான. ...(௨)

கருமமுந்தானமுங்கரிசுதீர்சிவ
தருமமுமபுரிவதிற்றுண்மிகக்கைசிஞென
பொருமுறுபாவத்திற்பொருள்கொடாமையி
ஞெருவியகீாத்தியினுளளமவைத்திலான .. .(௩)

அத்தகுதானமிகற்கமைந்தகற்பினுள்
கொத்தொளிவிரிதருஙகொடிமினபோறலால்
வித்துருலதையெனவிளமபுநாமத்தாண்
முத்தமிழ்க்கல்வியுமுற்றக்கற்றுளாள் ... (௪)

அழகினிற்கல்வியினுருமொப்பிலா
மழலையங்கிளவியாணமதுரச்செந்தமிழ்
பழகியமாதர்கள்பலாதற்சூழதரக்
கழகமுள்ளவர்கள்கைவிதிர்பபவைகுவாள்.... (௫)

புறநகர்க்குழாத்தொமெ்போந்துமெனமலர்
நறவுகுபொழில்விளையாட்டினண்ணியும்
வெறிகமழ்வருபுனல்விழைவுற்றாடியு
முறுமகிழ்பண்ணையுமுஞற்றிச்செல்லுவாள்....(௬)

இன்னணமிவள் பயின்றிருக்குநாள்வயிற்
ரொன்னவில் கொங்கணதேயத்துள்ளவன்
மன்னியநான்மறைமுழுதும்வல்லவன்
முன்னுநல்வினைபுரிந்தொழுகொரந்தணன்......(௭)

வேறு.

திகழுமெவ்வளனும்படைத்துயர்மகாராட்டிரமெனுந்தேயநன்றூருந்
தகுபிரதாபமகுடனென்றரையனறமழைத்தெழுபெரும்புகழுடையா
னகுகதிர்மணிப்பூந்திரைதவழகங்கைநதிக்கரையிடைத்துலாபார
மகனிலம்வியபபத்தூங்குவானசென்றனனுதெரிந்தாவயினடைந்தான்....(அ)

மறைநெறிமொழிகண்மழையெனச்சொரிந்துமாசறச்சோதனைகொடுத்தா
குறைவறுதவத்தானிவனெனக்கருதிக்கோமகன்றூங்கியதுலாத்தி [ன்
னிறைதருபொருள்களனைத்தையுமளிபபநிகழ்ந்தபெருவகையினேற்றுப்
பறைதருதனதுபதிவயிற்புகுதப்படருவானின்னதுநினைந்தான்............(௯)

உயர்முதல்வருணமுதித்ததும்வேதமொழுக்கொடுபயின்றுதெள்ளியதுஞ்
செயிருறுவினையிற்றீர்ந்துநற்கதியிற்சேர்வதற்கேதுவாக்காது
மயர்தருபாவம்வளர்ந்தருநரகினமறிதரத்தானமிக்கேற்றிங்
கயர்வதற்கேதுவாக்கினனகற்றவறிவும்வந்துதவியதினறே..............(௧0)

புரிந்ததீவினையைப்போக்குதற்கானபுரையறுவழிக்கொளலன்றி
விரிந்திடுந்துயரமுழப்பதிற்பயனென்மேவுமிப்பொருளெலாமறத்திற்
சொரிந்துவார்ந்தொழுகுந்தாமிரபருணித்தூயநீரதனிடைவினைக
ளிரிந்தறப்படிநெமெனமதித்தூர்புக்கில்லவனொடும்வெளிப்பட்டான்....()

நெடிபடுகொனும்வரைகளுமுரமபுநிரம்பியபழுவமுமபவளக்
கொடிவளர்புணரிமணிகொணர்ந்தெறியுங்குளிர்தருகானலுங்கடந்து
முடிகுலைத்தள்ளன்முலைத்தலைப்பொறிப்பமுறைமுறைகடைசியர்பதிக்குங்
கடிமலர்க்கழனிக்கன்னிநாடெய்திக்கசேந்திரமோக்கஞ்சென்றடுத்தான்.()

ஆங்கொருமருங்குதாமிரபருணியணிமணித்துறையின்வானளவு
மோங்கியவரசினீழலினசைந்திட்டுயங்கியசெல்லல்கண்முழுது
நீங்குறுபொழுதேயிறுதிவந்தடுப்பநீங்கினனுடலினைவிடுத்துப்
பாங்குறுமந்தப்போதியேயிடமாய்ப்பயின்றனனரக்கனுமாதோ...... (௧௩)

வேறு.

கணவனின்னுயிர்விடுத்தலுங்கையற்றுமனைவி
யுணர்வழிந்தழுதிரங்கிப்பினெண்பொருணம்மைத்
தணவுறும்பிறர்வெவ்வுவரெனவதுதன்னைப்
பிணரரைச்செழும்போதியின்பொந்திலுட்பெய்தான்...(௧௪)

பொருண்மறைத்தபூங்கொடியனாள்புல்லியகொழுந
னுருவைவெந்தழனமடுத்தனனொருதினமுழுது
மருவிகண்கொளவழுதழுதிரங்கிமாழாந்திட்
டிருநிலம்விழுந்திறந்தனள்வழிவருநாளால்............. (கரு)

கனகங்காத்துயரரசினிற்கடுந்துயருழந்து
பனவனாகியவரக்கனினறனனபடர்தவத்தீர்
வினையினீங்குறலூக்கினும்விழுத்தவமில்லார்க்
கனையதாகுமோவாகுருதரும்பொருளிருந்தும்...........(கசு)

பெரிதுமோங்கியவத்தருபிடபிலநிழலிற்
றெரியவோதியவித்துருலதையெனுந்தெரிவை
விரியும்வாரபுனல்விழுநதிதோய்தரவிழைவுற்
றுரியவாயமுந்தானுமுற்றவணடுத்திருந்தாள்...... . .. ..(கஎ)

இருக்குமெல்லையின்மரஞ்சிலையெனுமிவைதமையு
முருக்குமின்னிசையாழ்தழீஇயுளர்ந்துபாடினளாற்
றருக்கினவைகியதனமையுங்கவினுமாடகவக
டிருக்கியாழெழூஉந்திறத்தையுநோக்கினனரக்கன.... (கஅ)

மாதுமற்றிவள்போல்பவர்வையகத்தில்லை
கோதைமல்கியகுழலிபக்குறுகுதுமெனாப்
போதியினகுளிர்கொமபினைப்பொருக்கெனவிடுததுச்
சோதிமல்குபெண்கொம்பினைத்துனனினனரக்கன......(ககூ)

பாடுமாடகத்திவவியாழ்பாணியின்வழுக்கி
மாடுவீழ்தரவளரிளங்கொடிமறிந்தாயகு
நீடுவார்குழல்வித்துருலதைவியனிலமேற்
பீடுசோர்தரவிழுந்தனள்பெயர்ந்தனளுணர்வு .. .. ..(உ0)

மருண்டுநோக்கினள்பிதற்றினண்மருங்குளார்வினவத்
தெருண்டுமாற்றமொனறியம்பிலடிகழ்நிறங்கருகி
வெருண்டுநோக்குவார்விதுப்புறவேறுபட்டனள்வார்
சுருண்டபூங்குழலலையமெய்துளங்கினாள்பெரிதும்.......(உக)

புடையுளார்பொருக்கெனச்சிவிகையிற்கொடுபோந்தா
ரடையலார்க்குருமேறனதான்மிகவரைய
னடையின்மாமயில்வென்றவிந்நங்கைதான்பிணியை
யுடையளாவளோவெனப்பெருந்துயருளத்துழந்தான்..(உஉ)

பிரமராக்கதன்பிடித்தனனெனச்சிலர்பேச
விரவிடாகினிமோகினிபூதவேதாளம்
பரவுபேய்முதலானவற்றியல்பெலாம்பயின்ற
கரவிலார்தமையழைத்தனனகாவலன்கடிப்பின்........(உ௩)

வல்லவாறெலாமந்திரத்தலைவர்கண்முயன்று
மல்லனீங்கிலளாதுகண்டுதானமிகனிந்த
வில்லினமாதுபோல்வேறுமோரில்லெமக்குறுங்கொல்
செல்லறீர்ந்திலதென்செய்கேனெனத்தெருமந்தான..(உ௪)

அடியரின்னலையரக்குதற்கெளிவருங்கருணை
குடிகொணுரதனகுறைவறநல்வினைவளர்க்கு
முடிகொள்வேந்தனுககிரங்கிமுனனடுத்தனன்வேந்தன்
படியின்மாதவன்பதமலர்பணிந்தனனபண்பால் ......(உ௫)

அம்மைநல்வினைசாலவுமாற்றினையன்றி
யிம்மைநல்வினையெதிரறவீட்டினையினையை
மம்மரின்னலினமறுகுவதடாதெனமணிவேற்
செம்மல்வந்தனமெனமுனிசெயிர்தபக்கூறும்.........(உ௬)

மறைகள்பல்கலைமுழுவதுந்தெள்ளியமறைஞ
னறையுமந்திரமுழுவதுங்கணித்துயரறிஞ
னிறைபுமொண்பொருணிகழ்த்தியதானத்தினேற்றுப்
பொறையிருந்தனுநீந்தவன்புல்லியவரக்கன்...........(உ௭)

ஆதலாலவன்மந்திரமாதிகட்ககலான
பாதிமாதொடுமிரசதமன்றினிற்பரதஞ்
சோதிநாயகனசுரர்தொழக்குயிற்றுபேரூரின்
வேதன்யாகஞ்செய்விழுத்தகுகுண்டமொன்றுளதால்..(உ௮)

அண்ணலார்திருவருளினுனீறதில்வளரு
நண்ணுநீற்றினைத்தரித்தவர்வினையெலாநசிக்கு
முன்மையீதுநீயொண்டொடிமனைவியைப்போதந்
தெண்மைதீரநதிக்காஞ்சியினிருமபுனலமுத்தி.........(உ௯)

பிரமதீர்த்தமும்பெய்வளையுருவினிற்பெய்து
வரநிலாவுமந்நீற்றினைவடிவெலாந்திமிர்தி
விரவுதீவினையரக்கன்விட்டகலுமென்றுரைத்துச்
சுரர்கள்போற்றுறுநாரதத்தொன்முனிமறைந்தான்.....(௩0)

## திருநீற்றுமேட்டுப்படலம்.

உரைத்தமாதவனெண்கழலுவந்தெதிர்வணங்கி
விரைத்தபூந்தொடைவேம்பிணையாக்கியவேந்த
னரைத்தசாந்தணியருப்பிளங்கொங்கைமாதினைக்கொண்
டிரைத்துராவியகடற்படையொடுமினிதெழுந்தான்....(௩௧)

பழனமல்கியகன்னிநாடெனும்பதிதணந்து
மழலைவண்டினமுல்லையின்மதுவுணுங்கானுங்
குழவிவெண்மதிதவழ்தருகுன்றமுங்கடந்து
விழவுமல்கியவாதியம்புரத்தைமேவினனால்.............(௩௨)

அந்தணர்க்கரும்பொருள்பலவார்த்தினன்காஞ்சி
யுந்தியம்புனலுறுமுறையுவகையிற்படிந்தான்
சுந்தரந்தவிர்ந்திருந்ததன்றுணைவியைத்தோய்த்தா
னந்துகுண்டிகைத்தீர்த்தமுநங்கைக்காட்டினனால்......(௩௩)

நீற்றுமேட்டினையடுத்தொளிர்நீற்றினையள்ளிப்
போற்றுகாஞ்சியம்புனல்கமண்டலப்புனல்பொழிந்திட்
டாற்றன்மன்னவனங்கையிற்குழைத்துமென்றேற
லூற்றுபூங்குழலாளுடன்முழுதும்பூசினனால்...........(௩௪)

நீறுபூசலுநேரிழைமாதுடனின்றும்
பாறியாங்கொருபாறையிற்படீரெனவிழுந்து
கீறிநீண்முடிகெழுமியபிரமராக்கதனான
கூறுதீவினையுடலினைக்கொம்மெனவிடுத்தான்.........(௩௫)

விடுத்தவவ்வயின்விண்ணவனாயினன்விமான
மடுத்ததன்னதினேறினனரசனைநோக்கித்
தொடுத்ததீவினையேனையுந்தூயனாக்கினையென்
றெடுத்துநன்னயமியம்பினனெய்தினன்றுறக்கம்......(௩௬)

மம்மர்நீங்கிமுன்போலுணர்வெய்தினண்மாது
செம்மன்மன்னவனோக்கினன்சிந்தையிற்களித்தான்
வம்மெனறன்னவடனைக்கொடுமறுவலுங்காஞ்சி
விம்மிரும்புனல்படிவித்தான்விதியுளிமாதோ.........(௩௭)

பத்துக்கோடியொண்பொருளிலக்கம்பசுநூற்றுப்
பத்துக்காமருபரிகரிநூறுபல்கலனும்
பத்திக்கேயெளிவரும்பட்டிநாதர்க்குக்கொடுத்துப்
பத்தர்க்காம்பொருள்பண்பொடுபலவும்வீசினனால்...(௩௮)

வணங்கினாதரைவிடைகொண்டுவல்வினைதீர்ந்த
வணங்கினோடகன்கழனிசூழ்கன்னிநாடடுத்து
நிணங்கொள்வேலவனெடிதுவாழ்ந்திருந்தனனென்ப
பிணங்குறுதநூன்முறையுளியறமெலாம்பெருக்கி.......(௩௯)

பரவுநீற்றுமேட்டொளிர்பொடிபரித்தவர்தமக்குப்
பிரமராக்கதமேயன்றுபெயர்வதுமலடும்
விரவுநோயும்வெவ்விடருந்தீவினையுமேவுவன
வரநிலாவுபல்பொருள்களும்வானமும்வீடும்.............(௪௦)

துறந்தமாதவத்தீர்திருமேட்டினிற்சுடருஞ்
சிறந்தபூதியின்மேன்மையைச்செப்பினமிப்பா
லறந்தவாதவராற்றுறும்விசேடபூசனையு
முறந்துகேண்மினென்றுரைத்திடுஞ்சூதமாதவனே.....(௪௧)

திருநீற்றுமேட்டுப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - உ௧௬௬.

உ

# விசேடபூசைப்படலம்.

சித்திரைத்திங்களிற்சேர்ந்தசித்திரை
யொத்தபூரணையினாரரவத்தொங்கலி
னத்தனுக்கெண்ணெயாதிகண்மிக்காட்டிநற்
பத்தியினணியெலாம்பரிந்தணிந்தரோ.................(௧)

பல்வகையன்னமும்பல்சிற்றுண்டியும்
பல்வகைக்கனிகளும்பண்பினூட்டுவோர்க்
கல்வளர்வினையெலாமனுங்குமேதக
நல்வினைப்பயனெலாநணுகுமென்பவே...............(௨)

வேறு.

இடபமதியிற்பூரணையினியைந்தவிசாகத்திருநாளிற்
கடிமிக்குயிர்க்குமுப்பழமுங்கனிவிஞெட்டியாவின்பா
லுடன்வெந்தெடுத்தநறுமாங்காயூட்டியிறைவன்பதந்தொழுவோ
ரடல்வல்வினைகள்புறங்கொடுப்பவமலனுலகத்தினிதமர்வார்............(௩)

நறுநீர்சுற்றினுறத்தேக்கிநாற்கான்மணிப்பொன்மண்டபத்தி
னுறுகாதலினுற்பெருவளங்களுறுத்தியிறைவன்றனையிருத்திப்
பெறுநீர்மையினுல்வசந்தவிழாப்பேசுமிடபமதியெடுத்தோர்க்
கிறுநோய்பலவும்பேரின்பமெய்தும்போகமிடையடுத்தே.................(௪)

மிதுனமதியிற்பூரணையின்விரவுங்கேட்டைத்திருநாளிற்
புதியமணிமண்டபம்வட்டமாகப்பொலிவித்ததின்முக்கட்
பதியையிருவிப்பலபழமும்பாங்கினூட்டிநிவேதிப்போர்
கதிர்செய்மௌலிக்கடவுளர்கள்கழல்கைகூப்புங்கதியடைவார்..........(ரு)

உரைத்தவானித்திங்களினுத்திரத்தினுமையாள்கணவனுக்கு
விரைத்ததயிலமுதற்பலவுமிதப்பவாட்டியலங்கரித்து
நிரைத்தபலநிவேதனமுநிவேதித்தினிதுபோற்றுவோர்
திரைத்தண்கடல்வையகம்போற்றுந்தேவதேவனெனத்திகழ்வார்.......(௬)

ஆடிமதியிற்பூரத்திலகிலமுயிர்த்தபார்ப்பதிதன்
நீடுவிரிதாமரைப்பதங்கடொழுதுவணங்கிப்பூசிப்போர்
பீடுவிரியும்விழுச்செல்வம்பெருகவாழ்ந்துகடைநாளிற்
சேடுவிரியுமவளுலகிற்சென்றுபோகந்திளைப்பாரால்.......................(எ)

சிங்கமதியின்மூலத்திற்சிந்தையினிதுமகிழ்கூர
மங்கையிடப்பாலமைத்தபிரான்மலர்த்தாட்கமலம்பூசித்துப்
பொங்குசுவையினறும்பிட்டுப்பொற்பவூட்டுந்தவத்தினோர்
நுங்கவினைகள்பெரும்போகநுகர்வருலகம்புறக்கணித்தே...............(அ)

கன்னிமதியின்வரையுயிர்த்தகன்னிமகிழப்பேரன்பான்
மன்னுநவராத்திரிபூசைமரபினியற்றுமுறைமையோர்
நன்னருலகம்பணிகேட்பநவைதீர்செல்வத்திடைமூழ்கி
முன்னுஞ்சுதியினினிதுறீஇமுடிவிலின்பநுகர்வாரால் ......................(௯)

துலாவண்மதியிற்பூரணையிற்றூயவன்னங்கிற்றிளவெண்
ணிலாவைமுடித்தபொலஞ்சடிலநிமலற்காட்டும்பெருந்தவத்தோர்
கலாவுமன்னமொரோரொவொன்றுதனக்குக்கற்பமொரோரொவொன்று
குலாவுசிவலோகத்தெய்திக்கோதிலின்பநுகர்வாரால்.....................(க0)

வருதேண்மதியிற்கார்த்திகைநாண்மல்கும்விழைவிற்பூசித்துக்
கருதார்புரங்கணைகத்தெரித்தகடவுண்மகிழவிளக்கிடுவோர்
குருவார்ந்தினியநறுநாற்றங்கொழிக்குஞ்சோதியுருவினரா
யொருவாதிமையோர்பணிகேட்பவுயர்ந்தகதியினுவப்புறுவார்.........(கக)

சிலைமாமதியின்வைகறையிற்றினமும்பூசையியற்றுவோர்
தொலையாமலமுந்துமியவருட்டுறையிற்குளிப்பரம்மதியி
னிலையாதிரையினெய்யாட்டிநிகரில்கலவையினிதணிவோ
ரலையாதருளிற்கலந்தின்பவாழிபடிவரக்கணமே........................(கஉ)

மகரமதியிற்பரியூர்ந்துவரதன்வரக்கண்டிறைஞ்சுவோர்
புகரில்பரியூர்ந்துயர்கதியிற்புக்குப்போகநுகர்கிற்பார்
பகருமனையமதிப்பூசம்பரமர்பாதம்பூசிப்போர்
நுகண்முற்றிரியமேலானதுறக்கமாண்டுவீடடைவார்......................(கரு)

மாசிமகத்திற்சிவநிசியின்மழுமானேந்திமலர்ப்பாதம்
பூசைபுரிவோர்தாம்வேட்டபோகமுழுதுங்கைக்கொள்வார்
தேசுதிகழ்பங்குனிமதியுத்திரத்திற்சிறந்ததிருவிழா
வாசையுடன்சென்றேத்திஞரன்றேமுத்திபெறுகிற்பார்................(கச)

வருடப்பிறப்பேமதிப்பிறப்பேவளருமயனமோரிரண்டே
கருதுமுவாவேபதினன்கேகரிசில்பதின்மூன்றேயெட்டே
பொருவில்சோமவாரமெனப்புகன்றவிவற்றிற்பூசிப்போர்
திருகும்வினையின்றிருக்கறுத்துச்செயிர்தீர்ந்தருளினினிதமர்வார்......(கரு)

மொழிந்ததினங்கடமிற்பூசைமுடியாரேனுமுடித்தபயன்
பொழிந்துகருணையுலாப்போதும்புனிதர்திருப்பங்குனிச்சாறு
விழைந்துபணிவோர்வினைமுழுதும்விளியவினிதுபெற்றேகித்
தழைந்தபெரும்போகத்தழுந்தித்தலைவன்பாதந்தலைநிற்பார்...........(கசு)

வென்றுவிளங்குங்கோமுனிவன்முதலானோர்கள்விழைந்தெடுத்த
வன்றுதொடங்கியிதுகாறுமமலன்றிருப்பங்குனிச்சாறு
நன்றுபுரிந்துதரிசித்துநவைதீர்முத்தியடைந்தோர்கண்
மன்றவளவினடங்கிடார்மணிவாரிதிசூழ்வையகத்தில்....................(கஎ)

பட்டிப்பெருமானினிதுரும்பசும்பொற்கொடிஞ்சிக்கூவிரத்தே
ரிட்டுத்தொடுத்தவடமமரரெறும்த்தோளவுணரிருபாலுந்
தொட்டுப்புவியோருருவினராய்த்துவன்றியீர்ப்பரெனினன்பா
ஞெட்டித்திருப்பங்குனிவிழாவுவப்போர்பெருமையுரைப்பாரார்.......(கஅ)

வேறு.

மரகதவல்லிபங்கன்மான்மியந்தெரிக்குமிந்தப்
புரவருள்புராணந்தன்னைப்பூசிப்போர்படிப்போர்கேட்போ
ருரிமையிற்பொருள்களாய்வோருவட்புறத்தெரிப்போரெல்லாம்
விரிபுகழ்ச்சிவலோகத்தின்மேவியானந்தந்துய்ப்பார்................(கசு)

வடித்தினிதெடுத்தபேரூர்வள்ளலார்புராணந்தன்னைப்
படிப்பவர்க்கன்னஞ்செம்பொன்பரிகரிசிவிகைமற்றுங்
கொடுப்பவர்வெறுக்கையென்றுங்குறைவிலராகிவாழ்ந்திங்
கடுத்துயர்சிவலோகத்தினரும்பெரும்போகந்துய்ப்பார்............(உ0)

பிப்பிலவனத்தெஞ்ஞான்றும்பேரருள்வழங்கிவைகு
மொப்பறுபட்டிநாதர்க்குவப்பொடுசிறப்புச்செய்வோர்க்
கெப்பெரும்பயன்களுண்டாமப்பெரும்பயன்களுண்டாஞ்
செப்பியபுராணந்தன்னிற்சிறப்பினிதியற்றுவோர்க்கே.............(உக)

எனமகிழ்சிறப்பச்சூதமுனிவரனியம்பக்கேட்டு
நனிதவமுழந்துவேட்குநைமிசவனத்தோரெல்லாங்
கனிவொடுமிறைஞ்சிப்போதிக்கடிவரைப்பமர்ந்தமுக்க
ணனகனதருளையுன்னியானந்தந்திளைத்துவாழ்ந்தார்................(உஉ)

மன்னியபோதிவைப்பின்வதிந்தெனையீர்த்துமூவாத்
தன்னையென்னுவாற்பாடித்தமியனேன்றனையுமாண்ட
முன்னவனுதிநாதன்முக்கணெம்மானையல்லாற்
பின்னொருதெய்வந்தன்னைப்பேசுமோவெனதுசெந்நா.............(உ௩)

மாமறைமுனிவர்வாழ்கமரகதவல்லியோடும்
பாமலிபுலவர்போற்றும்பட்டிநாயகனார்வாழ்க
காமருவெள்ளிமன்றிற்கண்ணுதனடனம்வாழ்க
கோமனுநீதிவாழ்கவுலகமுழுதும்வாழ்க..... ......................(உ௪)

விசேடபூசைப்படல முற்றியது.

ஆகப்படலம் ௩௭ - க்குத் திருவிருத்தம் - உஉஉ0.

## பேரூர்ப்புராண முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பரிசோதநபத்திரம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ங | உ | ங | வேந்தி | வெந்தீப் | எச | சச | உ | டொலி | டெலி |
| அ | கச | ச | விலகு | விலக்கு | எசா | சாச | உ | மாலவன் | மாமவன் |
| க0 | உஅ | ங | ரொடும் | ரொடு . | எகூ | கூஉ | க | அண்ணு | அன்ணு |
| ,, | ஙக | ச | மதுதெவி | மதுத்தெவி | அஅ | ஙஅ | உ | னென்னவு | னேனவு |
| கரு | எக | ங | லரசர்க் | லரசற் | ,, | சக | ங | குரி | குறி |
| கசா | எஉ | உ | கரும்பி | கருப்பி | கூ0 | ருரு | க | ணடை | நடை |
| உ0 | உஅ | உ | முட்டி | மூட்டி | ,, | சா | க | சொல்லென் | சொலென் |
| ,, | ஙச | க | ல்லமா | வமர | கூரு | உச | ச | கன்ருற் | கன்றிற் |
| உங | ருசா | ச | தொளின் | தோளின் | கூஅ | கூ | க | சுதை | சுவை |
| உச | சாரு | ங | தளி | தளித் | க0ங | சஎ | உ | கூ | கு |
| உரு | எஉ | க | குமம் | குமப் | க0ச | ருக | ங | வித்து | வித்த |
| ஙஉ | சா | ச | வரைகி | வரைக்கி | ,, | ருஅ | க | ர்கூகூ | ருகூ |
| ,, | எ | க | விழிகிளை | விழிக்கிளை | க0அ | அச | க | ஐயணு | ஐயநா |
| ஙங | கஎ | உ | கிரம்பி | கிரப்பி | கக0 | க0ரு | ச | னீங்கெ | னீங்கே |
| ஙச | உச | உ | வெண் | வண் | கஉஉ | கஅ | க | புக்க | புகக் |
| ஙரு | ஙஉ | ங | வுமை | வுழை | கஉங | ஙக | உ | மடு | மடி |
| சஉ | உஉ | ச | போந்து | மோந்து | கஉச | ஙசா | ங | பம்மணி | யம்மணி |
| சசா | சகூ | உ | மனு | மனு | கஉகூ | எங | ங | மறித் | மறிந் |
| சஅ | உ | ங | யவ | யவை | ,, | எஎ | உ | மிறு | மிரு |
| ருங | ச0 | ங | லரிது | லறிந்து | கசசா | கஉ | உ | கரத் | காத் |
| ,, | சக | உ | விய் | விய | கருச | ங | உ | விட்டு | வீட்டு |
| சாஉ | ஙக | உ | மில்லை | மிலை | கசாக | ஙசா | க | னேகி | ணேகி |
| சாகூ | உ | ங | முள்ள | முன்ன | கஎசா | எ | ச | வுடிந் | வுழந் |
| எக | ககூ | ங | க்கண்ட | கட | உசஉ | சக | உ | தகுக்க | தகுக |
| ,, | உரு | க | றைதளை | றைத்நளை | உசஅ | அசா | ச | தாணெய் | தானெய் |
| ,, | ,, | ச | தோடோ | தோட்டோ | உருங | கஉரு | ச | பறிறி | பற்றி |



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமேலைச்சிதம்பரமாகிய

# பேரூர்ப்புராணச் சுருக்கவசனம்.

## க. நைமிசப்படலம்.

நைமிசவனத்திலே, யாகங்கள்செய்து, சித்த சுத்தி பெற்றிருந்த சௌனகர் முதலிய முநிவர்கண்மாட்டு, சூதமுநிவர்வர, அவரை அம்முனிவர்குழாங்கள் வணங்கி, "முன்னொருகாலத்திலே, பிரமாண்ட புராணத்துள், கௌமார சங்கிதையில், குமாரகண்டத்தில், பேரூர் மான்மியத்தை அருளிச்செய்தீர். அம்மான்மியத்தை மீட்டுங் கேட்க விரும்புகின்றேம்" என்று விண்ணப்பஞ் செய்ய, சூதமுனிவர் சொல்லத்தொடங்கினூர்.

திருச்சிற்றம்பலம்.

## உ. புராணவரலாற்றுப்படலம்.

திருக்கைலாசமலையிலே, உமாதேவி சமேதராக எழுந்தருளியிருக்குஞ் சிவபெருமான்மாட்டு, துவிதீய சம்புவென்று பிரதிபாதிக்கப்படுந் திருநந்திதேவர் பண்டைக் காலத்தே, பதினெண் புராணங்களுங் கேட்டு வருங்கால், ஒரு தினத்திலே, அச்சிவபிரான் திருவடிக்கமலங்களைப் பேரன்போடுவணங்கி, சுவாமீ, தேவரீர் எழுந்தருளியிருக்குந்தலங்களில், இத்திருக் கைலாசத்துக்கு ஒப்பாகிய மகிமை யுடையது எதுவென்று விண்ணப்பஞ் செய்ய, அதற்குச் சிவபிரான் "உத்தர கைலாசம், தக்ஷிண கைலாசம், மத்திய கைலாசம் என்னு மூன்றும் ஒத்த சிறப்பினை யுடையனவாயினுஞ், சுத்தோதக சமுத்திர தீரத்திலுள்ள உத்தர கைலாசமும், இம் மத்திய கைலாசமுந் தேவர் முனிவர்கட்கன்றி மற்றையோர்க்கு எளிதில் அடைதற்கு அரியன வாதலால், பேரூரென்னுந் தக்ஷிணகைலாசமே யாவருஞ் சென்று, எளிதில் போகமோக்ஷங்களை அடையத் தக்கது." என்று அதன்மகிமையைத் திருநந்திதேவருக்குத் திருவாய் மலர்ந்தருளினார். அவர்முகமாக உணர்ந்த முருகக்கடவுள் நாரத முனிவருக்கும், அவர் வியாசமுனிவருக்கும, அவர் எனக்கும் அம்மகிமையை அருளிச்செய்தார்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௩. நாரதன்வழிபடுபடலம்.

குமாரக்கடவுண்மாட் டுணர்ந்த நாரதமுனிவர் கொங்கநாட்டின் கண்ணதாகிய பேரூரிற்சென்று, வெள்ளியங்கிரியில்ஏறி, சிவலிங்கப் பெருமானையும், உமாதேவியாரையும், விநாயகக்கடவுளையும், முருகக்கடவுளையுந் தரிசித்து, நேசித்துப் பூசித்து, கீழே இறங்கி, அம்மலைச்சாரலின் மேலைத்திசையில் இருக்கின்ற ஆலயத்தையும், மற்றை ஆலயத்தையும் அடுத்து, சுவாமி தரிசனஞ் செய்து, பின்பு அரசம்பலவாணரையுந் தரிசித்தார். அதன்மேல், காஞ்சிநதிதீரத்தில், சிவலிங்கந் தாபித்து, ஒருதீர்த்தம் உண்டாக்கி, அந்நீரை

அபிஷேகித்து ஆராதனஞ்செய்தனர். நாரதர் ஆலயத்திற்கு நாரதேச்சுர மென்றுந், தீர்த்தத்திற்கு நாரத தீர்த்தமென்றும் பெயர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௪. காலவன்வழிபடுபடலம்.

காசிபமுநிவர் புத்திரராகிய காலவமுநிவர் சிவபுண்ணியமேலீட்டினால், இருவினையொப்பும், மலபரிபாகமும், சத்திநிபாதமும்உற்று, பாசத்தையும், பாசத்தையுடைய பசுவையும், பசுவுக்குப் பதியாகிய சிவபிரானையுந் தமது மதிநுட்பத்தினாலே ஆராய்ந்து பதியை அடைதற்குரிய நெறி சிவலிங்கோபாசனையே என்றும், அவ்வுபாசனை எளிதிற் கைகூடுதற்குரிய தலம் பேரூரே என்றும் உணர்ந்து, அத்திருப்பதியை அடைந்து, காஞ்சிநதியில் மூழ்கி, சுவாமிதரிசனஞ் செய்து, அவ்வாற்றங்கரையிலே, சிவலிங்கப் பிரதிட்டைசெய்து, ஒருதீர்த்தம் அகழ்ந்து, அந்தஜலத்தை அபிஷேகித்து அருச்சனைபுரிந்து, தினந்தோறும் ஸ்ரீபஞ்சாக்ஷரம் பதினையாயிரம் உரு ஜபித்து வந்தார். இங்ஙனம் பதினாயிர வருஷந் தவஞ்செய்யு மளவில், அவ்வருட்குறியி னின்று சிவபிரான் தோன்ற, அவரைக் காலவமுநிவர் வழிபட்டு, வரங்கள்பெற்று, தீக்ஷையுற்று, சித்தாந்தமகா வாக்கியோபதேசங் கேட்டு, சிந்தித்து, தெளிந்து, நிட்டைகூடி வெள்ளியம்பலத் திருக்கூத்தையுந் தரிசிக்க விரும்பி இருந்தனர். காலவமுநிவர் ஆலயத்திற்குக் காலவேச்சுர மென்றுந், தீர்த்தத்திற்குக் காலவ தீர்த்தமென்றும் பெயர். அவ்வாலயம் பட்டீசராலயத்திற்கு ஈசான திக்கில் இருக்கின்றது.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ரு. காமதேனுவழிபடுபடலம்.

சுவாயம்பு மனுப்பட்டத்தில், சகரன் என்னும் அரசன் அரசாட்சி புரியுங்கால், பிரமதேவர் பிரஜைகளைப் படைக்கும் வண்ணம், எண்ணி, சிவயோகத்தில் இருந்தபொழுது,

தீயுழிஞல், நித்திரைசெய்தனர். அதனை இந்திராதி தேவர்கள் முகமாக வுணர்ந்த விஷ்ணுமூர்த்தி காமதேனுவை நோக்கி, "நீதவம்புரிந்து,சிவபிரான் திருவருள்பெற்று, சிருட்டித்தொழில் செய்வாயாக." என்றபோது, காமதேனு இமைய மலையையெய்தி, ஆயிரந்தேவவருடம் அருந்தவம் புரிந்துஞ் சிவபெருமான் அருளாமைபற்றி, கவலையுற்றிருக்குங் காலத்து, நேர்பட்ட நாரதமுநிவர் ஏவுதலால், அதிரகசிய ஸ்தலமாகிய ஆதிபுரியை அடுத்து, காஞ்சி நதியில் வாஞ்சையொடு முழுகி, அசரீரி வாக்கின்படியே ஆதிலிங்க மூர்த்திமீது தனதுபாலைப்பொழிந்து, பூசித்துக்கொண்டிருந்தது.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௬. குழகன்குளப்புச்சுவடுற்றபடலம்.

அங்ஙனம் * பட்டியிட்டு வழிபட்டு வரும்போது, ஒருநாள், காமதேனு முன்பகலிலே, சிவபூசைசெய்து, சிவயோகத்தி லிருந்தது. அப்போழ்து சூரியன் அஸ்தமயனமாகி, சந்திரன் உதயமான காலத்தில், அக்காமதேனுவின் கன்றுனது விளையாட்டினுல் அண்டங்கள் குலையும்படி அலைந்து, அண்டநாயகராகிய ஆதிலிங்கமூர்த்தி அருமைத் திருமேனியை மறைத்திருந்த மேருமலையாகிய புற்றினை ஓரடியினுல் மிதித்தது. அவ்வடி திருமுடியிலே அழுந்திப் பெயர்க்கக் கூடாமையினுல், கொம்புகளாற் குத்தி அப்புற்றை உடைத்தது. கொம்புகளே யன்றிக் காற்குளம்பு ஆதிலிங்கேசர் திருமுடியில் உதிரம்பெருக அழுந்தியதனுல், அக்குழகர் குளப்புச்சுவட்டினை உற்றருளினுர். பின்பு காமதேனு சூரியோதய காலத்தில், அவ்விடத்தே வந்து, நிகழ்ந்தவைகளை உணர்ந்து கவலைகொண்டு, எனதிளங்கன்றினுல், நான்பெரபராதியாயினேன் என்று வருந்துகையில், சிவபிரான் இடபாரூடராய் எழுந்தருளி, உனதிளங்கன்றின் விளையாட்டினுல் உற்றதைக் குற்றமாக உள்ளத்திற்சற்றும் பற்றிலோம். நமது உமாதேவி முலைத்தழும்பும், வளைத்தழும்பும் மார்பி

* பட்டி - தொழு.

னிடத்தே போல, முடியின்கண்ணே, குளப்படிச்சுவடுங், கோட்டுச்சுவடுங் குதூகலத்தோடு கொண்டருளினேமென்றும், உனதுகருத்துப்படி, இப்போது பத்தியும், பின்னர் நடனதரிசனமும், முடிவில் முத்தியுந் தந்தருளுவோமென்றும், நீவழிபட்டுத் தங்கியபடியால், இப்பேரூர் காமதேனுபுரம், பட்டிபுரி என்னும் பெயர்கள்பெற, பட்டிநாதர் என்னும் நாமதேயத்தை நாமும் பெற்றோமென்றுந் திருவாய் மலர்ந்து, இது முத்தித்தலமாதலால், நீகருதிய சிருட்டித் தொழிலைப்பற்றி, வஞ்சி க்ஷேத்திரத்தில் அநுக்கிரகிப்போமென்றனர். அவ்வாறு காமதேனு வஞ்சித்தலத்திற்சென்று, வரம்பெற்றுச் சிருட்டித்தொழிலைச் செய்தது.

திருச்சிற்றம்பலம்.

—o—

## எ. தெல்கைலாயப்படலம்.

கீழைச் சிதம்பரம் என்னும் க்ஷேத்திரத்தில், சிவபெருமான் தமது அருட்சத்தியாகிய உமாதேவியார்காண, மேலைச்சிதம்பரம்போல ஆனந்த தாண்டவஞ் செய்தருளுவர். அத்திருநடனத்தைத் தரிசிக்கும்படி, சிவபிரானது ஆஜ்ஞையினல், வியாக்கிரபாதமுநிவர் கீழைச்சிதம்பரத்திற் சென்று, பத்தியினல் வழிபாடுகள்செய்து, சிவயோகத்திற் பயின்று வதிந்தார். அப்பொழுது கர்மமே கர்த்தாஎன்னுங் கொள்கையுடைய தேவதாருவனத்து முநிவர்களைத் தடுத்தாட் கொள்ளும் வண்ணஞ், சிவபிரான பிக்ஷாடனமூர்த்தியாக அம்முநிவர்களுடைய பத்தினிகளிடத்தே சென்று, கற்புநிலையைக் கலக்கியுஞ், சிவாஜ்ஞைப்படி விஷ்ணுமூர்த்தி மோகினிமாதாகி, அம்முனிவர்கள் தவநிலையை அவநிலையாக்கியும் அவ்விருடிகள் கருவபங்கமானபின்பு அவ்வனத்தின்கண்ணே, சிவபிரான், திருநடனஞ்செய்தருளினர். அந்நிருத்தத்தைத் தரிசித்த திருமால், ஆதிசேடன்மீது சயனித்து, ஒருதினம் விழிக்குங் காலையில், கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பொழியவும், உடலமுழுதும் உரோமாஞ்சிதங் கொள்ளவும் பேரன்போடு சங்கர சங்கர என்று ஆரவாரித்தனர். அப்பொழுது ஆதிசேடன் அடுத்து, வினவியதற்கு

விஷ்ணு தேவதாருவனத்தில் நிகழ்ந்த நிருத்ததரிசனத்தைக் குறிப்பித்தவளவில், அந்நிருத்தத்தைத் தரிசிக்கும்பொருட்டு, ஆதிசேடன் ஆசைகூர்ந்து, விடைபெற்று, மேருமலையைச்சார்ந்து தவஞ்செய்ய, அதற்கு எதிர்வந்து, தில்லையம்பலத்தைச் சேரும்வண்ணஞ், சிவபிரான் அருள்புரிய, அவ்வாறு அத்திரிமுநிவர் பத்தினியாகிய அனசூயைமாட்டு, பதஞ்சலிமுநிவராக அவதரித்து, தில்லைப்பதியில், வியாக்கிரபாத முநிவரோடுகூடி, பஞ்சகிருத்திய திருநிருத்தத்தைத் தரிசித்திருந்தனர். அச்செய்தியை அறிந்த திருமால் திருக்கைலாயமலையைச் சேர்ந்து, சிவபெருமானைத் திரிகரணங்களாலுஞ் சேவித்து, தில்லைச்சிற்றம்பலத் திருநடன தரிசனத்தின் பேரவாவைப் பெரிதும் விண்ணப்பம் பண்ணினர். அதற்குத் திருக்கைலாசபதி "விராட்புருடனுக்கு இருதயஸ்தானமாகிய கிழைச்சிதம்பர நடனதரிசனத்தைப் பதஞ்சலி வியாக்கிரபாதர் பொருட்டுச் சுதந்திர மாக்கினோம். ஆகையால், தக்ஷிணகைலாசமாய், விராட்புருடனுக்கு விந்துஸ்தானமாயுள்ள மேலைச்சிதம்பர நடனதரிசனத்தைக் காலவமுநியுங் காமதேனுவுங் கருதியிருத்தலானும், நீயுங் கோமுநியாய், பேரூரைச் சார்ந்திருப்பாயாகின், அங்கே வெள்ளியம்பலத்தில்,திருநடனஞ் செய்து காட்டுவோம்."என்று, விஷ்ணுவுக்கு விடைகொடுத் தருளினர். உடனே விஷ்ணு கோமுனியாய், மரவுரியுடுத்து, சடைமுடிதரித்து, திருநீறுங் கண்டிகையும் அணிந்து, திருவைந்தெழுத்தைச் சிந்தித்துக் கொண்டு, ஆதிபுரியை அடுத்து, காஞ்சிநதியில், விதிப்படி ஸ்நாநஞ்செய்து, மலைமீதுசென்று, சுவாமியையும், அம்மையையுந் தரிசித்து, கீழே யிறங்கி, மற்றைய ஆலயங்களையும், இரசத சபையையுந் தரிசித்து, பின்னர்ச் சிவபெருமான் றிருக்கோயிலுக்குத் தென்றிசையிலே, தென்கைலாயமென்று திருநாமமிட்டு, ஓராலயம் நிருமித்து, சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து, சக்கரதீர்த்தமெனப் பெயரிய ஒருதீர்த்தம் அகழ்ந்து, அந்நீரை அபிஷேகித்துச் சிவாகம விதிப்படி சிவாராதனஞ் செய்து காலவ முனிவரோடு கலந்து, சிவயோகத்தி லிருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

## அ. வடகைலாயப்படலம்.

அங்ஙனந் திருமால் தவம்புரியும்போது, பிரமா நித்திரை நீங்கி, நித்தியகர்மங்களை நிறைவேற்றி, உலகத்தைப் படைக்கத் தொடங்கிய வளவில், வேதங்களின் முறையை மறந்தமையால், அத்தொழில் கைகூடப்பெற்றிலர். ஐயையோ இதற்காகவோ சிவயோகம் பயிலும்போது துயில் உண்டாகியதென்று பிரமா வருந்தி மத்திய கைலாசமலையைச் சார்ந்து, தேவதேவரை வணங்கி, சிறியேன் பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு மகாதேவர் "தக்ஷிண கைலாசமாகிய பேரூரிலே, அரசவிருக்ஷ மூலத்தின் கண்ணதாகிய இரசதசபையிலே, நமது தாண்டவத்தை வேண்டி, விஷ்ணு கோமுனிவனுகிக் காலவமுனிவனோடு கலந்து தவஞ்செய்கின்றான். காமதேனு வழிபட்டமையால், நமக்குப் பட்டிநாதரென்னும் நாமதேயமுமுண்டு. ஆகையால், நீ பட்டிமுனியாய், அத்தலத்தே சென்று, பத்திசெய்வாயாகில், நமது நடனத்தையுங் கண்ணுற்று,எண்ணுற்றவரம்பெறலாம்." என்றுதிருவாய்மலர்ந்தனர். பிரமதேவர் உடனே விடைபெற்று, திருவைந்தெழுத்தைச் சிந்தித்துப் பட்டிமுனியாகி, தண்டு கமண்டலங்களைத்தாங்கி, விபூதி ருத்திராக்ஷ தாரணஞ்செய்து, குழைந்த வுளத்தோடு தவசித்திபுரத்தைச் சார்ந்து, காஞ்சிநதியில், மூழ்கி, சிவபெருமானை வணங்கி, பன்னீர் மரத்தடியிலே, குடிகொண்டருளும் மூலலிங்கமூர்த்திக்கு உத்தரதிக்கிலே, தமது கமண்டலத்தைத் தீர்த்தமாக இருத்தி, சிவலிங்கப் பிரதிட்டை செய்து, அபிஷேகித்து, அருச்சித்து, வெள்ளியம்பலத்தையுந் தரிசித்து, காலவமுநிவர் கோமுநிவர் இருவருடன் மருவி யிருக்குங்கால், காஞ்சிநதியின் வடதிசையில், முத்தியைத் தரத்தக்க ஒரு யாகம் வளர்த்து, சிவபெருமான் திருவுளங் களிகூரும்படி முற்றுவித்தார். பிரமதேவர் ஆலயத்திற்கு வடகயிலை என்றுந், தீர்த்தத்திற்குப் பிரமதீர்த்தங் குண்டிகைதீர்த்தம் என்றும், யாககுண்டத்திற்குத் திருநீற்றுமேடு என்றும் பெயர்.

திருச்சிற்றம்பலம்.

## ௬. நிருத்தப்படலம்.

பேரூரிலே, காலவமுநிவர் முதலியோர் சிவபிரான் திருநடனத்திற்காகக் குறித்த காலத்தையே நாடிக்கொண்டிருந்தனர். இருக்கும்பொழுது, காலவேச்சுரத்தில, அரசடியில், வெள்ளியம்பலம் உள்ளதாகச் சிவபெருமான் அருளியபடி, அதனைக் காணப்பெற்றிலேனென்று கோமுநிவர் தியானித்தார். அக்காலையில், "பழைய அமபலத்தைப் பரமசிவன் மறைத்தபடியால், அவ்விடத்தே ஒருசபையும் அதிலே நடராஜர் திருவுருவும் அமைத்து வழிபடுவாயாக" என்று ஒரு அசரீரிவாக்கு எழுந்தது. உடனே கோமுநிவர் விசுவகம்மியனை வருவித்துஞ், சபை நிருமிக்கும் இடம் புலப்படாது திகைத்திருக்கும்போது, சிவபிரான் சித்தராகத் திருவுருக்கொண்டு, பற்பல, அற்புதங்களைச் செய்தருளினர். அவர்பாட்டு, கோமுநிவர் முதலிய மூவரும் அடுத்து,வினவி, சிவபெருமான் திருநடஞ்செய்கின்ற திருச்சபையைத் தெளிவிக்க வல்லீராயின், நீவிரே முற்றுமுணர்ந்த பெற்றியரெனச் சொல்லியவளவில், சித்தேசர் ஆதிலிங்கமூர்த்திக்கு வடகிழக்கில், திரிமூர்த்தி யுருவமான அரசடிநீழலில் வந்து, இரசதசபை எழுக என்று ஆஜ்ஞாபித்தனர். உடனே வெள்ளியம்பலம் பொள்ளென எழுந்தது. அப்பொழுது தேவர்கள் கற்பகப்பூமாரி பொழிந்தனர். பொழிந்தபோது, கோமுநிவர் முதலியோர் சித்தமூர்த்தியை வணங்கி, தேவரீர் செய்தருளிய தெய்வசபைக்கேற்பத் தேவர்பிரான் திருவுருவுஞ் செய்தருளுவீராக என்ற காலையில், சித்தேசர் திருவுளமகிழ்ந்து, திருச்சபையைச்சூழத் திரைகோவச்செய்து, அதனுள்ளே ஒருமுகூர்த்தமளவும் அமர்ந்து, இரண்டாமுகூர்த்தத்திலே, திரையோடு சித்தேசர் அந்தர்த்தான மாயினர். பினபு திருநடராஜர் திருவுருவோடு சிவகாமியம்மை திருவுருவையும் அத்திருச்சபையிலே, கோமுநிவர்முதலிய மூவருந், தேவர்கள்யாவருந் தரிசித்தார்கள். பின்னர் அம்முனிவர்கள் மூவருஞ் சிவாகம விதிப்படி சம்புரோக்ஷணஞ் செய்து, ஸ்ரீ ஞானநடராஜரோடு சிவகாமி யம்மையையுந் தினந்தோறும் ஆறுகாலமும் ஆராதனஞ் செய்து வந்தனர்.

இங்ஙன நிகழுங்கால், விசுவகம்மியனால், ஆலயங்கள் அமைத்து, பஞ்சமூர்த்திகளையும், பரிவார தேவதைகளையும் பிரதிட்டைபண்ணி, திருவிழாச் செய்யத் தொடங்கி, பங்குனி மாசத்துப் பூருவ பக்ஷத்துச் சஷ்டியோடு கூடிய கிர்த்திகா நக்ஷத்திரத்தில், துவஜா ரோகணஞ்செய்து, ஒன்பதா நாள் இரதோற்சவ நடாத்தி, பத்தாநாள் உத்திரத்தன்று இரசத சபைக் கெதிரி லுள்ள மண்டபத்திலே, அனைவரு நிற்க, கோமுனிவர் முதலிய மூவரும் அருகே நிற்ப, நாரதமுனிவருந் தும்புருமுனிவரும் வீணைகானஞ் செய்யவும், அகஸ்திய மகாமுநிவரும ஆனந்தி முனிவருந் காளம ஒத்தவும், மர்த்துநாதரும நந்திபெருமானும் மத்தளமுழக்கவுந், திருத்தொண்டர்கள் சிரமீது திருக்கைகளைக் கூப்பி அரகர முழக்கஞ்செய்யவுந், தமது திருமேனியின் ஒருபாகத்திலே, உமாதேவியார் அமர்ந் திருக்கவும், ஒரு கையில் உடுக்கை ஒலிக்கவும், ஒருகையில் அககினி விளஙகவும், ஒருகை வீரதமாகவும், ஒருகை அபயமாகவுங், திரோதானத் திருவடி முயலகன் முதுகிற் பதித்தும, அருட்டிருவடி குஞ்சிதமுற வீசியுந், திருக்கண்கள் காளிதேவியின முகத்தை நோக்கியும் ஸ்ரீஞான நடராஜர் வெள்ளியம்பலத்திலே, திருநிருத்தஞ் செய்தருளினார். செய்தருளியுந் திருவடிக் கண்ணதாகிய மறைச்சிலம்பொலியும, வாத்தியஙகளின் ஒலியுஞ் செவிப் புலப்பட்டனவனறி, திருநடககாட்சி கட்புலப்படாமையால், ஆங்கு நின்ற அனைவரும ஏஙகி இரந்து துதித்தனர். துதித்தமாத்திரையில், ஊனநடனஞ்செய்து எவ்வகையுயிர்கட்கும் ஆணவமல வலியை மாற்றி ஞானநடனஞ்செய்தருளு நடராஜர் ஞான நோக்கத்தைத் தந்தருளலும், அஞ்ஞான நீங்கி, முனிவரர் மூவர்முதலிய யாவருந் தாண்டவத்தின் ஆனந்தத்தைக் கண்களாற் கண்டு,மொண்டு மொண்டு உண்டு, சழிபேருவகை யுற்றுக் கூத்தாடினார்கள். சிவபெருமான் செய்தருளிய நாடகவேகத்தினால், ஆபரணமாக அணிந்த பாம்புகள் விடத்தை யுமிழ, அது புலித்தோல் போர்த்தாற்போலத் திருமேனி முழுவதும் வரி வரியாக ஒழுகியது. அவ்விட வெப்பத்தினால், தேவர்கள் முதலிய யாவரும்

அஞ்சி, பசியோடு தாகசோகங்கள் உற்றனர். உற்றபோது, உமாதேவியார் அன்னபூரணியை உண்டாக்கி, பசியைத் தணித்தனர். முருகக்கடவுள் நீர்வேட்கையை ஒழித்தனர். விநாயகக்கடவுள் உடம்பிலுற்ற வெப்பத்தைத் துதிக்கையினால், நீர்துளிக்கும் வண்ணங் காற்றினைவீசித் தைவந்து, ஆற்றியருளினர். பின்பு திருநடராஜர் கருணைகூர்ந்து, காலவமுநிவருக்கு விரும்பியவண்ணம், விதேகமுத்தியையும், பிரமாவைநோக்கி, நீ பழையவடிவொடு படைப்பினைச்செய்து, பட்டிமுநியம்சத்தால் நமது நிருத்தத்தைத் தரிசிப்பாயாக என்றும், விஷ்ணுவைநோக்கி, நீயும் பண்டையுருக்கொடு பாற்கடலிற் பள்ளிகொண்டு காத்தற் றொழில் செய்து, கோமுநியம்சத்தால், நிருத்ததரிசனஞ் செய்வாயாக என்றும், மற்றையோரை நோக்கி, இப்பேரூரிலே வதிவோர்க்கும், இத்தலத்தைத் தரிசித்தோர்க்கும், நமது நாடகத்தைக் கண்டோர்க்கும், தருமம், அருத்தம், காமம், மோக்ஷமெனனுஞ் சதுர்வித பிரயோசனங்களுஞ் சித்திக்கக்கடவன வென்றுந் திருவாய் மலர்ந்தருளினர். பின்பு வெள்ளியங்கிரிமீதுள்ள வெள்ளியம்பலத்திலும், உமாதேவியார் வேணவாவோடு காணும் வண்ணஞ், சிவபெருமான திருநடஞ் செய்தருளினர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## க0. அபயப்படலம.

சிவபெருமான, தம்மை வேற்றுமை செய்து, தேவர்களோடு தக்கன யாகம் புரிந்தமைபற்றி, வீரபத்திரக் கடவுளால், அவர்களைத் தண்டித்து, யாகத்தை அழித்து, எஞ்சிய பாதகத்தை நுகர்வித்துக் கெடுக்கும்படி, திருவுளங்கொண்டார். அக்காரணத்தினல், மாயையிடத்தே, காசிப முநிவர் கலந்து, சூரன், சிங்கமுகன, தாரகன என்னு மூவரைப்பெற்றார். அம்மூவரும் ஆபிசாரயாகம இயற்றி, சிவபிரான் மாட்டு, வரம்பெற்று, அரிபிரமேந்திராதி தேவர்கள் ஆற்றலை அகற்றி, ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் ஆணைசெலுத்தினர். அப்போது, இந்திரன் முதலியோர் திருக்கைலாச

பதியைச் சேர்ந்து, சூரன்முதலியோரைக் கொல்லும்வண்ணம், விண்ணப்பம் பண்ணினூர். அதற்குச் சிவபிரான "சூரனமுதலியோரை வெல்லும்படி, நமது நெற்றிக்கண்ணிற் றோன்றும் ஆறுமுகன் வருமளவும், ஆதிபுரியை அடைந்து, நீவிர் வதிந்தால், அசுரர்பயம, பிணி, துன்பங்கள் அணுக மாட்டா. பாவமும் அகலும். முருகனதுருவமாகிய மருத வரையும் அங்கேயுள்ளது. செல்லுங்கள்."என்று விடைகொடுத்தார். அவ்வாறே விஷ்ணுவாதி தேவர்கள் பேரூரைச்சார்ந்து, பயம் ஒழிந்து, காஞ்சி நதியில், மூழ்கி, நித்த நியமங்களை முடித்து, ஆதிலிங்கேசரையும், வெள்ளி யம்பலத்தையும பணிந்து, சிவமயமாகிய வெள்ளியங்கிரி, உமாதேவிகிரி, பிரமகிரி, விஷ்ணுகிரி, மருதவரையாகிய பஞ்ச கிரிகளிலுமுள்ள தீர்த்தங்களில், ஸ்நாநஞ்செய்து, அக்கிரிகளைத் தரிசித்து, சிவலிங்க பூஜைசெய்து, மருதவரையில், முருகக்கடவுளை நோக்கி, தவம புரிந்துகொண் டிருநதார்கள். அபபஞ்சகிரிகளும் பேரூரின மேற்றிசைமலைத்தொடரில், உள்ளன.

திருச்சிற்றமபலம.

—o—

## கக. மருதவரைபபடலம.

முருகக்கடவுர் உருவமாகிய மருதவரைக்கண்ணே, சமஸ்ததேவர்களுஞ் சார்ந்து, பகைவரை ஒழிக்கும்வண்ணம், எண்ணி, தவம்புரியுமிடத்தே, முருகக்கடவுர் திருவடிகண் மாட்டு, பேரனபுள்ள நாரதமுநிவர் வந்து, விஷ்ணுவை வணங்க, அவர் அம்முநிவரைத்தழுவி, உபசரித்து, முருகக்கடவுள் விரைந்து கருணைபுரியு முறைமையைச் சொல்லும்படி கேட்க, அதறகுநாரதமுநிவர் சொல்லத்தொடங்கினூர். "சிவதருமங்கள் பலவற்று ர், பூஜை சிறந்தது அப்பூஜையின் உபசாரங்கள் பலவற்றுள், அபிஷேகம், விரை, தீபம், அருச்சனை, நைவேத்தியம் எனனும் ஐந்துஞ் சிறந்தன. இவற்றைப் பன்னிரண்டு மண்டலம் இயற்றினல், எண்ணிய பயனை எளிதில் இம்மையின எய்தலாம். அவற்றுள், அபிஷேகமாவது சூரியோதயத்திற்கு முனனே பன்னிரண்டு புதுச் சால்களில், புதியநீரை வஸ்திரத்தால், வடித்தெடுத்து, மண

ல்பரப்பி, அதிலே வைத்து, ஒவ்வொரு சாலினும், ஏலமுத லிய திரவியங்களை நறுமலரோடுபெய்து, மந்திரத்தால் அபி மந்திரித்து, ஆயிரம்வாழைக்கனியும், ஆறுபடி பசுப்பாலுந், தேனும், நறுநெய்யுஞ், சர்க்கரையும் இவவிரண்டு படியு மாகச் சேர்த்த பஞ்சாமிர்தம் ஒருபாத்திரத்தில், அமைத் து, பால், தேன, ருவைக இளநீர், பஞ்சாமிர்தம், சந்தனக் குழம்பு என்னும் இவைகளை முருகக்கடவுள் திருமேனி யில், அபிஷேகித்து, இடையிடையே சால்களிலுள்ள ஜல த்தைச் சங்கிறை, ஆட்டுவதாம. விரையாவது இலேபன முஞ் சுகந்தமுமென்று இருவகைப்படும். அவற்றுள் இலே பனமாவது பச்சைக்கர்ப்பூரமுங, குங்குமப்பூவுங, கோரோ சனையுட, புழுகுங், கஸ்தூரியுங கலந்த மலாககாச சந்தன த்தைத் திருமேனி முழுவதுஞ் செறிவாகச சாத்துதலாம். சுகந்தமாவது முல்லை, இருவாட்சி, பிச்சி, மல்லிகை, பன னீர், மரு, கொழுந்து, வெட்டிவேர் என்னும ஏழினையுந் தொடுத்து, திருவுருத் தெரியாவண்ணம் அலங்கரிதலாம. தீபமாவது முருகக்கடவுள் திருக்கண் அளவினதாகிய உயரமுள்ள ஒருபடி நெய் கொள்ளத்தக்க தகழிபொருந் திய தீபத்தை வெள்ளி, அல்லது வெண்கலத்தினாற் செய் வித்து, இரண்டு பக்கங்களிலாதல், அன்றி ஒரு பக்கத்திலா தல் வைத்து, கபிலை முதலிய பசுநெய் நிறையவார்த் து, தாமரைநூல், அல்லது செம்பருத்தி வெண்பஞ்சினால் விரற் பருமையதாகிய திரி அமைத்து, பச்சைக் கர்ப்பூரம், அல்லது ஆலத்திக் காப்பூரஞ் சேர்த்து, அத்திரி நுனியிற் பொருத்திய சுடர்கொழுந்து பன்னிரண்டு விரலளவும் எழுந்து விளங்குவதாம. அருச்சனையாவது முருகக்கடவுளு க்குரிய சகசிரநாமத்தால், செந்தாமரைமலர், அல்லது வெ ண்டுளசியோடு வில்வமுஞ் சேர்த்துத் திருவடிகளிலே தூவு தலாம். நைவேத்தியமாவது வெண்மையாகிய ஒருபடிஅரி சிக்கு மூன்றுபடி பசுப்பாலும், காற்படி பசுநெய்யும், நூற் றறுபது கழஞ்சு சர்க்கரையும், இடித்த ஏலஞ்சுக்கு வீசம் படியும், ஒரு தேங்காய்த் திருகலுஞ் சேர்த்து, பக்குவமாகச் சமைத்த பின, உரித்த பதினைந்து வாழைக்கனி கலந்து, அப

பரமான்னத்தை அருச்சித்தவுடன் நிவேதித்தலாம். இவ்வாறு இரண்டுவருடமாதல், பொருளில்லார் பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் மும்மைப்பருவங்களினுதல் செய்தல்வேண்டும், அம்மூன்று பருவத்தினும் அபிஷேகமுதலிய ஐந்தனையுஞ் செய்ய அசக்தராயின, அகத்தே சற்பாவனையாற்செய்து, பரிசுத்தமான ஸ்தலத்தில் வதிந்து, தினந்தோறும் பதினாயிரமுறை சடாக்ஷரஜபஞ்செய்தால், இஷ்டகாமியங்களெல்லாஞ் சித்திக்கும். இடர்கள் அணுகமாட்டா" என்று நாரதமுநிவர் சொல்லியவளவில், விஷ்ணு மனமகிழ்ந்து, பிரமாதிதேவர் சூழ மருதவரையில், ஏறி, வேற்பமடத்தவாகிய மருதவிருக்ஷமூலத்தில், எழுந்தசெல்வர் ஆர்ச்சனைதீர்த்தத்தில், ஸ்நாநஞ்செய்து, நித்தியநியமங்களை முடித்து, முருகக்கடவுள் திருவடிகளில், நாரதமுநிவர் கூறியவாறு பூஜித்திருந்தார். அப்பொழுது முருகக்கடவுள் எதிர்தோன்றி, நீவிர் விரும்பிய வரம் யாதென வினாவிய வளவில், விஷ்ணு "சூரன முதலியோர் செய்யுங் கொடுங்கோன்மையை மாற்றியருளவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு முருகக்கடவுள் திருப்புன்முறுவல் செய்து, நால்வகைப் படைக்கடலும் புடைசூழ்ந்துவர எழுந்தருளி, தாரகனையுஞ் சிங்கமுகனையுங் கொன்று, சூரனைவென்று, தேவர்களை விண்ணுலகிற் குடியேற்றி, மீண்டு மண்ணுலகிற் பேரூரை அடுத்து, கந்ததீர்த்தமெனப் பெயரிய தீர்த்தம் அகழ்ந்து, அமிர்தலிங்கேசரை அபிஷேகித்து அர்ச்சனைசெய்து, அம்மருதவரைக்கண் அமர்ந்து, அனைவர்க்கும் அருள் புரிந்து வருகின்றார். அம்மலையின்மேல் கன்னிகைதீர்த்தம், அறுமுகதீர்த்தம், சரவணப்பொய்கை என்பவைகளும் உண்டு. சரவணப் பொய்கையைப் புற்றின்கட்சுனையெனபர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௧௨. சுமதிகதிபெறுபடலம்.

மகாராட்டிர தேசத்தில், எச்சதேவன் என்னும் பிராமணன் அரிய தவங்களும வேள்விகளுஞ் செய்து, சிவபெரு

மான் திருவருளினால், ஒருபுத்திரனைப்பெற்று, அவனுக்குச் சுமதி யென்னும் நாமகரணம் இட்டனன. அப்புதல்வன் அப்பெயருக்கேற்ப வேத முதலிய கலைகளை ஓதி உணர்ந்து, அதன்பயனாகிய ஒழுககத்தோடு வளர்ந்து, பதினாறுபிராயம் உற்றனன. அவன சிவதாமாவின புத்திரியை மணஞ்செய்து, வாழுங்கால், யாத்திரை செய்யக் கருதி, திருபபருபபத ததை அடைந்து, அஙகே சிவபெருமான சொணடருளும் மகோற்சவத்தைத் தரிசிநது, வசிக்குநாளில், ஒருநாள், திரு வீதியின வளத்தை நோககுமபடி புறபபடடு, சிழூழினால், பொதுமாதர் வீதி வளத்தைக்கண்டு, செல்லுமிடததே, சூரி யன வெயில் வெபபத்தினால், அயர்வுற்று, ஆகாயததை அ ளாவிய பந்தர் பொருந்திய முனறிலையுடைய இந்திரலோ கம்போனற சுந்தரமுள்ள ஒரு மாளிகையைக் கணணுற்று, அபபந்தரிடையே தஙகி, செந்தமிழ்பபொதியச் சந்தனமுத லிய நறுமணததைபுங குளிர்ச்சியையுங கொண்டு, வந்துலாவு மந்த மாருதத்தினால், சிரம பரிகாரமாகி, அமமாளிகையிற் செல்வாா செயல்களை வினவத் தொடஙகினன. அதற்கு அருகேநினற ஒருவன "இத்திருபபருபபதத்திலே, வேதியர் வீதியின மத்தியிலுளள ஒரு பிராமணன பத்தினியாகிய ஏமாஙகி எனபவள் காமத்தினாற் கறபுநிலைகுலைந்து, கணவனையுங கொனறு, பெரும்பொருளுங கைக்கொணடு, பரத்தையா வாழும் இவ் வீதியில் வந்து, இந்த மாளிகையைக் கட்டுவித்து, இளையளா யிருந்தும் பொது மகளிர் தொழிலிற் பழகிய முதுமகளாய், இளைய ஆடவர் வரவைத் தேடி உறைகின்றாள்." எனறனன. அப்போது அம்மனையின அகத்திருந்து ஏமாங்கி புறத்தேபோந்து, சுமதி நல் வரவை வினவி, கையைப பற்றித் தழுவி உள்ளே அழைத்துக்கொண்டுபோய், இனபத்தை நுகர்வித்தனள. நுகர்ந்த சுமதி சிலதினத்திலே பலபொருளையும் இழந்து, ஏமாங்கியினால் இகழப்பட்டு, பின்னும் 'பெருமோகியாய், தனது தந்தை புரோகிதமாகவிருந்த காஸ்மீரகண்டத்து அரசனை அடுத்து, இரத்தினாபரணங்களும் பெரும் பொருளும பெற்று, மீட்டும் ஏமாங்கியை எய்தி, இனபத்துறையின மூழ்கி, சிலநா

ளில் எல்லாவற்றையும் இழந்து, மற்றுங் கொடைக்குணமு டையாரை அடைந்து, பொருள் பெற்றும், உற்கலதேயத்திற் பர்க்கதேவன் என்னும் பார்ப்பானைக் கொன்று, பொருள் கவர்ந்து, துராசாரனென்னும் பெயர் பெற்றும் ஏமாங்கியி டத்தே வந்தனன். அவன் பெருங்கொடுஞ் செய்கைகளைக் கேள்வியுற்ற ஏமாங்கி "வருணமும் ஒழுக்கமும் கற்பும் வழுவிக் கொழுநனையுங்கொன்று பழிபூண்டு, அளவில்லாத தீமைகளைச் செய்திருக்கின்றோம். இனமும் எம்மிடத்து ள்ளாராலும் பழிபாவங்கள் உளவாதல் முறையோ" என்று வருந்தி, அச்சுமதியை விலக்கவும் விலகாது மாளவதேசத் தை எய்தி, அங்கும் ஒரு பிராமணனை வதைத்து, பொருள் கொண்டு, திரும்பி ஏமாங்கியை அடைந்தனன். உடனே ஏமாங்கி "இப்பாவியைப் பார்ப்பதும் பாவம் பாவம்" என் று அவ்விடத்தை விட்டு அகலவும், சுமதி அவளைத் தேடிச் செல்லுமிடத்தே, தக்ஷிண கைலாசமாகிய பேரூர் எல்லை யில் உள்ள காட்டில், வீழ்ந்து மாண்டனன். திருப்பருப்பத மாகிய மல்லிகார்ச்சுனத்தை வழிபட்டு, பேரூர் வெள்ளியங் கிரியின் அருகே இறந்த சுமதியின் உடம்பை நாய் நரிகள் உண்ண எண்ணி இழுத்து, காஞ்சி நதியில் இட்ட வளவில், ஆதிபுரியில் உடலம் வீழ்ந்ததும், ஸ்ரீகாஞ்சிதீர்த்தத்திற்பொ ருந்தியதும் ஆகிய புண்ணியங்களினால், சுமதி சிவலோகத் தைச் சேர்ந்தனன.

திருச்சிற்றம்பலம்.

—o—

## கஅ. முசுகுந்தன்முகம்பெறுபடலம்.

கலிங்கதேசத்திலே, சிவபூசைசெய்யும் மெய்யன்பினை யுடைய ஓர் அந்தணன் அருந்தவஞ் செய்ய, அவன் மனைவியி டத்தே, ஒரு புத்திரி அவதரித்து, சுகுமாரியென்னும் பெயர் பெற்றனள். பெற்று, பிதாவை வணங்கி, சிவார்ச்சனை புரி யும் விருப்பம் இருப்பதை விண்ணப்பஞ் செய்தனள். அதற் குப் பிதா மகிழ்ந்து, சமய தீக்ஷை செய்து, மந்திராதிகாரங் கொடுத்து, அது மனத்திற்கு இனித்தபின் விசேஷதீக்ஷை செய்து, அர்ச்சனாதிகாரங் கொடுத்தனன். கொடுத்த பின்

சுகுமாரி அச்சிவபூசையில், நேசமுற்று, சூரியன உதிக்க ஐந்துநாழிகைக்குமுன் நித்திரை நீஙகி, சதாசிவ மூர்த்தியைத் தியானித்து, சௌசம், தந்தசுத்தி, ஸ்நாநம், அநுஷ்டானங்கள் முடித்து, திருநந்தனவனஞ்சேர்ந்து, சேடியரோடு திருப்பள்ளித்தாமங் கொய்து, சிவபூஜை செய்து வருநாளில், ஒருநாள் பூக்கொய்வதற்கு நந்தன வனத்திற் சார்ந்தனள். அவளை விதூமனென்னுங் கார்நருவன கண்டு, மையலுற்று, "தையலே, நீ எனக்கு மனைவியாவை எனில், உனக்கு வேண்டும பொருள்கொடுத்து, பணியும் புரிவேன 'என்றனன. அதற்குச் சுகுமாரி "போகத்திற சிறிதுங் கருத்தின்றிச சிவார்ச்சனையிற்பெரிதுங் கருத்துடையேன. ஆதலால், நீஉனதிடத்தை அடைவாயாக." என்று சொல்லியும விடாது வருந்தி, இரந்த விதூமனைநோக்கி, "நீ முசுவாகக் கடவாய்" என்றுசபித்தனள். உடனே அவன் முசுவாய் மலைகடோறும உழன்று, இமையமலையை எய்தி, வில்வ விருக்ஷத்திலே, தாவும் போது, உதிர்ந்த சருகுகள் அவ்வில்வ மூலத்திலே அமருஞ் சிவலிங்கப் பெருமான திருமேனியை மறைத்தன. அப்போது இடப்பாகத் திருந்த உமாதேவியார் "முசுவைநோக்கி, எம்பெருமான் திருவுரு மறையச் சருகுகளை உதிர்த்தபடியால், பனவமாது சாபந் தீரும்போதும் உனககு முசுமுகம் அமைக" என்று சபித்தனர். இதனைத் திருச்செவி சாத்தி யருளிய சிவபிரான "அளவில்லாத தீங்கையும் நீஙகச்செய்யும் வில்வத்தை நமதுருவில் வீழ்த்திய புண்ணியத்தினால், இம்முசுவுக்கு உலகமுழுதும் ஆளும் அரசினைக்கொடுப்போம். தேவீ நீ கோபியாதே." என்று அமைத்து, அம்முசுவுக்கு எதிரிலே தோன்றி, இறைமையை ஈந்து, உமாதேவியோடு மறைந்தருளினர். அவ்வரத்தினால் அக்கார்நருவன முசுமுகத்தோடு அரசர் குலத்திலே, உதித்து, முசுகுந்தனென்னும் பெயர் பெற்று, உலகத்தை ஆளுங்கால், அகிதவுட்டிரனென்னும் அவுணன் அமரர்களைக்கலக்கி, இந்திரனை ஜயித்து, தேவலோகத்தைத் தன்வசமாக்கி ஆளுமிடத்து, இந்திரன் இமையமலையில் மறைந்திருந்தான். இருக்கும்போது பிருகுமுனிவர் புத்திரியைக் கண்டு மயங்கி, வலிந்து கைப்பற்றிய வழி,

அம்முனிவர் சாபத்தினால், அரக்கனாகி, உழன்றான். அங்ஙனம் நிகழுங்கால், வியாழபகவானோடு தேவர்கள் பூமியில்வந்து, முசுகுந்தச் சக்கரவர்த்தியைச் சார்ந்து, நிகழ்ந்தவைகளைச் சொல்லி, தேவலோகத்தைக் காக்கும்படி வேண்டினர். அவ்வாறு முசுகுந்தன் விண்ணுலகை அடுத்து, அகிதவுட்டிரனை வென்று, அவ்வுலகைக் காத்தவழி, அதனை ஆளும்படிக்கும் அமரர்கள் விரும்பினர். அவ்வாறு திரிலோகத்திலுஞ் செங்கோல் செலுத்தி, ஒருநாள் சிங்காதனத்தில், இருக்கும்போது, நாடகஞ்செய்த அரம்பை அவன் முசுமுகத்தைநோக்கி, நகைத்தனள். அதனால், நாணமுற்று அவ்வரசாட்சியை அகற்றிய முசுகுந்தன் அருந்தவஞ் செய்து, ஆதித்தன் அனுமதியினால், சிவக்ஷேத்திர யாத்திரை புரிந்து, நாரதமுநிவர் ஏவுதலால், பேரூரைச் சார்ந்து, கலிகன்ம நாசினி யென்னுங் காஞ்சிநதியில், மூழ்கி, சுவாமி தரிசனஞ் செய்து, அந்நதி தீரத்தில், சிவலிங்கப் பிரதிட்டை பண்ணி, இரண்டு தினம் அந்நதியில், ஸ்நாநஞ் செய்து, மூன்றாநாள் மூழ்கும்போது, முசுமுகம் நீங்கி நன்முகம் பெற்று, தானங்கள் செய்து, தென்கைலாய வடகைலாயங்களை அருச்சித்து, மருதவரையில், முருகக்கடவுளைத் தரிசித்து, தன் பதியை அடைந்து, அரசாட்சி செய்து கொண்டிருந்தான்.

திருச்சிற்றம்பலம்.

—0—

## கச. இந்திரன்சாபந்தீர்ந்தபடலம்.

இமையமலைச் சாரலில், மேற்சொல்லியவாறு, இந்திரன் அரக்கனாய், உழன்றமையாலும், முசுகுந்தன் நாணமுற்றுச் சென்றமையாலுந் தேவலோகம் பாழாய், தேவர்கள் வருந்தியிருந்தபோது, நாரதமுநிவர் வந்து, "இமையமலையை எய்தி, அரக்கவுருவை அகற்றி, இந்திரனைக் கொண்டு வருவேன்" என்று அமரர்கட்கு அறிவித்து, இமாசலத்தில், அவ்வரக்கனைக்கண்டு, கமண்டலத்திலுள்ள ஜலத்தை ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்து, முகத்திலே, புரோக்ஷித்தவளவில், மயக்கம் நீங்கினான். அவனை அழைத்துக்கொண்டு, ஆதிபுரியிற்சென்று, காஞ்சிநதியில், அமிழ்த்தினர். உடனே

அரக்கவுரு நீங்கி, உறங்கி விழித்தவனைப் போலப் பழைய வுருவும், அறிவும்பெற்று, இந்திரனாயினான். அவனுக்கு முனிவரர் முன்பு நிகழ்ந்த செய்திகளை உணர்த்தினர். அதற்கு இந்திரன் முசுகுந்தவேந்தனையும், முனிவரரையும் வியந்து துதித்து, காஞ்சி நதியில், மீண்டும் மூழ்கி, முனிவரோடு சென்று, அரசம்பலவாணரையும், பன்னீர் நிழலில், எழுந்தருளியிருக்குஞ் சிவலிங்கப் பெருமானையும், உமாதேவியாரையும் வணங்கினான். பின்பு தேவதச்சனை அழைத்து, திருப்பணி செய்வித்து, பிரமகுண்டத்தில், யாகஞ்செய்து, சிவபிரான்பாற்று, வரங்கள் பெற்று, துறக்கவுலகத்தில், அரசியற்றி வாழ்ந்திருந்தான்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## கரு. கரிகாற்சோழன் கொலைப்பழிதீர்ந்தபடலம்.

காஞ்சிபுரத்தில், அரசாட்சி செய்துகொண்டிருந்த விக்கிரமசிங்கசோழன் புத்திரனாகிய கரிகாற் சோழன், வேட்டமாடும் பொருட்டு, காட்டிற் சென்று, பல மிருகங்களையும் வேட்டையாடி, அவ்விடத்தை விட்டுநீங்கி, ஒருசெந்தாமரை யோடையைக் கண்டு, அதில், தண்ணீர் குடிக்க வந்த ஒரு பன்றிமீது, பாணந் தொடுத்த வளவில், அது பதை பதைத்துவீழ, அதினின்று ஒருபூதம் எழுந்து, அரசனைப் பார்த்து, "நான் பன்றியல்ல சுவிர்த்தியென்னும் பிராமணன், முன்பு இல்லறத்தைவிட்டு, வானப் பிரஸ்தாச்சிரமத்தை அடைந்தும், மனைவி முதலியோர் வனத்தில் வந்து, தொடர்ந்தமையால், அவர்கள் தொடராவண்ணம், பன்றி யுருவாய், வசித்தேன், பின்பு அப்பன்றியுருவை அகற்றுதற்கு அறியாமல் நீர் வேட்கையினால், இவ்விடத்து வந்தேன். அப்படிப்பட்ட என்னை நீ கொன்றதனால், உன்னை நான் விடமாட்டேன்" என்று கொலைச் சாயையாகிய அப்பூதம அரசனைப் பற்றியது. அரசன்அஞ்சி, அந்தணரைஅழைத்து, "தன்னைப் பற்றிய பூதத்தைப் போக்குதற்கு ஏது என்னை" என்று கேட்க, அதற்கு அந்தணர் "சிவஸ்தல யாத்திரை செய்தால், நீங்கும்" என்றனர். அவ்வாறு அரசன் ஸ்ரீ சிதம்பரம், திருக்

குடந்தை, திருவாரூர், ஸ்ரீகாஞ்சி, ஸ்ரீகாசி, சேது முதலிய க்ஷேத்திரங்களிற் சென்று, வழிபடப் போயினான். அந்தச் சமயத்தில், கன்னகுலனென்னுந் தானவன் அப்பொன்னி நாட்டைக் கைப்பற்றினான். இங்ஙன நிகழுங்கால் இமையமலையில், உமையம்மை திருவவதாரஞ் செய்தபோது, சிவபூஜைக்குத் திருப்பள்ளித்தாமங் கொண்டு வரக் காமநோக்கினாலே, தாழ்ந்த சேடியர் எழுவரும் மானுடமகளிராகும்படி சாபம் பெற்று, சிரங்கத்திலே, சார்ங்கமுனிவர் பத்தினி சந்திரவதி வயிற்றிலே, தங்கிப்பிறந்து, நிறைந்தபோகங்களை அநுபவித்து, உமாதேவியார் ஆஜ்ஞைப்படி, பேரூருக்குச் செல்லும்பொருட்டு, கரிகாற்சோழன் வரவை எதிர்பார்த்திருந்தனர். இருக்குங்கால், கரிகாற்சோழன் பல தலங்களையும் பணிந்தும் பூதம் விலகாமை பற்றி வருந்தியபோழ்து, நேர்பட்ட நாரதமுனிவர் அருளியபடி, அப்பேரூருக்குச் செல்லக் கருதி, திருவானைக்காவிற் சேர்ந்து, சுவாமி தரிசனஞ்செய்தான். அதனைக் கேள்வியுற்ற அம்மாதர்கள் எழுவரும் அம்மன்னவனைச் சந்தித்து, தாங்கள்வந்த வரலாற்றைத் தெரிவித்தனர். அதற்கு அரசன் மகிழ்ந்து, உமாதேவியார் திருவடிகளைச் சிந்தித்து, அவ்வெழுவரையுஞ் சிவிகையில், ஏற்றுவித்து, அழைத்துக் கொண்டு, பிப்பிலவனமாகிய பேரூரைச் சார்ந்து, "கொலைச் சாயை கழியக் கடவது" என்று சங்கற்பஞ் செய்து, காஞ்சி நதியில், மூழ்கினான். அம்மாதர்கள் எழுவரும் "சாபங் கழிக" என்று ஸ்நாநஞ்செய்தனர். அரசனுக்குக் கொலைச் சாயை அகன்றது. மாதர்கள் எழுவருஞ் சாபநீங்கி, தேவமகளிரானார். அவ்விருதிறத் தெண்மரும் வேள்வி வளர்த்து, சிவலிங்கப் பிரதிட்டை செய்து, பூசித்தார்கள். அவ் வெண்மருக்குஞ் சிவபிரான் எதிர் தோன்றி, அவர் விரும்பிய வண்ணம், பிறவாநெறியைத் தந்தருளினார். அக்காரணத்தினால், பேரூருக்கும், காஞ்சிநதிக்கும் பிறவாநெறியென்னும் நாமமுண்டு. அரசன் மூழ்கிய காஞ்சிநதித்துறைக்குக் கரிகாற்சோழன் துறையென்று பெயர்.

திருச்சிற்றம்பலம்.

## கசு. பள்ளுப்படலம்.

திருக்கைலாச மலையிலே, சிவபெருமான் தமது திருவுருவைக் கண்ணாடியிற் பார்த்து, அழைத்தலும், அதினின்று ஒருவர் சுந்தரர் என்னும் நாமத்தோடு தோன்றி, ஆலாகலவிடத்தை அமுதுசெய்யும்படி, அச்சிவபிரானுக்குத் திரட்டிக் கொடுத்தமையால், ஆலாலசுந்தரர் என்னுந் திருநாமம் பெற்று, திருத்தொண்டுகள் செய்து வந்தனர். வரும்போது, ஒருதினஞ் சிவபிரானுக்குத் திருப்பள்ளித்தாமங் கொய்யச் சென்றனர். அப்பொழுது உமாதேவியாருக்கு மலர்கள் கொய்யும்படி, அனிந்திதை கமலினி என்னும் இரண்டுமாதருந் திருநந்தனவனஞ் சேர்ந்தனர். அங்கே அவ்விருவர் அழகையும் ஒருவராகிய சுந்தரர் நோக்க, அவ்வொருவர் அழகை இரண்டு மகளிரும் பார்த்தனர். இடையிலே மன்மதன் பஞ்சபாணங்களையுந் தொடுத்தனன். பின்பு மந்தகாசத்தோடு சுந்தரர் சிவபிரான் மாட்டும், நெகிழ்ந்த மனத்தோடு உபயமடவாரும் உமாதேவியாரிடத்துஞ் சென்றனர். சிவபிரான் சுந்தரரைநோக்கி, மாநுடப்பிறவியிற் சேர்த்தனர். சுந்தரர் திருநாவலூர் ஆதிசைவ வேதியராகிய சடையனாரிடத்தே, அவதரித்து, ஆரூரரென்னும் அபிதானம்பூண்டனர். அவ்விரண்டு மாதருள், கமலினியார் திருவாரூரில், உருத்திரகணிகையர் மரபிலே, அவதரித்து, பரவையாரென்னும் பெயர்பெற்றனர். அனிந்திதையார் ஞாயிறு என்னுந்தலத்திலே, வேளாளர்குலத்தில், அவதரித்து, சங்கிலியாரென்னும் நாமம் அடைந்தனர். பின்னர்ச் சுந்தரமூர்த்தி வேதமுதலிய கலைகளை ஓதியுணர்ந்து, திருமணப் பருவம் உற்று, பிதாவினாலே ஒரு மணம் நடத்தப் பெற்ற வளவில், சிவபெருமான் ஒருபிராமணவேடம் பூண்டு, அம்மணப் பந்தரில், வந்து, சுந்தரமூர்த்தியைத் தடுத்தாட்கொண்டு, திருவெண்ணெய் நல்லூரில், அருட்டுறை யென்னும் ஆலயத்தை அடைந்தனர். அடைந்தசிவபிரானைச் சுந்தரமூர்த்தி நாயனார்தொடர்ந்து, "பித்தாபிறைசூடி" என்னும் திருப்பதிகம் பாடினார். பின்பு திருநாவலூரைத் தரிசித்து, திருத்துறையூரில், தவநெறியைத் தரும்படி, திருப்பதிகம் பாடி,

இர்விலே, திருவதிகையில், சிவபெருமான் திருவடி சூட்டப்பெற்று, திருமாணிகுழி, திருத்தினைநகர், ஸ்ரீசிதம்பரம் என்னுந் தலங்களிற் சென்று பாடி, சீர்காழி சேர்ந்து, அங்கே, திருக்கைலாசமலையிலுள்ள காட்சியைக் கண்டு, திருக்கோலக்கா முதலாகிய தலங்களை வணங்கி, திருவாரூர் சேர்ந்து, சிவபிரானுக்குத் தோழராம்படி, திருவருள் பெற்றனர். பின்பு பரவையாரைமணந்து, அத்திருக்கோலத்தோடு வன்மீகநாதனை வழிபட்டு வருநாளில், ஒருநாள் விறன்மிண்டநாயனார் கோபங் கொண்டமையால், திருத்தொண்டத்தொகைபாடிப்பணிந்தார். அதன்பின் குண்டையூர்க் கிழவர் தந்த நெல் மலையைப் பரவையார்வீட்டிற் சேர்க்கும்படி, கோளிலியிற் சென்று, பதிகம்பாடி, நாட்டியத்தான் குடியிற்சேர்ந்து, கோட்புலிநாயனார் தம் புத்திரிகளை மணந்துகொள்ளும் வண்ணம், வேண்டவும், அவ்விருவரையுந் தம் புத்திரிகளாக வைத்துத் திருப்பதிகம்பாடி, வலிவலஞ்சென்று, பின் திருப்புகலூரில், செங்கல் பொன்னுகப் பெற்று, திருப்பனையூரில், சிவபிரான் திருநடக்காட்சியைத் தரிசித்து, மற்றுந் தலங்களைப் பணிந்து, திருப் பாச்சிலாச்சிராமத்தில், பொன்றரும்படி, பாடி, ஏனைய திருப்பதிகளைச் சேர்ந்து, வணங்கி, திருப்பேரூரிற் சென்று, காஞ்சிநதியில், ஸ்நானஞ்செய்து, ஆலயத்தை அடைந்தனர். சுந்தரமூர்த்தி நாயனார் வருமுன்னரே, உயர்திணைப் பொருளும், அஃறிணைப் பொருளுந் தாமேயென்று வேதங்கள் எடுத்தோதுதற்கேற்ப, முன்புவேதியராய்த் தம்மைக் காட்டிப் பயனைக் கொடுத்த சிவபிரான் இழிந்ததுங் காட்டத் திருவுளங்கொண்டு, பள்ளனுகி, திருவிளையாட்டினல், வயலிற் சென்றனர். உமாதேவியாரும் பள்ளியாகி, கழனியிலே தொழில் செய்யத்தொடங்கினர். விநாயகக்கடவுளும், முருகக்கடவுளும் பள்ளச்சிறுராய், வயலின்கண், விளையாடினர். அரிபிரமேந்திராதிதேவர்கள் நுகமும், கலப்பையும், மேழியும், கொழுவும், வாரும், கயிறும், கோலும், கடாவும், வித்தும், நாறும், ஆகியஎல்லாமாகி, வந்தார்கள். சிவகணநாதர்கள் ஏவல்செய்கின்ற பள்ளர்களாய், சிவபிராணுகிய பட்டிப்பள்ளர் ஏவல்

வழி உழுகின்றவரும், நீர்பாய்ச்சுகின்றவரும், வரப்பின்அரு கு சீக்கின்றவரும், பரம்படிக்கின்றவரும், நாற்று நடுகின் றவரும், விதைக்கின்றவரும் ஆனார்கள். இலக்குமி, சரசு வதி, இந்திராணி முதலாயினோர் பள்ளிகளாய், உமாதேவி யாகிய பச்சைப்பள்ளி யோடு நாற்று நட்டார்கள். இங்ஙு னம் இவர்கள் கழனியிலே, தொழில்செய்துகொண்டிருந்த போது, ஆலயத்திற் சென்ற சுந்தரமூர்த்தி நாயனார் சிவபி ரானை அங்கே, தரிசிக்கப் பெறாமல் இடப தேவரை வினவி னார். அதற்கு இடபதேவர் வன்றொண்டனுக்கு ஒன்றுஞ் சொல்லவேண்டாமென்று சிவபிரான் ஆஜ்ஞாபித்தபடியா ல், கண்ணினாற் காட்ட, அக்குறிப்பின் வழியே நாயனார் வய லிடத்தே, ஆராய்ந்துவந்து, சுவாமியையும், அம்மையையுங் கண்டு வணங்கினர். நாயனாரோடு சிவபெருமான் கரையே றி, காஞ்சிநதியில், ஸ்நாநஞ்செய்து, ஆலயத்தை அடைந்து, இடபதேவர் முகத்தை மண்டொடு கருவியாற் சேதிக்க, அதற்கு இடபதேவர் அஞ்சி, வணங்கி, கொம்பினாலே ஒரு தீர்த்தம் அகழ்ந்து, சிவலிங்கந் தாபித்துப் பூசித்து, குற்ற த்தினின்று நீங்கினார். பின்னர்ச் சிவபிரான் வெள்ளியம்ப லத்திலே, திருநடனஞ் செய்தார். அதனைத் தரிசித்து, நா யனார் பொன் தரும்படி பாடியுங் கொடாமல் உனதுபாட் டுக்குப் பரிசில் நமதாட்டே என்றும், இது முத்தித்தலமாத லால், மற்றைய தலங்களில், பொன் தருவோம், சேரமா னுக்கும் உன்செய்தி தெரிவித்தோம் என்றுஞ் சிவபிரான் அருளிச்செய்ய, நாயனார் விடைபெற்று, பலதலங்களையும் பணிந்து, பழமலையிற் சென்று, பொன் பெற்று, ஆற்றிலி ட்டு, கடம்பூர் வணங்கி, ஸ்ரீசிதம்பரஞ்சேர்ந்து, பொன்னம் பலத்திலே, ஸ்ரீஞானநடராஜர் பேரூரின்கண்ணதாகிய வெ ள்ளியம்பல நடனத்தைக்காட்டத் தரிசித்து, "மடித்தாடுமடிமைக்கள்" எனத் திருப்பதிகம் எடுத்து, அதில் "பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாமன்றே" என்று சிறப்பித்துப்பாடி யருளி, திருவாரூர் சேர்ந்து, ஆற் றிலிட்டபொன்னைக் குளத்திலெடுத்துப் பரவையாருக்குக் கொடுத்து, சோணாட்டுத் திருப்பதிகளையும், நடுநாட்டுத்தி

ருப்பதிகளையும், தொண்டைநாட்டுத் திருப்பதிகளையுந்தொழுது, ஸ்ரீகாஞ்சியில், திருவேகம்பமுதலிய தலங்களைத் தரிசித்து, திருவோணகாந்தன்றளியில், பொன்பெற்று, திருவொற்றியூர் உற்று, சங்கிலியாரோடுகூடி வாழ்ந்து, திருவாரூர் சேர்ந்து, பரவையார் ஊடல் தீர்க்கும்படி, தூது செல்லும் வண்ணம் பாடி, நாகைக்காரோணத்திற் பல பொருள் பெற்று, திருவாரூரிற் சேரர்பிரான் வர, அவரோடு கலந்து, மலை நாட்டுக்குச் செல்லும் போது, மத்தியிலே, திருவையாற்றிற் காவேரிநதியைத் தடுத்து, தரிசித்து, திருவஞ்சைக்களஞ் சேர்ந்து, சேரமான்பெருமாணாயனாரிடத்தே, பெரும் பொருள் பெற்று, இடையே பறி கொடுத்து, திருமுருகன் பூண்டியிற் பெற்று, திருவாரூருக்குச் சென்று, மீட்டும் மலை நாட்டுக்குச் செல்லும் மார்க்கத்திலே, திருப்புக்கொளியூரிலே, முதலைவாய்ப் பிள்ளை தரும் வண்ணம் பாடி, திருவஞ்சைக்களஞ்சேர்ந்து, வெள்ளையானைமீது அரிபிரமேந்திராதி தேவர்சூழத் திருக்கைலாசமலை சேர்ந்து, சிவபெருமானுக்குப் பழைய திருத்தொண்டு செய்துகொண் டிருந்தனர். பரவையாரும், சங்கிலியாரும் முறையே அநிந்திதையாரும், கமலினியாரு மாகி, திருக்கைலாசத்தை அடைந்து, உமாதேவியாருக்குத் திருப்பணி செய்துகொண்டிருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

—0—

## ௧௭. அழகியதிருச்சிற்றம்பலப்படலம்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருப்பேரூரை அடுத்து, வணங்கிச் சென்று, தில்லைச்சிற்றம்பலத்திலே, திருநடராஜரைப்பாடுந் திருப்பதிகத்தில் "பேரூரர் பெருமானைப் பெற்றாம்" என்று அருளிச்செய்த தேவாரத்தைத் தில்லைவாழந்தணர் கேட்டு, நாயனாரை நோக்கி, இத்தில்லைத்தலம்போல் இவ்வுலகத்திலே, ஒருதலம் உண்டோ வென்று வினவியதற்கு "இக்கனகசபையிலே, தாண்டவஞ் செய்வது போலப் பேரூர் இரசத சபையிலே, சிவபிரான் திருநடனஞ் செய்தருளுகின்றார். அத்தலத்தில், முத்தி தருவதன்றி, தருமார்த்த காமங்களைத் தருதலில்லை" என்று நாயனார் நவின்றனர். உட

னே தில்லைவாழந்தணர் திருப்பேரூர்சேர்ந்து, ஸ்ரீகாஞ்சிநதியில், ஸ்நாநஞ்செய்து, திருமேனியிலே, சிவசின்னங்களாகிய திருநீறும், கண்டிகையும் பூண்டு, சுவாமியையும், அம்மையையுந் தரிசித்து, அரசம்பலவாணரை வணங்கி, மற்றைநாள், காலவனீச்சரத்திற்கு அக்கினிதிக்கிலே, சிவலிங்கந் தாபித்துப் பூசித்து, வதிந்தார். அப்பொழுது வெள்ளியம்பலத்திலே, சிவபிரான் திருநடனஞ் செய்ய அதனைத் தில்லைவாழந்தணர் தரிசித்து, ஆன்மாவுஞ் சிவமும் அயிக்கமாய், மனம் அழிந்து அவசமாய்நின்று துதித்து, விடைபெற்று, கீழைச்சிதம்பரஞ் சேர்ந்து, பண்டைக்காலம்போல் வாழ்ந்திருந்தனர். அவ்வந்தணர் பூசித்த ஆலயத்திற்கு அழகிய திருச்சிற்றம்பல மென்றும், சுவாமிக்கு அழகிய திருச்சிற்றம்பலமுடையாரென்றும் பெயர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## கஅ. தீர்த்தப்படலம்.

திருப்பேரூர் எல்லை பட்டீச்சுரத்தைச்சூழ மூன்று யோசனை அளவினை யுடையது. அவ்வெல்லையில், தேவர் அசுரர் முனிவர் முதலாயினோர் தாபித்த சிவலிங்கங்களுக்கும், தீர்த்தங்களுக்கும் அளவில்லை. பூருவ பரார்த்தத்திலே, பிரமா சிருட்டித்தொழிலைப்பற்றி, சிவபிரானைநோக்கி, தவஞ்செய்தனர். அப்பொழுது, முன்னர் அதிகாரஞ்செய்த பிரமர்கள் நாரணர்கள் இருடிகள யோகிகள் தேவர்கள் அனைவருங் கூடி, வீடுபேற்றைநாடி, பலவகைத்தவங்களைப் புரிந்தனர். அவர்களுக்குத் திருவருள் செய்யக் கருதி, சிவபெருமான் உமாதேவியார் காண அப்பேரூர் வெள்ளியங்கிரியிலே, திருநடஞ்செய்தருளினார். அந்நிருத்தத்தை அனைவருந்தரிசித்து, ஆனந்தத்தில், மூழ்கி யிருக்கும்போது, எம்பெருமான் திருவுருவிலே, தரித்த சர்ப்பங்கள் ஆடல்வேகத்தைச் சகிக்காமல் விடத்தை உமிழ, அவ்வெம்மைதாக்கி, சமஸ்தருங் காத்தருள வேண்டுமென்று முறையிட்டு, வருந்தினர். அதற்குத் திருநடராஜர் இரக்கமுற்று, கங்கையைநோக்கி, விடவெம்மை தணியும்வண்ணம் நதியாக ஒழுகும்படி, ஆஜ்ஞாபித்த

ளவில், அவ்விரசதகிரியின் செவியடி யுரோமமான வன்னிவிருக்ஷ மூலத்தினின்றுங் கங்கையானது பெருவெள்ளமாக எழுந்து சென்றது. அனைவரும் விடவெப்பத்தாலாய தாகசோகங்கள் நீங்கும்படி, அந்நீரையுண்டு, அதில்மூழ்கி, முத்தியுஞ் சித்திக்கப் பெற்றார்கள். அந்நதிக்குச் சிவநதி, அமிர்தவுந்தி, தக்ஷிணகங்கை, ஆதிகங்கை, ஞானதோயை, பிப்பிலநதி, பிறவாநெறி, கலிகன்மநாசினி, விருத்தகங்கை, பிரயாகை, காஞ்சிநதி என்று பல பரியாய நாமங்களுண்டு. அத்திர்த்தத்தைத் தீண்டிய கீழானவருஞ் சிவசரியை முதலியவைகளாற்சித்திக்குஞ் சிவசாலோகாதிமுத்திகளைப்பெறுவர். அதிபாதக மகாபாதக உபபாதகங்களினின்று நீங்குவர். அந்நதி தீரத்தில், தபஞ் செபந் தியானம் யோகம் வேள்வி முதலியவற்றைச் செய்தால், ஒன்று அனந்தமாய்ப் பெருகும். வடகயிலாயத்திலுள்ள பிரமதீர்த்தத்தில், ஒருமண்டலம் மூழ்கி, அதனைப் பருகினோர்க்கு மலடுகளும், பேய் முதலியவும், நோய்களும், நீங்கும். இஷ்டகாமியங்கள், எளிதிற் கைகூடும். இறுதியிற் பிரமபதங் கிடைக்கும். அப்பிரமதீர்த்தத்திற்குக் கிழக்கேயுள்ள காலவதீர்த்தத்தில், ஸ்நாநஞ்செய்தால், பிறவி நீங்கும். பட்டிநாயகருக்குக் கீழைத்திசையிலுள்ள சூரியதீர்த்தம் கண்ணொளிதந்து, இறுதியில் ஆதித்தியவுலகிற் சேர்க்கும். இந்திரதீர்த்தம் இட்ட காமியங்களை ஈந்து, முடிவில், இந்திரலோகத்தில், இருத்தும். பட்டீச்சுரத்துக்கு ஈசானதிக்கில், கந்ததீர்த்தத்தின் மூழ்கினோர் பேய் பூதமுதலியவற்றினீங்கி, செல்வம், வீரம், ஞானம், மோக்ஷம் என்பவைகளை எய்துவர். அகஸ்தியமகாமுநிவர் மலைக்குக் கீழ்பால், அகஸ்திய தீர்த்தம், யோகி தீர்த்தம், சித்த தீர்த்தம் என்பவை வேண்டியவைகளைக் கூட்டுவிக்கும். பட்டீச்சுரத்தின் உத்தரதிக்கில், நச்சுப்பொய்கைநீரை அருந்தினோர் இறந்து முத்தி சேர்வர். சித்தர்கள் கைப்படில், தாமிரமுதலியவற்றைப் பொன்னாக்கி, அற்புதங்கள் செய்வர். காஞ்சி நதியின் வடகரையில், வசிட்டதீர்த்தம், வாமதேவ தீர்த்தம், பார்க்கவதீர்த்தம், வியாழதீர்த்தம் நான்கும் பெரும்பயனைத்தரும். வயிரவக்கடவுள் திருமுன்பு சிங்கக்கிண

ருகிய சிங்கதீர்த்தமும், உமாதேவி சந்நிதியில், தூர்க்கைதீர்த்தமும், க்ஷேத்திரபால தீர்த்தமும், அமுதலிங் கேசர் ஆலயத்திற்குத் தென்றிசையில், காளிதீர்த்தமும், சக்கரதீர்த்தமும், தென்கிழக்கெல்லையில், குலசேகரதீர்த்தமும், நந்திதீர்த்தமும், அக்கினிதீர்த்தமும், ஏமதீர்த்தமும், யக்ஷதீர்த்தமும், சண்டேசர் ஆலயத்திற்கு வாயுதிசையில், சண்டேசுரதீர்த்தமும், சோமதீர்த்தமும், மரகதவல்லியம்மை யாலயத்திற்கு வாயுதிக்கில், பிரமதகணதீர்த்தமும், பட்டீச்சுரத்திற்கு வாயுதிசையில், சப்தமாதர்கள் தீர்த்தமும் விளங்கும். மேல்பாலுள்ள பாலதீர்த்தத்தில், மூழ்கினால், நரை திரை மூப்புகள் அகலும். முசுகுந்த தீர்த்தமும், அங்கிரதீர்த்தமும், இந்திரதீர்த்தமும், சோழதீர்த்தமும், காமதேனுதீர்த்தமும், கன்னிகைதீர்த்தமும் ஸ்ரீகாஞ்சிரநதியின் மேலைத்திசை முதற் கீழைத்திசை யளவும் உள்ளன. இத்தீர்த்தங்களின் மூழ்குவார் மண்ணுலகிற் செல்வமும், விண்ணுலகிற் போகமும், பின்பு வீடுங் கூடுவர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## கக. விம்மிதப்படலம்.

பேரூரிலே, சிவமயமாகிய வெள்ளியங்கிரியில், அநேக விம்மிதங்கள் உள்ளன. யாவை எனில்? தன்னை யடுத்தவரை அயலோர் கண்ணுக்குக் காட்டாத திவ்வியாஞ்சனதாரு, காலிற் பாதுகையாகத் தரித்தால், ஆகாயத்திற்கொண்டு செல்லுந் தாரு, பசிதாகந் தீர்க்குந் தாரு, காயசித்தி தருந் தாரு, யோகசித்தித்தாரு முதலிய தாருக்களும், மாங்கிசபேதி முதலியவும், வசியாதிகளைத் தருவனவுமாகிய கொடிகளும், செடிகளும், அயக்காந்த முதலியவும், நாற்கோட்டியானைகளும், நவரத்தினங்களும், அவைகள் விளைநிலங்களும், ஜலஸ்தம்பஞ் செய்தன்முதலிய மணிகளும், இரசமணிக்கிணறு முதலியவும், அற்புதக்குகைகளும், அற்புதமான சரகுகளுமாம். அவ்வெள்ளிமலைக்குத் தென்பால், ஏமகிரியில், ஏமபுரம் ஒன்றுண்டு. அதில், விரிந்த ஒருகுகையும், அதில், ஒருதாமரையோடையும் உளது. அதுசருவசித்தியையுந்தரும். அம்

மலைக்குத் தெற்கே யுள்ள பாற்கிணற்றுநீரை அள்ளியுண்டால், ஆறுமாசம் பசிதாகமில்லையாகும். அதற்குக்கீழ்திசையில், மூன்று யோசனை ஒளிவிடுஞ் சோதிவிருக்ஷ முண்டு. அதில், சர்க்கரை நதி முதலிய நதிகளுண்டு. அந்நதிக்கரையில், சித்தர் சாத்தியர் தங்குவர். அந்நதிக்கு மேல்பால், அத்திமரச்சோலையில், தேவர் முனிவர் முதலியோர் தவஞ்செய்வர். அதன்பக்கத்தே, சேர்ந்தபொருளைக் கல்லாக்குஞ் சிலாநதி தீரத்தில், கருதியவுடன் மரணமும், முத்தியுஞ் சித்திக்கும். அங்கே ஔடதங்கள் அநேக முள்ளன. அதன்வடக்கே குங்கிலியமரப்பாலினால், அநந்தசித்திகளாகும். அதன் ஈசானதிக்கிலிருக்கும் பளிங்குமலைச் சிலையினாற் சிவலிங்கம் இயற்றிப் பூசித்தால், விரைவிலே சிவபிரான் கருணை புரிவர். அப்படிகவரையின் வடபால் ஒரு பெரியகுகை உண்டு. அதற்கடுக்கப் பாரதசரசின் கரையில், கோடிதூணுடைய கனகமண்டபம் உளது. அதிலே, சிவலிங்கப்பெருமான், விநாயகக்கடவுள் முருகக்கடவுள் அரிபிரமேந்திராதி தேவர்கள் வழிபடும் வண்ணம் எழுந்தருளியிருப்பார். அங்கே காலந்தோறும் முழங்கும் பஞ்சதுந்துபியின் ஒலி முத்திகாமிகள் செவிக்குப் புலப்படும். அம்மண்டபத்தின் வடமேற்குத் தென்மேற்கிலுள்ள ஓடைக்கரையில், சந்தானகரணிமுதலிய பலமருந்துகள் உண்டு. அங்குள்ள சந்தன மரச் செறிவில், ஐந்தலை நாகம், எழுதலைநாகங்கள் இயங்கும். பிரமகிரியில், சிலாநதி முதலியன வுண்டு. விண்டுவரையில், விஷ்ணுதீர்த்தம் ஏல முதலியன அதிசயமாக வுள்ளன. மருதவரையில், காமதேனு உலாவும். வடகயிலையில், இறவாப்பனையும், பிறவாப்புளியும் உறையும். பன்னீர் விருக்ஷமாகிய சிந்தேசமரம் ஆதிலிங்கமூர்த்திக்கு அருகேயுள்ளது. அங்கே காஞ்சிவிருக்ஷமுமுளது. அதன் மூலத்தினின்று செல்லுநதிக்குக் காஞ்சிநதியென்றுபெயர். இன்னும் பல அதிசயங்களு முண்டு.

திருச்சிற்றம்பலம்.

—o—

## உ0. வியாதன் கழுவாய்ப்படலம்.

ஸ்ரீகாசிக்ஷேத்திரத்திலே, சிவபிரானைத் தொழுது, பலமுனி

வருந் தவஞ் செய்யுங்கால், ஒரு தினம் விஷ்ணுவே பரம் பொரு ளென்றும், உருத்திரனே பரம்பொரு ளென்றும் தம்முள்ளே கலாஞ் செய்து, வியாச முனிவரை வினவினர். அதற்கு வியாசமுனிவர் "வேதங்க ளெல்லாம் விளக்கும் பரம்பொருள் விஷ்ணுவே" என்றபோது, விஷ்ணு பக்ஷமாகிய முனிவர்கள் மகிழ்ந்தனர். உருத்திர மூர்த்தியே பரம்பிரம மென்னும் முனிவர் குழாங்கள் வியாச முனிவரை நோக்கி, "உயர்ந்தோர் அனைவருஞ் சிவபிரானே பரமென்று தெளிந்திருக்கவும் அதற்குவிருத்தமாக நீவிர் கூறினமையால், ஸ்ரீவிசுவேசர் சந்நிதானத்தில் விஷ்ணுவே பரமென்று கூறுவீராயின், அதனை உறுதியாகக் கொள்ளுவேம்" என்றனர். அதனைக்கேட்ட வியாசமுனிவர் தீயூழினாற் சற்றும் அஞ்சாது கங்காநதியில், மூழ்கி, ஸ்ரீவிசுவேசர் திருமுன்னர்ச் சென்று, சிரசின்மீது இரண்டு கைகளையுங் கூப்பிக் கொண்டு, "விஷ்ணுவே பரம்" என்று சொன்னார். அதனையுணர்ந்த திருநந்திதேவர் வியாசமுனிவரை நோக்கிக் கோபித்துச் சாபமிட்ட வளவில், மேலே உயர்த்திய கையோடு நாவுந் தம்பிக்க, ஸ்ரீவிசுவேசர் சந்நிதியில், நாட்டிய வெற்றித்தம்பம் போல வியாசமுனிவர் நின்றார். விஷ்ணுவைப் பரமென்று கருதும் மதத்தாரன்றி மற்றைய பல மதத்தினரும் ஸ்ரீவிசுவநாதரே பரம்பிரம மென்று மெய்ம்மையாக வுணர்ந்து உய்ந்தார்கள். அப்பொழுது, வியாசமுனிவர்விஷ்ணுவைத் தியானிக்க, அவர் அங்கே வந்து, வியாசரை நோக்கி, "ஹே வியாசனே, நீ என்னையுங் கெடுக்க, இங்கே எத்துணைப்பெருங் கொடுஞ்செய்கை புரிந்தாய், சிவபெருமான் அருட்சத்தி எங்கும் வியாபித்திருத்தலால், என்போன்ற தேவர்களாகிய பசுக்களையும் பதியென்று வேதங்கள் உபசரித்து ஓதியதாம். ஆதலால், தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியிருக்குஞ் சிவபிரான் றிருவடிகளைத்தியானித்து, உய்யக்கடவாய்." என்று சொல்லி மறைந்தனர். வியாசமுனிவர் அதனைக் கேட்டு, சிவபெருமானைச் சிந்தித்து, காத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கவும், பிரமாவும், விஷ்ணுவும் இருபக்கத்தும் பாதுகைகளைத் தாங்கும் வண்ணம், இடபா

ரூடராய், விசுவநாதர் எழுந்தருளி, வியாசரைநோக்கி, "நி ன்னாலே, முதல்வனாகச் சுட்டப்பட்ட விஷ்ணு நமது அகத் தொண்டின்கண்ணே நிற்பதைக் காண்பாய், நமது தன்மை யிற் சிறிதும் அறியாய், நீ புரிந்த குற்றம் பெரிதாயினும் நம்மைத் தியானித்தபடியால், பேரூரைச் சார்வாயாகிற் றீரும்." என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார். உட னே வியாசமுநிவர் பேரூர் சேர்ந்து, ஸ்ரீகாஞ்சிநதியில், மூழ்கி, வெள்ளியங்கிரியை அடுத்து, சுவாமியைத்தரிசித்துத் துதித்தவளவில், கைகளுந்தாழ்ந்து, நாக்கும் அசைவுற்றது. அப்பொழுது கைகளாற் சிவபூஜைசெய்து, நாவினாற் புகழ் ந்து, மகிழ்ந்து, வாழ்ந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## உக. விசுவாமித்திரன் வரம்பெறுபடலம்.

பிரமாவும், விஷ்ணுவும் யான் பரம் யான் பரம் என்று அளவில் காலம் கலாஞ் செய்த வழி, அதனை அகற்றும்படி, திருவுளங் கொண்டு, சிவபெருமான் எதிர் தோன்றினார். அப்போது விஷ்ணு அஞ்சி ஓடினர். பிரமா அஞ்சாது நின்று இகழ்ந்தவழி, சிவபிரான் கோபங்கொள்ள, அதிலே, வயிர வக்கடவுள் தோன்றி, இகழ்ந்த பிரமன் சிரத்தைக் கொ ய்து, செருக்கினைக் களைந்தனர். பின்பு விஷ்ணுவாதி தே வர்கள் உதிரத்தையும் வாங்கி, மனத் தருக்கைக் கெடுத்து, ஸ்ரீகாசி க்ஷேத்திரஞ் சேர்ந்து, காவற் றொழிலைக் கைக்கொ ண்டு, அங்கே தங்கும் ஆன்மாக்கள் புரியும் பாவத்தைத் தமது புயத்திற் பொருந்துஞ் சூலப்படையிற் சேர்த்துச் சுழற்றி, அகற்றும் அற்புதத் தொழிலும் பூண்டனர். இங்ங னும் இயமனது ஆணை செல்லாத ஸ்ரீகாசி மான்மியத்தை நோக்கி, விசுவாமித்திரமுனிவர் வந்து, அத்திருப்பதியில், வதிந்து, சிவயோகஞ் செய்யுங்கால், ஒருதினத்திலே, சிவ பிரான் திருப்பேரூரின் கண்ணதாகிய வெள்ளியம்பலத்தி லே, திருநடனஞ்செய்து காட்டி, அப்பேரூர் எல்லையில் உள் ள உயிர்கள் இயற்றும் பாவங்களைத் தண்டஞ் செய்யாது போக்கி, வீட்டிற் கூட்டும் விதத்தையும் விளக்கியருளினார்.

அங்ஙனம் பேரூரின் பெருமையை யோகக்காட்சியிற் கண்டமுனிவர் அத்திருப்பதியை அடுத்து, காஞ்சிநதியில், முழுகி, சுவாமியையும், அம்மையையும் வழிபட்டு, வெள்ளியம்பலத்தையுந் தரிசித்தார். மற்றைநாட் காலையில், காஞ்சியாற்றில், முழ்கி, நித்த நியமங்களை முடித்து, சிவலிங்கந் தாபித்து, பூசித்து, சிவயோகத்தில், வசிக்குங்கால், ஒருநாள், சிவபிரான் இடபாரூடராய், எழுந்தருளினர். அப்பொழுது முனிவர் வணங்கித் துதித்து, எம்பெருமானிடத்தே, அடியேனுக்குப் பத்தியைத் தந்தருளுக. முத்தியைத்தரும் இத்திருப்பதியில், யாவர்க்கும் ஏனைத்தர்மார்த்தகாமங்களையும் அருளுக. இத்தலங் குருக்ஷேத்திரமென்னுந் திருநாமம்பெறுக. என்பது முதலாகிய வரங்களை வேண்டிப் பெற்று, அப்பதியிலே, சிவயோகத்திற் பயின்று வதிந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௨௨. அந்தகனரசுபெறுபடலம்.

சிவபிரான் விசுவாமித்திர முனிவருக்கு அருளிய வரத்தினால், தவத்தினராகிய ஆன்றோரேயன்றி, பாவிகளும் ஆதிபுரியை அடைந்து, வழிபட்டு, முத்தியைப் பெறுதலால், நிரயத்தில் அழுந்துவாரின்றி இயமலோகம் பாழாயிற்று. உடனே இயமன் அப்பதியை அடுத்து, தக்ஷிணகங்கையாகிய ஸ்ரீகாஞ்சிநதியில், ஸ்நாநஞ் செய்து, சிவ சின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்து, பட்டீசரையும், மரகதவல்லியம்மையையும்பணிந்து,இரசதசபையையுந்தரிசித்து, ஓரிடத்தே, வதிந்து, திருவைந்தெழுத்தை ஜபித்தான். மற்றைநாட் காலையில், நித்தியகர்மங்களை முடித்து, சிவலிங்கப்பிரதிட்டை செய்து, பத்தியோடு பூசித்து, வரும்போது, ஒருநாள் நாயினேனை அடிமைபூண்ட பரமகருணாநிதியாகிய சிவபெருமான் இடபாரூடராய், எழுந்தருளி, வினவியதற்கு இயமன் " பாவிகளும் பேரூரைச் சேவித்து, வீடுகூடுதலால், அடியேன் அரசாட்சி நீங்கினமைபற்றி, இங்கே வந்தனன்." என்று விண்ணப்பஞ் செய்ய, அதனைக் கேட்டருளிய மகாதேவர் " எவ்விடத்தே புண்ணியஞ் செய்தாலும் அவ்வுயிர்க

ளின் மாட்டு, நினதாணை செல்லாதல்லவா? அன்றேரே நம்மாட்டன்புடையராய், முத்திபெறுவர். ஏனையோர் நின தாணைக்குட்படுவர். உனதரசினைச் செலுத்துவாய்." என்று திருவாய் மலர்ந்து, அவ்வருட்குறியில், அந்தர்த்தானமாயி னர். இயமன் தனது நகரைச் சார்ந்து, செங்கோல் செலு த்தி, அரசு புரிந்தான். பேரூரில், எழுந்தருளியிருக்குஞ் சிவ பிரான் கிரேதாயுகத்தில், விசுவநாதர், திரேதாயுகத்தில், அமிர்தலிங்கேசர், துவாபரயுகத்தில், தருமநாதர், கலியுகத் தில், கோட்டீச்சுரர் என்னுந் திருநாமங்களைப் பெறுவர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௨௩. தலவிசேடப்படலம்.

பிரமா ஒருகற்பத்திலே, சிவபெருமான் திருவருளினால் உலகத்தையும், உயிர்களையும் படைத்து, பல சிவாலயங்கள் தீர்த்தங்களையும் நிருமித்து, அற்பவுணர்வினாலே, இறுமாந் திருக்கும்போது, "திருப்பேரூரும், ஸ்ரீகாஞ்சிநதியும் நின் னாற் படைக்கப்பட்டனவோ" என்று ஆகாயத்தினின்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. அக்கணமே பிரமா, தேவர் முனி வர்சூழச்சென்று, இமையவரைக் கண்ணதாகிய ஸ்ரீகைலாச கிரியிலே, தேவதேவரைப்பணிந்து, பேரூர்மான்மியத்தைக் கேட்க, அதற்குப் பரசிவன் அருளிச்செய்வாராயினர். பிர மனே, "நீ பூர்வபரார்த்தத்திலே, சிருட்டித்தொழில் கைகூ டும்படி, எமதடியிற் பூஜித்திருந்த காலையில், நாமே பேரு ரைப்படைத்து, நடனமுஞ்செய்தோம். அற்றைத் தினமு தல் ஆன்மாக்கள் நமதடியிற் கலக்கும் வண்ணம், அனவர தமும் ஆனந்த தாண்டவம்புரிகின்றோம். இரசதகிரியும் ஆயி னேம். நமது முடியிலுள்ள கங்கையே காஞ்சிநதியாகத் தவழும். அத்தலத்தை அத்தாணிஸ்தானமாகக் கொண்டு வீற்றிருக்கின்றோம். அத்தலம் நித்தியமென்பதற்கு இறவா ப்பனை யிருத்தல் முதலாயினவே சான்றாம். நித்தராயிருக் கக் கருதினோர் அங்கேநம்மை வழிபட்டுச் சிரஞ்சீவியாயிருக் கின்றார். முத்திபெற்றவர் அளவில்லாதவர். விசுவாமித்தி ரன் அங்கே தவம்புரிந்து, வரங்கள்பெற்று, வசிட்டனோடு

விரோதித்து, பிராமணமுனிவனாக நினைந்து, மீட்டுந் தவஞ் செய்யுங்கால், அயோத்திநகரின் அரசனாகிய திரிசங்கு தன் குலகுருவாகிய வசிட்டனையும், அவன் புத்திரரையும் அடுத்து, உடலோடு சுவர்க்கத்தில், வசிக்க விரும்பியவழி, இப்போது அத்துணைப் பருவம உனக்கு அமையாமையாற் சில காலஞ் சென்று, யோசிப்போ மென்றதற்கு மற்றொரு குருவைச் சரணம் புகுந்து, பெறுவாமெனச் சொல்லிய திரிசங்கு அவ்வசிட்டனாதியரால், நீசனாகக்கடவாய். என்னுஞ் சாபம் பெற்று, விசுவாமித்திரனைச் சேர்ந்து, நிகழ்ந்தவைகளைக் கூறினன். கூறவும் விசுவாமித்திரன் ஒரு வேள்வி செய்து, திரிசங்குவை இந்திரன்சபை நடுவே இருத்தினன். இருத்தியவளவில், இந்திரன் கோபித்து, நீசனாகிய திரிசங்குவைப் பூமியில், விழும்படி தள்ள, அத்திரிசங்கு விசுவாமித்திரனை அழைத்து, காத்தருளுக என முறையிட்டு, விழும்போது, விசுவாமித்திரன் நெய்வார்க்குஞ் சுருக்கினைவீசி, அந்தரத்திலே, திரிசங்குவை நிறுத்தி, சிலநக்ஷத்திரங்களைப்பெயர்த்து, புவனம் படைக்கத் தொடங்கினன். அப்போது அமரர்கள் வணங்கிய வளவில், அந்தர சுவர்க்கம் இயற்றி, திரிசங்குவை அதிலிருந்து, போகம் அனுபவிக்கும்படிசெய்து, தவ வலிமையினால், பிராமணமுனியெனும் பெயர் பெற்றனன். இங்ஙனந் தவமுற்றுதலால், தவசித்திபுர மெனவும், நாம் ஆனந்ததாண்டவஞ் செய்தலால், மேலைச்சிதம்பர மெனவும், நமதுருவாகிய வெள்ளிமலையைத் தன்னிடத்துக் கொண்டு, பாவத்தைப்போக்கி முத்தியைத் தருதலால், பேரூரெனவும், பத்திபுரி, பரம்புரம், ககனபுரி, போதபுரம், நாட்டியபுரம், ஆதிபுரி, வன்மீக நகரம், மேருநகரம், ஞானபுரம், பிரமநகரம், குருக்ஷேத்திரம், பசுபதிபுரம், இரசதசபை, குந்தகானம், சிற்சபை, கலியாணபுரம், போதிக்கானம், தேனுபுரம், பிறவாநெறி ஆதியாகவும் அப்பேரூர் காரணப் பெயர்கள் பூண்டன" என்று, திருவாய்மலர்ந்தருளினார். பின்னர்ப் பிரமா புறவிடைபெற்று, திருப்பேரூர் சேர்ந்து, காஞ்சிநதியில், மூழ்கி, சுவாமியையும், அம்மையையும் வணங்கி, வெள்ளியம்பலத்தையுந் தரிசித்து, சிலதினம் வதிந்து, பின்பு சத்தியலோகஞ் சார்ந்து, வாழ்ந்திருந்தார்.—திருச்சிற்றம்பலம்.

## உச அங்கிரன்கதிபெறுபடலம்.

வங்கதேசத்திலுள்ள வனத்தில், அங்கிரனென்னும் வேடன், மனைவி, மக்கள் சுற்றங்கள் சூழ, பெருஞ் செல்வமுற்று, படைக்கலங்களோடு பலருந்தன்னைப் போற்றும்படி, வழிச்செல்வோர் பொருள்களை அபகரித்து, வாழுங்கால், மாமகதீர்த்த ஸ்நாநஞ்செய்யவும், மணங்கள்செய்யவுஞ் சுற்றத்தவர்களோடு பிராமணர்கள் அக்காட்டுவழியே செல்வாராயினர். சென்று, முடுக்கரை அடுத்த வுடனே அனைவரையுங் கொன்று, இரத்தினாபரணங்களையும், பொன்னணிகளையும், பீதாம்பராதி வஸ்திரமூடைகளையும், எருத்துகளின்மீது ஏறறிய திரவிய மூடைகளையுங் கொள்ளை கொண்டு தனதிடத்தை அடைந்தான். அப்பொழுது, மக்கள் முதலாயினர் ஒருங்குகூடி, "பொருள்களை மாத்திரம் அபகரியாமல் அனைவரையுங் கொலை செய்தமையால், அரசர் அறிந்து, குலத்தோடு எங்களை ஒழிப்பார்" என்று தம்முள்ளே துணிந்து, அவ்வங்கிரனை விலக்கினர். விலக்கிய அற்றைநாள் அர்த்தராத்திரியில், மக்களையும், சுற்றத்தாரையுங் கொன்று, அவ்விடத்தைவிட்டு, தக்ஷிணகைலாசத்தின் புறத்திற்சேர்ந்து, பலமிருகங்களையும், பக்ஷிகளையுங கொன்று, பக்ஷித்து வரும்போது, ஒருநாள் ஓரந்தணன் பத்தினியோடுவர, அவ்வேதியனைக் கொலைசெய்து, அவன்பததினியைக் கைப்பற்றி, இன்பம் நுகர்ந்தனன். பின்பு வேட்டமாடவிரும்பி, வில்லோடுகாட்டில் உழன்றமையால், பசியும், தாகமுமுற்று, திரும்பும்போது, காஞ்சிநதியைக்கண்டு, சமீபித்து அந்நீரையுண்டு, கரையிலேறுங்கால், ஒருபாம்பு தீண்டி, மாண்டனன். அவனை இயமதூதர் கொண்டு போகின்ற மார்க்கத்தில், சிவகணங்கள் அத்தூதர்களைத் தண்டித்து, அங்கிரனை விமானத்தில், ஏற்றி, திருக்கைலாசத்திற் சேர்த்தினர். இதனையுணர்ந்த இயமன் திருக்கைலாச பதியை அடுத்து, வணங்கி, நிகழ்ந்தவைகளை விண்ணப்பஞ்செய்ய, அதற்குச் சிவபிரான், "அங்கிரன் சிறிதும் புண்ணியம் புரியாத பெரும்பாதகனேயாயினும், பேரூரின்கண்ணதாகிய நமதுருவான வெள்ளியங்கிரியை அடுத்து, நித்தமுந் தரிசித்தமை

யாலும், காஞ்சிநதிநீரைப்பருகிக் கரையில் இறந்த அவனு ருவம் அந்நதிநீரில், உருண்டு விழ, அதனை நரிகள் திருநீற் றுமேட்டில், இட்டமையாலும் பாவங்களெல்லாம் போய், புண்ணியவானாய், நமது கயிலை மலையை அடைந்தான். ஆத லால், பேரூர் எல்லையினன்றி மற்றைய எல்லையில், மரித் தோர்மாட்டு, உனது அதிகாரத்தைச்செலுத்துவாய்" என்று திருவாய் மலர்ந் தருளினார். உடனே இயமன் வணங்கி விடைபெற்று, தன் பதியை எய்தி அதிகாரஞ் செலுத்துவா னாயினன்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௨௫. கௌரிதவம்புரிபடலம்.

பிரமாவின் புத்திரனாகிய தக்ஷன் பரசிவனைப் பணி ந்து, திரிலோகாதிபதியாய், வாழுங்கால், தவத்தினாலே, உமாதேவியைப் புத்திரியாகப்பெற்று, சதிதேவி யென்னும் நாமகாரணமிட்டு, சிவபிரானுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். பின்பு வேள்வி புரிய விரும்பி, தன்னுடைய மருகராகிய சிவபெருமானுக்கும், புத்திரியாகிய உமாதே விக்குந் தெரிவிக்கும் பொருட்டு, திருக்கைலாசமலையைச் சேர்ந்தான். அப்போது, சிவபிரான் ஒருத்தரமும் அருளா திருந்தமை நோக்கி, தக்ஷன் அந்திருமலமூர்த்தியை இகழ் ந்துகொண்டு, திரும்பி, "சுடுகாட்டாடிக்கு விவாகஞ்செய்து கொடுத்த வன்றே புத்திரியை இழந்தாம். இனி அவனுக்கு யாகத்திற் கொடுக்கும் அவிர்ப்பாகத்தை அகற்றி, ஏனையோ ர்க்கு ஈந்து, அவ் விரந் துண்பவனுக்குக் கொடுக்கும் பாகத் தையுங் காத்தற்கடவுளாகிய விஷ்ணுமூர்த்திக்குக் கொடுப் பேன்" என்று வேள்வி செய்யத்தொடங்கினான். அப்போது உமாதேவியார் சிவபிரான் தடையையுங்கடந்து, தக்ஷன்மா ட்டுச் சென்ற பொழுது, அத்தக்ஷனும், அவன் மனைவியும், மக்களும் ஒன்றும் பேசாதிருந்தனர். பின்புதக்ஷன் சிவபெ ருமானுக்குக் கொடுக்கும் அவிர்ப்பாகத்தையும் விஷ்ணுவு க்குக் கொடுத்தனன். அதுகண்ட உமாதேவியார் "தாக்ஷாய ணியென்னும் நாமத்தைத் தள்ளுவதே முறை" என்று அக்

தினியில் மூழ்கினர். அப்போது தேவர்கள் முனிவர்களோடு தக்ஷனும் வருந்தினன். உமாதேவி அழலின்கண் முழுகி யதை யுணர்ந்த சிவபிரான் கோபித்து, ஒருசடையைப் பூமி யில் வீசவும், அதினின்று வீரபத்திரக் கடவுள் தோன்றி வணங்க, அவரைச் சிவபிரான் நோக்கி, தக்ஷன் யாகத்தை அழித்து, அங்குள்ளாரையுந் தண்டித்துவரும்படி ஆஜ்ஞாபி த்தனர். அவ்வாறே வீரபத்திரக்கடவுள் சென்று, தக்ஷன்மு டியையும், எச்சன் முடியையும் வெட்டி, வேள்விக் குண்டத் தில் இட்டு, அதனை அழித்து, மற்றவர்களைத் தக்கபடி தண்டி த்து, வேள்விச்சாலையில், அக்கினியைவைத்து, எதிர்த்தவிஷ் ணு சக்கரப்படையின வலிமையைப் போக்கி, புறங்கண்டு, திருமபினர். அக்கினியில், முழுகி, தாக்ஷாயணி யென்னும் பெயரைமாற்றிய உமாதேவியார் இமையமலையரையன் புத் திரியாராய், சிவபெருமான தம்மைத் திருமணஞ் செய்யும் வண்ணம், கருதி, தவம்புரியத் தொடங்கினர். அப்போது நாரதமுனிவர் சமீபித்து, "திருப்பேரூரிலே, தவஞ் செய் தால், விரைவிலே சிவபிரான் எழுந்தருளி, மணந்தருளுவா ர்" என்று விண்ணப்பஞ்செய்ய, அங்ஙனமே பேரூர்சார்ந்து உமாதேவியார் தவஞ்செய்தருளினர். அக்காலையில், சிவபெ ருமான் வயோதிகப் பிராமணராய், வந்தருளினர். அவரை உமாதேவியார் அடியவரில் ஒருவராகக்கொண்டு வணங்க, வேற்றுருவங் கொண்ட சிவபிரானும் பலபல விநோதமாக வினவ, அதற்கு உமாதேவியாரும் விடை கொடுத்து, இரந்து ண்டல் முதலியவாகச் சிவபிரானை இகழ்ந்து கூறியவைக ளின் பொருட்டு, உத்தரஞ்சொல்லத் தொடங்கினர். "கர்ம மே கர்த்தாவென்னுந் தேவதாரு வனத்து முனிவரை ஆளு தற்பொருட்டு, பிக்ஷாடனரானதேயன்றி, வயிரவஅமசத்தா னும் இகழ்ந்த பிரமன் சிரத்தைக்கிள்ளி, விஷ்ணு முதலிய தேவர்முநிவர் மாட்டும், தருக்கழியும்படி உதிரப்பிக்ஷை ஏற் றனர். பாவக்கடலினின்றும் உயிரை அருட்கரை ஏற்றுதலா ல், உருத்திரநாமம் உற்றனர். அடைக்கலமாக வைத்தபொ ருளைக்கொடாமைப்பற்றி, அமரர் வருத்தினமையால், அக் கினிதேவன்அழுது உருத்திரப்பெயரும் அடைந்தான். உயிர்

களின்பருவபேதம்பற்றி, சிவபிரான் பலவுருக் கொண்டரு ளினர். தேவதாருவனத்துமுனிவர் வேள்வியினின்றும்வந்த புலியின் தோலையுடுத்து, மற்ற மான் மழு பாம்பு தீ நகுசிரம் இவைகளைத் தரித்து, முயலகனை மிதித்து, நடித்து, பூதங் களைப் படைகளாக்கினர். அண்டங்களை வயிற்றில் அடக்கத் தொடங்கிய பகாசுரனைக் கொன்று, இறகினை அணிந்தனர். பகீரதன் பொருட்டுக் கொடுத்த கங்கை உலகத்தை அழிக் கச் சென்ற தருக்கை அடக்கி, முடியிற் றரித்தனர். தக்கன் சாபந்தீரும்படி, சரணடைந்த சந்திரனைச் சடையில், முடித் தனர். அரிபிரமேந்திராதி தேவரை நெற்றிக் கண்ணால், நீற் றி, அப்பொடியையும், என்புமுதலியவற்றையுந் தாம் நித்தி யரென்பது தோன்ற, திருமேனியிற் றரித்தலாதிகளைப் புரி ந்தனர். இத்துணைப்பெருமையுடையார் பேரழகரல்லரோ'' என்று உமாதேவியார் விடையளித்தபோது, விருத்தவேதி யவுருவை மறைத்து, இடபாரூடராய், சிவபிரான் எதிர்நின் றனர். உமாதேவியாரும் வணங்கிநின்றார். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். பின்பு சிவபெருமான் உமாதேவியார் திருக் கரம் பற்றி, அந்தப்புரத்திற் சென்று, அனைவரும் வணங்க எழுந்தருளியிருந்தார்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௨௬. கௌரிதிருமணப்படலம்.

பார்ப்பதி தேவியைத் திருமணஞ் செய்யும்படி, சிவ பிரான் திருவுளங் கொண்டு, நாரதமுனிவர் முகமாகச் சம ஸ்தலோகத்தாருக்கும் அறிவித்தருளினர். பின்பு பேரூரின் கண்ணே திருக்கலியாணமண்டப முதலியவற்றைத் தாமே சங்கற்பமாத்திரையால், நிருமித்தனர். நாரதமுனிவர் எவ் விடத்துஞ்சென்று, "திருப்பேரூரிலே, பர்வதராஜன்பெற்ற பார்ப்பதி தேவியாரைத் திருமணஞ் செய்யச் சிவபிரான் திருவுளம் பற்றினார். அங்கே அனைவருஞ் செல்லக்கடவீர்" என்று சொல்லி மீண்டனர். பின்பு வயிரவக்கடவுள், வீர பத்திரக்கடவுள், அரிகரபுத்திரர், கூர்மாண்டர், காலாக்கினி ருத்திரர், ஆடகேசர், ஏகாதச ருத்திரர் ஆகிய எல்லாரும்

அளவில்லாத சிவகணங்கள் சூழ்ந்துவரச் சென்றார்கள். விஷ்ணுமூர்த்தி, பிரமதேவர், அஷ்டதிக்குப்பாலர், ஆதித்தியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவரென்னு முப்பத்து முக்கோடிதேவர், வித்தியாதரர், கருடர், காந்தருவர், உரகர், நாற்பத்தெண்ணாயிர முனிவர் ஆகிய அனைவரும் பத்தினிகளுடன் போயினர். பரிசனங்களும் வரிசைகளும் உடன்கொண்டு, மலைகள் பலவுஞ் சூழ்ந்துவர, மேனையாகிய பத்தினியுடன் பர்வதராஜன் சென்றனன். சப்த சாகரங்களும், கங்கையாதி தீர்த்தங்களும், காலங்களும், திக்குகளும், அஷ்டகஜங்களும்போந்தன. நால்வகைப் படைக்கடலும் புடையே நடக்கப் பூலோக வேந்தர்களுஞ் சார்ந்தனர். சார்ந்த சமஸ்தர்களும் பரசிவனது ஸ்ரீபாதாரவிந்தங்களைப் பணிந்தனர். பின்னர்ச் சிவபெருமானும், உமாதேவியாருந் திருமணக்கோலங் கொண்டு, மங்கல வாத்தியங்கள் முழங்க, அரம்பையர் ஆட, கின்னரர் பாட, நாரதர் முதலியோர் வீணாகானஞ் செய்ய, அமரர்கள் பூமழைபெய்ய, திருமால் இட்ட பாதுகை மீது, சிவபெருமான் திருவடிசாத்தி, பக்கத்தே உமாதேவியார் வர, பாவாடைமீது சென்று, தேவமகளிர் அஷ்டமங்கலங்கள் ஏந்தி வாழ்த்த, அவர்களுக்குத் திருவருளைக்கஞ் செய்து, வேத சிவாகமங்களில், விதித்தவண்ணம், பிரமதேவர் முளைப்பாலிகை முதலியவற்றை முன்னரே அமைத்துள்ள திருக்கலியாணமண்டபத்தில், உமாதேவியாரோடும் ஆசனத்தில், வீற்றிருந்தருளினர். அமரர்கள் அனைவரும் ஆஜ்ஞைப்படி, ஆதனத்தில் இருந்தனர். அப்பொழுது, பர்வதராஜன் சமீபித்து, மேனைவணங்கி, பசுப்பால் வார்க்க, மெய்யன்பினால், சிவபெருமான்திருவடிகளை விளக்கி, தன்சிரமீது புரோக்ஷித்து, உள்ளும்பருகி, உமாதேவியாராகிய புத்திரியாரைத் தத்தஞ்செய்தான். உடனே தேவர்கள் பூமாரி பொழிய, தேவதேவர் திருக்கையில், ஏற்றருளி, பிரமதேவர் அக்கினி வளர்க்க, மங்கலசூத்திரத்தை உமாதேவியார் கழுத்திலே, தாரணஞ்செய்து, ஆன்மகோடிகள் அனைத்தும் இன்பம்நுகர்ந்து,உய்யும்வண்ணம்,செய்யத்தக்க சடங்குகளெல்லாம் நடத்தியருளினர். பின்பு மண

மண்டபத்தினின்றுஞ் சிவபெருமான் இடபாரூடராய், உமாதேவியோடுந் திருவீதியில் எழுந்தருளி, திருக்காட்சி கொடுத்து, திருக்கோயிலிற்புகுந்து, சிங்காசனத்தில், வீற்றிருந்து, திருமணவாளக் கோலந் தரிசிக்க வந்தவர்கட் கெல்லாம் விரும்பிய வரங்களை அருளி, எல்லாவுயிரும் வாழும் வண்ணம் உமாதேவியாரோடுந் திருப்பேரூரில், வாழ்ந்திருந்தார். இத்திருமணச்சரிதங் கேட்டோர் இம்மையில், மணம்பெற்று, இறுதியில், முத்திமணமும் பெறுவர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௨௭. தெய்வயானைதிருமணப்படலம்.

இமையமலைச் சாரலில், நரநாராயணராது ஆச்சிரமத்திலே, முருகக்கடவுளைத் திருமணம் புரியக் கருதி, தெய்வயானையம்மை தவஞ்செய்தாள். அப்போது, நாரதமுனிவர் அடுத்து, மானசிகமாக வணங்கி, "பேரூரைச்சார்ந்து, தவம் புரிவாயாகில், விரைவிலே, முருகக்கடவுள் மணந்தருளுவார்" என்றவளவில், உடனே தெய்வயானை யம்மை திருப்பேரூர்சேர்ந்து, திருவுள்ளம் முருகக்கடவுள் திருமேனியை மருவவும், கண்கள் அரும்பவும், முகங்குவியவும், திருவுருவாடவும், பஞ்சப் பொறிகள் மறையவும், சித்திர தீபம் போல் அசைவற்றிருந்து, தவஞ் செய்தாள். அக்காலையில், முருகக்கடவுள் எதிர்நிற்க, அவரைவணங்கிய தெய்வயானையம்மை திருநோக்கமும், முருகக்கடவுள் திருநோக்கமும் இசையப் பெருங் காதலுடையராயினர். இதனைச் சிவபெருமான் திருவுளத்துக் கொண்டருளி, இந்திரனை அழைத்து, "தெய்வயானைக்கும் முருகனுக்கும் இத்திருப் பேரூரிலே, மணஞ் செய்வதற்கு வேண்டியவைகளை விரைந்து செய்வாய்" என்று திருவாய்மலர்ந்தனர். அப்பொழுது, இந்திரன் மணவோலை எவ்விடத்துக்கும் அனுப்பி, நகரத்தைப் புதுக்கி, மணமண்டபம் நிருமித்து, சிவபெருமான் மாட்டு, விண்ணப்பஞ் செய்தான். பின்பு அம்மண மண்டபத்திலே, சிங்காசனத்தின் மீது சிவபிரான் வீற்றிருந்தருளி, முருகக்கடவுளைத் திருமணக்கோலத்தோடு வெள்ளையானைமீது

வீதிவலம் வரச்செய்து, மணமண்டபத்தில், இருக்கும்படி ஆஜ்ஞாபித்தருள, அங்ஙனம் ஆசனத்தில், முருகக்கடவுள் இருந்தபின்பு தெய்வயானையம்மையும் அருகே வந்திருந்தனள். உருத்திரர் முதலாயினர் பக்கத்தே இருந்தார்கள். மங்கல வாத்தியமும், வாழ்த்தும் முழங்கின. அப்போது இந்திரன், இந்திராணி பசும்பால் வார்க்க, முருகக்கடவுள் திருவடிகளை விளக்கி, அதனை உள்ளும்பருகி, சிரமீது புரோக்ஷித்துக்கொண்டு,தெய்வயானையம்மையைத்தத்தஞ்செய்ய,முருகக்கடவுள் ஏற்றருளி, வியாழபகவான் அக்கினிகாரியஞ்செய்து, மது பருக்கம் அமுதுகளை ஏந்த, அதற்கு முகமலர்ந்தருளி, கன்றோடு காமதேனுச் செல்லுதலை நோக்கி, தெய்வயானையம்மை வலத்திருக்கைபற்றி, ஏழடியிட்டு, அம்மியில் அக்ஷதை தெளித்து, அத்தேவி பாதமலரைத் தூக்கி வைத்து, சிவபிரான் அஷ்டமூர்த்தத்தில் ஒன்றான அக்கினியை வலஞ் செய்து, தெய்வயானை யம்மை திருக்கையி னின்றும் பொரியை ஏற்று, அக்குண்டத்திற் சொரிந்து, பின்னர்த் திருமங்கிலிய தாரணஞ் செய்தருளினர். அப்போது, தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள். சிவபெருமான் ஆஜ்ஞைப்படி, குபேரன் அனைவர்க்கும் பொருளும, இரத்தினாபரணங்களும், பீதாம்பர முதலியவும் கொடுத்தான். பின்பு திருவீதியிலே, தெய்வயானை யம்மையோடு முருகக்கடவுள் திருவுலாச் செய்து, திருக்கோயிலின் கண் ஆசனத்தில், இருந்தருளினர். மற்றையநாளிலுஞ் செய்யுஞ் சடங்குகளை முடித்த பின்னர்ச் சிவபிரான் சமஸ்தருக்கும் வேண்டும் வரங்களை அருளினர். முருகக்கடவுள் தெய்வயானையம்மையுடன் சிவபிரானும் உமாதேவியாருமாகிய இருமுதுகுரவரிடத்தே இருந்தருளினர். இத்திருமணச் சரிதத்தைக் கேட்டோர் ஸ்கந்தலோகத்தில், ஆனந்தம் அனுபவிப்பார்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## ௨அ. குசத்துவசன்வரம்பெறுபடலம்.

குசத்துவசராஜன் உலகத்தை ஆளுங்கால், புத்திரப்பேறில்லாமையினால், மனங் கவன்று, அமைச்சர்களிடத்தே,

உலகாட்சியை ஒப்பித்து, பலமலையும், பலவனமும், பல சுரமுங் கடந்து, பேரூர் எலலையில்வந்து, தூரத்திலே, வெள்ளியங்கிரியை வணங்கி, கண்களினின்று மார்பின்கண்ணே ஆனந்தவருவி ஒழுக, உழுவலன்பின்முழுகி மனம் முன்னே செல்ல ஸ்ரீகாஞ்சி நதியைப் பணிந்து, அதில் விதிப்படி ஸ்நானஞ் செய்து, பத்தியோடு உத்தம வேதியர்க்குத் தானங் கொடுத்து, ஆலயத்தை அடுத்து, ஸ்தூலலிங்கமாகிய திருக்கோபுரத்தைச் சேவித்து, இடபதேவருக்குச் சமீபத்திலுள்ள பத்திரலிங்கத்தின் அருகே பணிந்து எழுந்து, குழைந்து உருகி, பிரதக்ஷிணமா வந்து, பன்னீர் நிழலின்கண் எழுந்தருளியிருக்கும் முழுமுதலாகிய ஆதிலிங்கேசர் பாதாரவிந்தங்களைத் தரிசித்து, மரகதவல்லியம்மை திருவடிகளையும் வணங்கி, பின்பு வெள்ளியம்பலத்தைத் தரிசித்தான். தரிசித்த அற்றை நாள் உபவாசமாய், இரவிலே, நித்திரை நீத்து மற்றைநாட் காலையில், நித்திய கர்மாநுட்டானங்களை முடித்து, சிவபெருமான் திருவடிகளைத் தியானித்து, தவஞ்செய்தான். அங்ஙனம் ஆயிரந் தேவவருடம் ஆகும் போது, சிவபிரான் உமாதேவிசமேதராக இடபாரூடராய் எழுந்தருளினார். அப்பொழுது குசத்துவசன் வணங்கித் துதித்துக் கூத்தாடினான். அவனுக்குச் சிவபெருமான் "நம்மை வழிபட்டமையால், இரண்டு பெண்மக்களைப் பெறுவாய். மருதவரையில், முருகனை வழிபடுவாயாகின், ஒருபுத்திரனைப் பெறுவாய்" என்று வரம் அருளி அந்தர்த்தானமாயினர். பின்பு அரசன் மருதவரையில், முருகக்கடவுளை வழிபட்டு வரம்பெற்று, முருகக்கடவுளுக்கும், சிவபெருமானுக்கும் நித்திய நைமித்திகங்களை நடாத்தி, விடைபெற்றுச் சென்று, தன்பதியில் வதிந்து. புதல்வனையும் புதல்விகளையும் பெற்று, மகிழ்ந்து வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

—o—

## உகூ. குலசேகரன்குட்டநோய்தீர்ந்தபடலம்.

மலைநாட்டிலே, சேரர்குலத்திலே, குலசேகரனென்னும் மன்னவன் உதித்து, அரசாட்சி புரியுங் கால், அவன் உடலின்

கண்ணே, குட்டநோய் பொருந்தியது. அதனுல் அரசானு தலில், விரசங்கொண்டு, வைத்தியரை வருவித்து, "என்னை வருத்துகின்றநோயை வருத்தக்கடவீர்" என்று சொன்னன். அதனைக் கேட்ட வைத்தியருக்கு வாகட நூல்வழியே சூரணம், இலேகியம், நெய், குளிகை, குழம்பு, பஸ்மம், சிந்தூர முதலிய மருந்துகள் அமைத்துக் கொடுப்பதே கடனும், அரசனுக்கு அம்மருந்தை அருந்துவதே கடனும், நோய்க்கு வருந்துவதே கடனு மாயினமைபற்றி, மருந்தினைக் கைவிட்டு, அரசன் அறங்கள் பலவற்றையுஞ் செய்துவந்தான். அதனாலும் நோய் நீங்காமையால், சிவக்ஷேத்திர யாத்திரையை விரும்பிச் செய்துவருங்கால், வியாதி அதிகங்குறைவின்றிச் சமமாயிருக்கக்கண்டு, அரசன் களிப்புற்று, ஆண்டுகள் தோறுஞ் சிவஸ்தல சேவை செய்து, ஒருவருடத்தில், தனது பதியை விட்டு, பலதலங்களைப் பணிந்து, இராமனை வழிபட்ட இராமேசுரத்தை வணங்கித் திரும்பும் போது, நேர்பட்ட நாரதமுனிவர் அருளிய வண்ணம், திருப்பேரூர் சேர்ந்து, ஸ்ரீகாஞ்சிநதியில் மூழ்கி, சுவாமியையும், அம்மையையுந் தரிசித்த மாத்திரத்தே, குட்டநோய் விட்டொழிந்து, அழகிய வடிவத்தினை யுடையவனாய் விளங்கினன். பின்பு அரசன் "நேசஞ் சிறிதுமில்லாது பாசம பெரிதுமுடைய நீசனேன்மாட்டும் ஈசனார்செய்த பெருங்கருணையிருந்தபடி என்னை" என்று நைந்து நைந்துருகி, பட்டிநாயகருக்கு மட்டில்லாத திருப்பணிகள் செய்வித்து, அப்பட்டிநகரைவிட்டு நீங்காது வதிந்து, பத்திசெய்து, பெத்தநிலைகுலைந்து, முத்திநிலை சித்திக்கப் பெற்றனன்.

திருச்சிற்றம்பலம்.

—0—

## ௩௦. திரிலோகசோழன் செயிர்தீர்ந்தபடலம்.

தெய்வப்பொன்னித் திருநதியாற் சூழப்பெற்ற சோழ நாட்டிலே, திரிலோகத்திலு முள்ளார் இடர் அடையாதபடி காத்தமையால், திரிலோக சோழராஜன் என்னும் பெயர் பூண்டவன் அரசு புரியுங்கால், அவனைவருந் திருநீறுங் கண்டிகையும் பூண்டு, சித்தாந்த சைவச்செல்வி யுடையாராய்.

செல்வராய் வாழ்ந்தனர். அங்ஙனம் வாழும்போது, நேபாளதேயத்தினின்று கல்வியின்வல்ல காபாலமதத்தவர்சிலர் வந்து கலந்தனர். அப்பொழுது சிவநிசி அடுத்தது. அந்நாளில், பிராமணரும், அடியவருந் திருவிடைமருதூரில், சிவபிரானைத் தரிசிக்கப் போந்தனர். அச்சோழனும் அத்தலத்தை அடைந்தான். அதனையுணர்ந்த காபாலமத வேதியரும் அங்கேவந்து, ஆலயத்திலே, அரசனைஎளிதிற் சந்தித்து, ஆசிர்வாதஞ்செய்ய, அரசன் அவ்வேதியர் புறவேடப்பொலிவையும், தேககாந்தியையும் மதித்து, அகத்தை மதியாதவனாய், அஞ்சலிசெய்து, யாரென்றுவினவ. அதற்கு "இவ்வரசன் நமதுவழிப்படுவன்"என்றுகருதி,அவருள்ளே ஒருவிருத்தன் "மகாராஜாவே! நாங்கள் வாழ்வது நேபாளதேசம். உமது தேசவளப்பமும், புகழுங் கேள்வியுற்று நோக்குதற் பொருட்டு, இங்கே வந்தோம். அதிரகசியமாக உமக்கு உபதேசிக்கத்தக்கது ஒன்றுண்டு." என்றமாத்திரையில், அரசன் அதற்கு உடம்பட்டு, தனித்தவனாய், வணங்கினன். அப்போது அவ்விருத்தன், "ஆராயும்வழி, மகளிரைப்புணர்தலே இன்பமாகும். அதனாலே உயிர்கள் அபிவிர்த்தியாகின்றன. இதனையன்றி, உலகத்தைச் சிருட்டிப்பதற்கு ஒருகடவுள்இருப்பதாக அறிவிலார் கூறுவர். கடவுளைக்கண்டவர் யாவர்! கண்ணாற் காண்பதே மெய். காணாதது பொய். ஆதலால், உலகத்துக்கு வேறான கடவுள் ஒருவனில்லை. மரத்துடன் மரம் உரிஞும்போதும், சூரியகாந்தக்கல்லில், சூரியகிரணந் தொடும்போதும் அக்கினி தோன்றுதல்போலப் புணர்ச்சிக்கண்ணே உலகந்தோன்றும். அங்ஙனமாகலிற் புணர்ச்சியேபொருளாம். அதற்கு மகிமைதருவது சுராபானமே. இதனையும் பொருளாகக் கொள்ளக்கடவீர்" என்று பொய்யை மெய்யாகக் கூறினன். அக்காபாலமதத்தின் ஆபாசமார்க்கத்தை அரசன்விரும்பி, அறிவழிந்து, மறைமுறை பிறழ்ந்து, மதுநுகர்ந்து, வருணச்சிரமங் கடந்து, மடவாரோடுகூடி, இன்பம்அநுபவித்து, ஒழுக்கமுடையாரை வருத்தி, காபால மதத்தவரே களிப்படையும்படி கொடுங்கோல் செலுத்தினன். "மன்னவனெப்படி மன்னுயிரப்படி" என்றபடி குடிகளும்

விதிவிலக்கின்றி ஒழுகினார்கள். இங்ஙனஞ் சோணாடு முறை திறம்பிய செய்கையைப் பிரமதேவர் நோக்கி, நாரதமுநிவரை அழைத்து, அவ்வரசனைத் திருத்தும்படி ஏவ, அப்போதே முநிவர் அரசன்சபையைஅடுத்து, கமண்டலத்தின் ஜலத்தை ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்து, அவன்முகத்திலேபுரோக்ஷித்தனர். உடனேஅரசன்தன்மதமோகம்ஒழிந்து, முனிவரை வணங்க, அக்காலையில், முநிவர் திருவருணோக்கஞ்செய்து, திருநீறு கொடுக்க, அதனைஏற்று, அரசன் அணிந்து, பணிந்தவளவில், "உனது தீவினைநோய்க்கு மருந்து, மேலேச்சிதம் பரத்திற் சிவபெருமான் திருவடிகளை வழிபடுதலே" என்று முனிவர்சொல்லி, மறைந்தனர். அரசனை முநிவரர் திருத்தியமுறையை அறிந்த காபாலமதத்தினர் அந்நாட்டைவிட்டு ஓட்டெடுத்தனர். அரசனும் பேரூர்சார்ந்து, காஞ்சிநதியில், ஸ்நாநஞ்செய்து, சுவாமியையும், அம்மையையுந் தொழுது, துதித்து, பிழைகள்ஒழிந்து, சிலநாள் அங்கே தங்கி, பலதிருப்பணிசெய்து, விடைபெற்று, சோழநாட்டைஉற்று மனுநூல் வழியே செங்கோல்செலுத்தி, சைவசமயந் தழைத்தோங்கும்படி அரசாண்டான்.

திருச்சிற்றம்பலம்.

—0—

## ருக. உபதேசப்படலம்.

திருப்பேரூரிலே, சிவபெருமான்பெருங்கருணையினால், மகிழ்ந்து எழுந்தருளியிருக்குஞ் சமயத்தில், உமாதேவியார் எழுந்து, வணங்கி, "சுவாமீ,பெத்தநிலைநீங்கி, முத்தியின்பத்தில் அழுந்துகின்றவர்க்குக் காட்டும் ஆனந்ததாண்டவத்தைக் கோமுநிமுதலியோர்க்குக் காட்டியகாரணம் என்னை" என்றுவினவ, அதற்குச்சிவபிரான் "தேவீ கோமுநியும், பட்டிமுநியும் பேரன்போடு சடைமுடியுடன் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்து, வில்வத்தளிர்களைக் கொண்டு, உபசாரங்களினால், நம்மைச் சிவலிங்கத்தின் கண்ணே, நெடுங்காலம் பூஜித்ததேயன்றி, இரசதசபையிலே, நடிக்கும் நமதுவடிவத்தும் அருச்சித்து, மகோற்சவம் நடாத்தி, வணங்கி, பஞ்சமலங்களையும் வென்று, விரும்பியபடியால், அப்பொழுது

நமது நாடகத்தைக் காட்டினும்" என்று திருவாய்மலர்ந்த னர். அதனைக்கேட்ட உமாதேவியார், அம்முநிவர் இருவருஞ் சடைமுதலியவற்றைத் தரித்துப் பூசித்தபடியால், அச்சடை முதலியவற்றின் மகிமைகளைச் சாற்றியருளவேண்டும்" என்றுகேட்க, அதற்குச் சிவபெருமான அருளிச்செய்யத்தொடங்கி, "உமையே, நமதுவேடங்கள் பலவற்றுள்ளுஞ் சடைமுடியே சிறந்ததாம். சடைமுடிதரித்தவரை யாமாகக்கருதி, தேவர் முதலாயினோர் வழிபடுவர். ஒவ்வொரு சடையும் ஒவ்வொரு சிவலிங்கமாம். சடையை முடித்தவனுக்கு ஆயிரம் பிறவியின முனனுள்ளாரும் பினனுள்ளாரும் நமது சிவலோகத்தைச் சேரவர். அவனைவணஙகினோன பாவியாயினும்புண்ணியமும், செல்வமும் பெறுவன. சடையிற்பொருந்திய ஒருநீர்த்துளி ஒருவனமேற் றெறிததால், பேய்பூத மாதியால்வருந் துனபமும், நோயும், பாவமும் போம். விபூதியாவது வைதிகவிபூதியெனறும், இலெளகிக விபூதியென்றும் இரண்டாகும். அவற்றுள் வைதிகபூதி ஓமகுண்டத்தில் விளங்குவதாம். இலெளகிகபூதி கோமயத்தினால் ஆவதாம். வைதிகவிபூதி பிரமன ஓமகுண்டத்திலே தோன்றுவதாகிய புராதனியென்றும், பிராமணர் ஓமகுண்டத்திலே தோனறுவதாகிய சத்தியோசாதை யெனறும் இரண்டாம். இலெளகிகவிபூதி தீக்ஷிதாக்குரிய சைவவிபூதியெனறும், அதீக்ஷிதர்க்குரிய அசைவ விபூதியென்றும இரண்டாம். தீக்ஷிதராகிய சைவர்தரிக்கும் விபூதி கற்பம, அநுகற்பம், உபகற்பம் என மூனறும். அவற்றுள், கற்பமாவது கனறீனறபசு, இளங்கன்றுப்பசு, கன்றிழந்தபசு, மலட்டுப்பசு, குறைந்த செவி கோடு வாலகளையுடையபசு, பவ்வீயுண்ணும்பசு, நோயுள்ளபசு என்னும் இவைகளைவிட்டு, பங்குனிமாசத்தில், நெல்லரிந்த கழனிகளிலுள்ள தாளைமேய்ந்த நல்ல பசுக்கள் விட்ட மயத்தை எட்டாந்திதி, பதினான்காந்திதி, பதினைந்தாந்திதிகளிலே, சத்தியோசாதத்தினாற் பூமியில் விழுமுன்னே தாமரையிலையில் ஏற்று மல் வழும்பு நீக்கி, வாமதேவத்தினாற பஞ்சகவ்வியம் பெய்து, கோரத்தினாற் பிசைந்து, தற்புருடத்தினாலே திரட்டி, ... னியில் இட்டு, ஈசானத்

தால் எடுத்து, புதிய வஸ்திரத்திஞல் வடிகட்டி, புதிய கடத்தில் நிறைத்து, காயத்திரி மந்திரம் உச்சரித்து, பரிசுத்தஸ்தானத்தில் வைத்து, நறுமலர் சாத்தி, சுத்த வஸ்திரத்தால் வாய்கட்டுவதாம். உடனே ஓமகுண்டத்திலிடாது உலர்த்தி விளைவித்தலும் விதியாம். அநுகற்பமாவது வனத்தில் உலர்ந்த மயத்தைச் சித்திரைமாசத்திற் கொண்டு வந்து, பொடித்து, அதில், கோஜலம்பெய்து, முன்கூறிய விதிப்படி விளைவித்தலாம். உபகற்பமாவது இயல்பாக அக்கினியிஞலே, தகிக்கப்பட்ட வனத்திலுள்ள பொடியில், பஞ்சகவ்வியம் பெய்து, முற்கூறியவிதிப்படி அக்கினியிலிட்டு, எடுத்தலாம். நீலநிறவிபூதி நோயையாக்கும். தாமிரநிறவிபூதி ஆயுளை நீக்கும். செந்நிறவிபூதி புகழைப்போக்கும். பொன்னிறவிபூதி தரித்திரத்தைச் சேர்க்கும். வெண்ணிறவிபூதி புண்ணியத்தை விளைக்கும். ஆதலால், வெள்ளிய விபூதியே தரித்தற்குரிமை யுடையதாம். அவ்விபூதியை மான்றோல், புலித்தோல், வஸ்திரம் இவைகளாற் பன்னிரு விரலள வுயரமும், எண்விரலள வகலமும், வாய்வட்டமுமாக அமைத்த ஆலயத்தில் வைத்து, சைவரும், வைதிகரும் அவரவர்க்குரிய விதிப்படி மூவிரலாலும், சிரமுதலிய ஸ்தானங்களில் அணியக்கடவர். பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் இம்மூவருக்கும் வைதிக விபூதியே உரியது. அதீக்ஷிதராகிய சூத்திரர்க்கு அசைவ விபூதியும், திருக்கோயின் மடைப்பள்ளி விபூதியும், திருவடியார் மடாலயத்தின் மடைப்பள்ளி விபூதியும், வனத்தில் வெந்த விபூதியும் உரிமையாம். சங்கரஜாதியார்க்கு மடைப்பள்ளிவிபூதியும், வனத்தில் வெந்த விபூதியும் ஆகும். அக்கினி, தேவர், குரவர் இவர்முன்னும், வழி, அசுத்தநிலம், இழிஞர் இவற்றிடத்தும் விபூதிதரிக்கப்படாது. ஒரு கையால் ஏற்றவிபூதி, விதிப்படி இயற்ருவிபூதி, விலைவிபூதி, அதீக்ஷிதர் கொடுத்த விபூதி ஆகிய இவைகள் தரிக்கலாகா. பூமியில் வீழ்த்தலும், அங்காத்தலும், தலைநடுக்கலும், கவிந்தலுஞ் செய்யாது திருநீறு [illegible]க்கக் கடவர். பிராமணர் உருவமுழுதும் மற்றையோர் [illegible]குமேனும் உத்தூளனஞ் செய்க. விபூதிதரித்தே அற[illegible]புரிக. திருநீறு தரியாத

வர் மூகஞ் சுடுகாடாகும். அதனைப்பார்த்தவர் பஞ்சாக்கரத்தில், நூறுருஜபிக்கக்கடவர். விபூதிதரியாது தவ முதலியன நிரம்பச் செய்தாலும் பயனில்லை. தரித்தவர் சும்மாவிருந்தாலும்பயன்பெறுவர். திருநீறுதரித்தே சிராத்தஞ்செய்க. பாவத்தை நீற்றலால் நீறு, செல்வந் தரலால் விபூதி, உயிர்களின் மலக்குற்றத்தைக் கழுவுதலாற் சாரம், அறியாமைநீங்க விளக்குதலாற் பசிதம், பூதாதிகளைப் போக்கிக் காத்தலாற் காப்பு எனனுங் காரணப்பெயர்களும் அவ்விபூதிக்கு உண்டு. உருத்திராக்ஷமாவது முப்புரத்தவர் வருத்தலினாலே, அமரர்கள் தவஞ்செய்ய, அதற்கு இரங்கி, தாம் போய், இமையாது நோக்கினமை பற்றி, மூன்று கண்களினும் நீர் துளித்தன. அவற்றுள், வலக்கணீரிலே, பனனிரண்டு விருக்ஷமும, இடக்கணீரிலே, பதினன்கு விருக்ஷமும், நடுக்கணீரிலே, பத்துவிருக்ஷமும் உண்டாயின. இவைகளுக்கு உருத்திராக்ஷ விருக்ஷமென்று பெயர். வெண்ணிறமணி பிராமணர்க்கும், பொன்னிறமணி க்ஷத்திரியர்க்கும், வெண்மை பொன்மை கலந்தமணி வைசியர்க்கும், கருநிறமணி சதுர்த்தருக்கும் உரிமையாம். ஒருமுகமணி சிவரூபமாய், பிரமகத்தி நீக்கும. இருமுகமணி சிவசத்திரூபமாய், கோகத்தி நீக்கும். மும்முகமணி அக்கினிரூபமாய், ஸ்திரீகத்தி நீக்கும். நான்முகமணி பிரமனுருவாய், மானுடக்கொலை தொலைக்கும். ஐம்முகமணி காலாக்கினி ருத்திரரூபமாய், உணவினலாகுங் குற்றங்களை ஒழிக்கும். ஆறுமுகமணி அறுமுகனுருவாய், வலக்கையிலே, தரித்தால், பிரமகத்திச் சாயையைப் போக்கும். ஏழுமுகமணி ஆதிசேடனுருவாய், பசுக்கொலை பொருட்களவுகளைத் தீர்க்கும. எண்முகமணி விநாயகனுருவாய், குருதாரகமனம் தானக்கிரகணம் பிறரன்னம்புசித்தலாகிய பாவங்களைக் கெடுக்கும். ஒன்பதுமுகமணி வயிரவ னுருவாய், பூதாதிகளின் தீங்கும் பாம்புகளின் தீங்கும் நீங்கச்செய்து, செல்வத்தையும் முத்தியையுங் கொடுக்கும். பத்துமுகமணி வி[illegible]ரூபமாய், தியநாள் கோள்முதலிய தீங்குகளைத்தீர்க்கு[illegible]திரொருமுகமணி ஏகாதசருத்திர ரூபமாய், ஆயிரம்[illegible]வியின பயனும் ஒரு லக்ஷம்

புசக்களோடு பெரும் பொருளுந் தானஞ் செய்த பயனும் உண்டாக்கும். பன்னிருமுகமணி துவாதசாதித்த ரூபமாய், அசுவமேதப் பயனும் மேருதானப் பயனுங் கொடுக்கும். பதின்மூன்றுமுகமணி முருகனுருவாய், இஷ்டகாமியமுத லியவற்றைக் கொடுத்து, தந்தைமுதலியோர் கொலைப்பாவ த்தைத் தொலைக்கும். பதினான்முகமணி எமதுருவும், நின துருவுமாய், வசியத்தை ஆக்கி, சிவபுரத்தில் இருத்தும். அத னைக் கழுத்தில், அணிந்தால், மந்திரங்கள் பலிக்கும். வெற் றியுண்டாம். உருத்திராக்ஷந் தரித்துச் சற்கிரியைகள் இயற் றினால், ஒன்று அனந்தமாம். தரியாதவர்க்குப் பயனில்லை. கீழ்மக்களாயினும், பெண்களாயினும், மதுமாமிச பக்ஷணி களாயினும் உருத்திராக்ஷத்தை முடிமீது தரித்தாராயின் அவர்பாவம்நீங்கி, இறுதியிலே நமதுவடிவத்தைப் பெறு வர். சிகையில் ஒன்றும், சிரசில் முப்பத்தாறும், கழுத்தில் முப்பத்திரண்டும், மார்பில் ஐம்பதும், கரத்திற் பதினாறும், மணிக்கட்டிற் பன்னிரண்டும், முகமுகமுஞ்சேர இடையே முடிந்து, மேருஅமைத்து, முறையே கொள்ளக்கடவர். ஜப வடம் நூற்றெட்டு, ஐம்பத்துநான்கு, இருபத்தேழுமணிக ளாகக் கொள்க. அநாமிகை விரலிற்செபித்தால் நோய்நீங் கும். மத்திமைவிரலிற் செபித்தாற் பகைநீங்கும். தர்ச்சனி விரலிற்செபித்தால் முத்திசித்திக்கும். முத்திகாமிகள்மேல் நோக்கியும், புத்திகாமிகள் கீழ்நோக்கியும் ஒலியாமலும், பிறர்விழிக்குப் படாமலும் ஜபிக்கக்கடவர். மேருவினைத் தொடுத்து, ஜபித்து, மீட்டும் மேருவரும்போது அதனைக்க டவாது திருப்பல் வேண்டும். ஜபவடந் தவறுதல் முதலிய வற்றிற்கு நமது அருட்குறிக்குச் செய்யும் பிராயச்சித்தத்தி லே, அரைவரிசை இயற்றுக. விரல், இறை, புத்திரசீவகம ணி, சங்குமணி, படிகமணி, முத்து, தாமரைமணி, பொன் மணி, குசைமுடி, உருத்திராக்ஷம் இவை ஒன்றுக் கொன்று உயர்வாம். கிருகத்திலும், பசுக்கோட்டம் பத்துமடங்கு, ந திக்கரை நூறுமடங்கு, ஆலயம் ஆயிரமடங்கு, வனம் இல க்ஷமடங்கு, மலை கோடிமடங்கு, நமதுசந்நிதி அளவில்லா மல் ஜபிப்பவர்க்குப் பயன் உண்டாக்கும். முத்திகாமிகள்

இருபத்தைந்து மணியும், சுபகாமிகள் இருபத்தேழுமணியும், திரவியகாமிகள் முப்பதுமணியும், ஆபிசாரத்துக்குப் பதினைந்துமணியுமாகச் செபவடங்கொள்க. உருத்திராக்ஷத்தைத் தரிசித்தவர்க்கு லக்ஷம், பரிசித்தவர்க்குக் கோடி, தரித்தவர்க்கு ஆயிரங்கோடி, ஜபித்தவர்க்கு அநந்தம் மடங்குபயன உண்டாம். அவர் இம்மையில் வெற்றியும், மறுமையில் நமதுருவும் பெறுவர். உபசாரமாவது தேவர்கள் பாற்கடல்கடையும்போது, வில்வமும், துளவமும் உண்டாயின. அவைநமக்கு மகிழ்ச்சி செய்வனவாம். துளவத்தினும் வில்வஞ் சிறந்ததாம். முற்றியதாயினும, சருகாயினும், ஈரிலை அல்லது ஓரிலை பொருந்தியதாயினும், விலக்கப்படாது. செல்வத்தைச் செய்யுந் திருமகள் வாழ்தலால் ஸ்ரீபலமாம். நோய் நீக்க முதலிய இம்மைப் பயனும், முத்திப்பயனுந் தரும். அஷ்டோத்தரசத சகசிர நாமங்களால் வில்வங்கொண்டு, நமதடியில் அர்ச்சித்தவர்க்கு அளவற்றபயனும். இங்ஙனம் வில்வமாதிகளால், நம்மைப் பூசிப்பதேயாம். பின்னும் அவ்வுபசாரம் காலையிற் செய்யாக் கடனைமுடித்து, சுத்த ஜலத்தினைக் கொண்டு வந்து, பின்பு ஸ்நானஞ் செய்து, சத்தி பண்ணி, இடஞ்செய்து, சூரியனிடத்தும் நம்மைப் பூசித்து, பின்னர்ப் பஞ்சசுத்தி பண்ணி, அருட்குறியினைக் கண்டு, நெசமும மூர்த்தியும அர்ச்சித்து, மூர்த்திமானாகிய நம்மைத் தியானித்து, புஷ்பாஞ்சலியினால் ஆவாகித்து, பாத்திய ஆசமனீய அர்க்கியங் கொடுத்து, பூசை முடியுங்காறும் இருந்தருள வேண்டி, எண்ணெய்க்காப்பு முதலியன அபிஷேகித்து, அலங்கரித்து, நிவேதித்து, தீபாராதனை செய்து, கண்ணாடி முதலியன காட்டி, திருவைந்தெழுத்தை ஜபித்து, அதன்பின் உடல் பொருள் ஆவி மூன்றுந் தத்தஞ் செய்து, துதித்தலாம். இவ்வுபசாரத்தை இயற்றினோர் புத்தி முத்திகளைப் பெறுவர்" என்று அருளிச் செய்தனர்.

திருச்சிற்றம்பலம்.

—0—

## ௫௨. திருநீற்றுமேட்டுப்படலம்.

செந்தமிழ் விளங்கும் பாண்டிவள நாட்டிலே, சுக்ஷேத்திர
வியின...

மோக்ஷ நகரத்திலே, தான்மிக பாண்டியராஜன செங்கோல் செலுத்தி, வித்துருலதை யென்னும் பெயருடைய கற்பினிற் சிறந்த மாதேவியோடு கூடிவாழ்ந் திருந்தான். அம்மா தேவி முத்தமிழ்க் கல்வியும் முற்றக் கற்று, அழகினிற் சிறந்துள்ளவளாதலால், செந்தமிழ்க் கல்வியிற் பயின்ற மகளிர் குழாஞ் சூழச் சபையில் வதிந்தும், அம்மாதரொடு பூங்கொய்தல், புனல்விளையாடல், பொழில் விளையாடல் முதலாகியவற்றைப் புறநகரிற் புரிந்து, மகிழ்ந்து மெய்யன்போடு வருவாள். அக்காலையில், கொங்கணதேசத்துள்ள, நான்கு வேதங்களினும் வல்ல ஓர் அந்தணன், மகாராட்டிர நாட்டையாளும் பிரதாப ருத்ரராஜனை சாசாநதி தீரத்திலே, ஆலயாராந்துங்கச செல்லுஞ் சென்றறிந்து, அயலே போய், வேதசோதனை கொடுத்து, துலாபாரப் பொருளாந் தானம் வாங்கியபின, "வேதங்களை ஓதியுணர்ந்தும் அவையுரைக்கிய அறிவொழுக்கங்களிலே செல்லாது தானம் ஏற்று, பாவவழியில் ஒழுகுதல் முறையல்ல" என்று நைந்து துறந்து சிந்தனை செய்து, மனைவியைச் சேர்ந்து, தானம் ஏற்ற பொருளை யெல்லாம் அறவழியிற் செலவிட்டு, தாமிரபருணி நதியில் ஸ்நானஞ் செய்து, பாவத்தைப் போக்கக் கருதி, மனைவியோடு புறப்பட்டு, கயேந்திர மோக்ஷ நகரத்திற் சேர்ந்து, தாமிரபருணி நதிக் கரையிலே உள்ள அரசவிருக்ஷ நீழலிலே தங்கி, சிரம பரிகாரமாக போமே நிமிதி காலம் வந்து மரணம் அடைந்து அரக்கனாய், அவ்வரச விருக்ஷத்தில் வசித்தான. மனைவியும் வருந்தி, அப்பொருள் முழுவதையும் அவ்விருக்ஷத்தின் பொந்திலே, சேமித்து வைத்து, பின்பு நாயகன உடம்பை அக்கினியிலே தகித்து, அன்று முழுதும் அழுது அழுது மயங்கி, மற்றைநாள் நிலத்தில் விழுந்து இறந்தாள். தவத்தொடர்பு இல்லாமையால், பொருளிருந்தும் புண்ணியங் கைகூடப் பெறாது அப்பொந்தின் பொருளையுங் காத்து, அம்மரத்தில் அரக்கன இருந்தான். இருக்கும்போது, ஒருநாள் வித்துருலதையும், தாமிரபருணி நதியில், ஸ்நானஞ் செய்ய எண்ணி அவ்வரசடியிலே, வந்து தங்கி, கல்லுங் கசிந்துருக வீணைகானஞ் செய்தனள். உட

னே அரக்கன் "மாதேவி அழகையும், தருக்கையும், யாழ் பாடும் வல்லமையையும் நோக்கி, இவளை அடைவோம்" என்று கருதி, அரசின் கொம்பினை விட்டு, அப்பெண் கொம்பினைப் பற்றினன். அப்பொழுது, வித்துருலதை மயங்கி, உணர்விழந்து பிதற்றினள். அதனையறிந்த அரசன் மணிமந்திர ஔஷதங்கள் இயற்றியுந் தீராது வருந்துங்கால், நாரத முநிவர் வந்து, அரக்கன் பற்றிய வியல்பை அரசனுக்கு விரித்துரைத்து, "பேரூர் சேர்ந்து, உன்மனைவி காஞ்சிநதியில், மூழ்கி, பிரமகுண்ட நீற்றை அணிந்து, பிரமதீர்த்தம் புரோக்ஷிக்கப் படுவாளாயின், அரக்கன் விலகுவான." என்று அருளிச்செய்து மறைந்தனர். அங்ஙனமே தானமிக பாண்டியன் மாதேவியை அழைத்துக் கொண்டு, மேலைச்சிதம்பரஞ்சேர்ந்து, காஞ்சிநதியில் மூழ்கி, மனைவியையும் மூழ்குவித்து, பிரம தீர்த்தத்தையும் ஆட்டி, பிரமகுண்டமாகிய திருநீற்று மேட்டின் விபூதியை யள்ளி, காஞ்சிநதித் தீர்த்தமும் பிரமதீர்த்தமும் பெய்து, குழைத்து, மனைவி வடிவமுழுதினும் பூசிய மாத்திரையில், அவளைபபற்றிய அரக்கன் வெளிப்பட்டு, அரக்கவுரு நீங்கி, தேவவுருப் பெற்று, விமானம் ஏறி, அரசனை நோக்கி, "நீயெனையுந் துயரொழுக்கினை" என்று சுவர்க்கலோகஞ் சேர்ந்தான். வித்துருலதையும் பண்டையுணர்வு பெற்றனள். அப்பொழுது அரசன் மகிழ்ந்து, நிருமபவுங் காஞ்சிநதியில், விதிப்படி, மாதேவியோடு ஸ்நாநஞ் செய்து, பலதானங்கள் கொடுத்து, சுவாமி தரிசனஞ் செய்து, விடைபெற்று, மாதேவியுடன பாணடிநாடு சேர்ந்து, வாழ்ந்திருந்தான. திருநீற்றுமேட்டு விபூதி தரித்தவர்க்குப் பிரமராக்ஷசமன்றி மலமும், நோயும், பாவ முதலியவுந் தீரும். பல பொருளும், சுவர்க்கமும், முத்தியுஞ் சித்திக்கும்.

திருச்சிற்றம்பலம்.

—0—

## ௩௩. விசேடபூசைப்படலம்.

சித்திரை மாசத்திலே சித்திரை நக்ஷத்திரஞ் சேர்ந்த பூரணைதிதியிலே, பட்டீசர்க்கு எண்ணெய் முதலியன அபிஷேகித்து, ஆபரணங்கள் அணிந்து, பலவகை அன்னமுதலி

யவற்றை நிவேதித்தவர் தீவினை யனைத்தும் நீங்கி, சிவபுண்
ணியங்களைச் சேருவர். வைகாசிமாசத்திலே, விசாகநக்ஷத்
திரஞ்சேர்ந்த பூரணையிலே, முப்பழமும் அபிஷேகித்து, பா
ல்மாங்காய் நிவேதிப்பவர் பாவங்கள்நீங்கி, பரமன் உலகத்
திலிருப்பர். பின்னும் அம்மாசத்தில், நறியநீரைச் சூழநி
றைத்து, நாற்கால் மண்டபத்திலே, சிவபெருமானை எழுந்
தருளச் செய்து, வசந்தோற்சவம் நடத்துவோர் நோய்கள்
பலவும் ஒழிந்து, போகம் அநுபவித்து, பேரின்பம் பெறு
வர். ஆனிமாசத்திலே, கேட்டை நக்ஷத்திரஞ் சேர்ந்த பூர
ணையில், விருத்தவடிவாக மண்டபம் அமைத்து, அதிலே,
சிவபிரானை எழுந்தருளப்பண்ணி, பலவகைப்பழமும் அபி
ஷேகித்து, நிவேதிப்போர் சிவலோகஞ் சேர்வர். ஆனிமா
சம் உத்திர நக்ஷத்திரத்திலே, அபிஷேகித்து, அலங்கரித்து,
பலவற்றையும் நைவேத்தியம் புரிவோர் சிவகதி அடைவர்.
ஆடிமாசம் பூரநக்ஷத்திரத்திலே, உமாதேவியாரைப் பூசிப்
பவர் இம்மையிலே, செல்வம் பெற்று, மறுமையிலே, சந்
திரவுலகஞ் சார்வர். ஆவணிமாசம் மூல நக்ஷத்திரத்திலே,
சிவபிரானைப் பூசித்து, பிட்டு நிவேதிப்பவர் வினைகள் நீங்
கி, விண்ணுலகம் நண்ணி, போகம் அநுபவிப்பர். புரட்டா
சிமாசம், நவராத்திரியிலே, உமாதேவியாரைப் பூஜிப்பவர்
இம்மையிலே, செல்வமும், மறுமையிலே, இன்பமும் அநு
பவிப்பர். ஐப்பசிமாசம், பௌர்ணிமியிலே, சிவபிரானுக்கு
அன்னாபிஷேகஞ் செய்து, வழிபடுவோர் ஒவ்வோரன்னத்
திற்கு ஒவ்வொருகற்பஞ் சிவலோகத்தில், ஆனந்தம் அநுப
விப்பர். கார்த்திகைமாசங் கார்த்திகை நக்ஷத்திரத்திலே,
சிவபெருமானை ஆராதித்து, தீபம் இடுவோர் சோதியுரு
வினராய், சுகம் அநுபவிப்பர். மார்கழிமாசத்திலே, தினந்
தோறும் வைகறையிலே, சிவபிரானைப் பூசிப்பவரும், திரு
வாதிரையில், நெய் அபிஷேகித்து, கலவைச் சாந்தணிபவ
ரும் மலங்கள் நீங்கி அருட்டுறையில் மூழ்குவர். தைமாச
த்திலே, சிவபிரானை அசுவவாகனத்தில், எழுந்தருளிவரத்
தரிசிப்போரும், பூசநக்ஷத்திரத்திலே, பூஜிப்பவரும் நற்
கதி பெறுவர். மாசிமாசம் மகநக்ஷத்திரத்திலும், சிவநிசி

யிலுஞ் சிவபிரானைப் பூசிப்பவர் எல்லாப் போகங்களையும் அநுபவிப்பர். பங்குனிமாசம் உத்திர நக்ஷத்திரத்திலே, பரசிவன் கொண்டருளும் மகோற்சவத்தைத் தரிசிப்போர் முத்தி அடைவர். வருடப்பிறப்பு, மாசப்பிறப்பு, உத்தராயணம், தக்ஷிணாயனம், அமாவாசியை, சதுர்த்தசி, திரயோதசி, அஷ்டமி, சோமவாரம் இவைகளிலே, சிவபிரானைப்பூசிப்பவர் அருளிற் கலப்பர். இத்தினங்களிற் பூசியாதவரும், பங்குனி யுற்சவத்திலே, பணிந்து தரிசித்தவர் அப்பயன் பெறுவர். கோமுநிவர் முதலாயினோர் நடாத்திய காலமுதல் இதுகாறும் பங்குனித் திருவிழாவைச் சேவித்து முத்தியடைந்தவர் அளவில்லாதவர். பட்டிநாதர் எழுந்தருளும் இரதத்திற் பூட்டிய வடங்களைத் தேவர்கள் மாறுடவடிவங் கொண்டு, இருபுறமும் இழுப்பாராயின் அவ்வுற்சவ மகிமையை யாவர் உரைப்பவர். இப்பேரூர்ப்புராணத்தை விதிப்படி பூஜிப்பவரும், படிப்பவரும், கேட்பவரும், பொருளாராய்ச்சி செய்பவரும், பிறர்க்குப் பிரசங்கிப்பவரும் சிவலோகஞ் சேர்ந்து, பேரானந்தம் அநுபவிப்பர். இப்புராணத்தைப் படிப்பவர்க்கு அன்னம், பொருள், அசுவம், யானை, சிவிகை முதலியவற்றைக் கொடுப்போர் இம்மையிற் செல்வமுற்று இறுதியிற் சிவலோகஞ் சேர்வர். இச்சிவபுராணத்துக்குச் சிறப்புச் செய்பவர் பட்டீசருக்குச் சிறப்புச்செய்த பயனைப்பெறுவர்.

திருச்சிற்றம்பலம்.

—o—

மதுராபுரிவாசியாகிய

இ. இராமசுவாமிப்பிள்ளை என்று வழங்குகின்ற

ஞானசம்பந்தப்பிள்ளை செய்த

பேரூர்ப்புராணச்சுருக்கவசனம்

முற்றியது.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

## பிழை திருத்தம்.

பேரூர்ப்புராணச் சுருக்கவசனம் ௨௩-ம் பக்கம் ௧௮-ம் வரி.

அநிந்திதையாரும், கமலினியாருமாகி என்பவற்றை கமலினியாரும், அநிந்திதையாருமாகி எனக்கொள்க.

பேரூர்ப்புராணச்செய்யுளில்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௦௬ | ௧௨ | ௪ | சண்டி | தண்டி |
| ,, | ௧௪ | ௩ | சண்டி | தண்டி |
| ௨௫௮ | ௬ | ௩௧ | முகினி | முகிழி |